# தருமபுரி வரலாறும்

# பிரகலாத சரித்திரமும்



ச. கிருஷ்ணமூர்த்தி எம்.ஏ.

# தருமபுரி வரலாறும்

## பிரகலாத சரித்திரமும்

ஆசிரியர்

ச. கிருஷ்ணமூர்த்தி

எம்.ஏ., (த), எம்.ஏ., (வ), பி.எட்.,



வெளியீடு

தகடூர் மாவட்ட வரலாற்றுப் பேரவை

பாப்பாரப் பட்டி 636 809

முதற்பதிப்பு : மார்ச், 1989


விற்பனை உரிமை

தகடூர் மாவட்ட வரலாற்றுப் பேரவை,
பாப்பாரப்பட்டி 636809.
தகடூர் மாவட்டம்.

விலை ரூ. 30

---

அச்சிட்டோர்
அமுதன் அச்சகம் 66, பெரியார் தெரு
எம் ஜி ஆர் நகர் சென்னை-600 078.

தருமபுரி மாவட்ட ஆட்சித் தலைவரும்
மாவட்ட வளர்ச்சிக் கழகத் தலைவருமாகிய
திரு. ஆர். இரத்தினசாமி, இ. ஆ. ப., அவர்களின்

# வாழ்த்துரை

சங்க காலத்தில் வாழ்ந்த வள்ளல்களில் அதியமான் நெடுமான் அஞ்சி ஒருவனாவான். அவ்வையார் என்ற தமிழ் மூதாட்டி நீண்டநாள் வாழ்வதற்கு அரிய நெல்லிக் கனியை அவன் வழங்கி உள்ளான்: அந்த அதியமான் வாழ்ந்த ஊர் தகடூராகும். அந்தத் தகடூர் இன்று தருமபுரி என வழங்கப்படுகிறது.

அதியமான் மரபைச் சங்க காலத்தில் மட்டுமன்றி, பிற்காலத்திலும் காண்கின்றோம். மாமன்னன் அசோகன் குறிப்பிடும் சத்யபுத்திரர் அதியமான் மரபினரேயாவர்.

அதியமான் மரபினர் மட்டுமன்றிப் பல்வேறு மரபைச் சேர்ந்தவர்கள் தருமபுரியில் இருந்து அரசாண்டுள்ளார்கள். அவர்களுடைய வரலாற்றைக் கல்வெட்டு ஆதாரங்களுடன், தொல்பொருள் ஆய்வுத் துறையைச் சேர்ந்த தருமபுரி மாவட்டத் தொல்பொருள் அதிகாரி திரு. ச. கிருஷ்ணமூர்த்தி, ''தருமபுரி வரலாறும் பிரகலாத சரித்திரமும்'' என்ற இந் நூலை விரிவாக எழுதி உள்ளார். தருமபுரி வரலாற்றுடன் கோட்டைக் கோயிலின் கலை நுட்பங்களையும் ஆசிரியர் நன்கு விளக்கி உள்ளார்.

தற்போதுள்ள கோயில்கள் மட்டுமன்றி, அழிந்து போன கோயில்களையும் நூலாசிரியர் குறிப்பிட்டுள்ளார். கோச்செங் கண்ணீஸ்வரர் கோயில் இன்றில்லாவிடினும், அக்கோயில் குறித்த கல்வெட்டு இந் நூலில் இடம் பெறுகிறது.

தவிர, தருமபுரியில் நடிக்கப் பெற்ற ''பிரகலாத சரித்திரம்'' என்ற நாடகத்தின் ஓலைச் சுவடியைத் தொல்பொருள் ஆய்வுத்துறை அருங்காட்சியகத்திற்காகப் பெற்றதுடன், தாமே நகல் செய்து, தேவையான முன்னுரை, குறிப்புகளுடன் நூலாகப் பதிப்பித்துள்ளார். இந்த நாடகம், நாடகப் பிரியர்களுக்குப் பயன்படும்.

நூல் அச்சில் வரத் தருமபுரி மாவட்ட வளர்ச்சிக் கழகம் உருபா 5000 நிதி உதவி புரிந்துள்ளது. பொது மக்களும் உதவியுள்ளனர்.

நூலினைப் பாமரமக்களும் புரிந்து கொள்ளும் வகையில் எளிமையாக எழுதியுள்ள நூலாசிரியர் ச. கிருஷ்ணமூர்த்தியைப் பாராட்டுகிறேன். வரலாற்றுத் தொடர்பான நூல்களையும் அச்சில் வராத ஓலைச் சுவடியில் உள்ள இலக்கியங்களையும் இவ் வாசிரியர், மேலும் மேலும் எழுதி வெளியிட வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். தமிழ்கூறு நல்லுலகில் வாழும் பொதுமக்கள், இந்த நூலை வாங்கிப் பயன் பெறுமாறு கேட்டுக் கொள்வதுடன் நூலாசிரியரையும் வாழ்த்துகிறேன்.

தருமபுரி
21-3-89.

ஆர். இரத்தினசாமி

தமிழ்நாடு தொல்பொருள் ஆய்வுத்துறை இயக்குநர்
திரு. நடன. காசிநாதன் அவர்களின்

# அணிந்துரை

தமிழகத்தின் பண்பாடு, நாகரிகம், கலைச் சிறப்பு சமுதாய மேன்மை ஆகியவைகளைப் பற்றி நாம் அறிந்து கொள்ள வேண்டுமென்றால், பண்டைய இலக்கியங் களையும் கல்வெட்டுகளையும் படித்து உணர்தல் வேண்டும். சென்ற நூற்றாண்டு வரை ஒரு சிலரே பண்டைய இலக்கியங்களிலிருந்தும், கல்வெட்டுகளிலி ருந்தும், பழஞ் சுவடிகளிலிருந்தும் தங்கள் ஆர்வத்தைக் காட்டிச் சில பல இலக்கியங்களையும் வரலாற்றுக்குத் தேவையான புதுச் செய்திகளையும் கண்டு பிடித்து வெளியிட்டு வந்தனர். அவைகளின் அளப்பரிய பயனைக் கண்டுணர்ந்த தமிழ் நாட்டு இலக்கியம் மற்றும் வரலாற்று ஆர்வலர்கள், பழஞ்சுவடிகளை மேலும் சேகரித்துப் பதிப்பித்தும் கல்வெட்டுகளைப் படியெடுத்துப் பதிப்பித்தும் தங்களது வேட்கையைப் புலப்படுத்திக் கொண்டனர். இன்றைய தினம் தமிழகத் தில் சுமார் அறுபதாயிரம் கல்வெட்டுகள் படியெடுக்கப் பட்டிருக்கின்றன. பல அரிய புத்திலக்கியங்கள் பதிப் பிக்கப் பெற்றுள்ளன. இருப்பினும் தமிழகத்தில் இன்னும் வெளி வராத கல்வெட்டுகளும் சுவடிகளும் மிகுதியாக உள்ளன. அவை யாவும் தமிழகத்தின் வரலாற்றை அறியவும் பண்பாட்டைத் தெரிந்து கொள்ளவும் பயன்படும்.

அவ் வகையில் ஒரு சிறு ஒளிக் கீற்றாக உதயமாகி இருப்பதுதான் நண்பர் திரு. ச. கிருஷ்ணமூர்த்தி அவர்களின் 'தருமபுரி வரலாறும் பிரகலாத சரித்திரமும்' ஆகும்.

இந் நூலாசிரியர், தருமபுரி வர்லாற்றைத் தொல்பழங் காலம் முதல் தற்காலம் வரை நன்கு ஆய்ந்து முடித்திருக்கிறார். தொல்பழங் காலத்தில் தகடூர் எந்த அளவு வரலாற்றுச் சிறப்பைப் பெற்றுத் திகழ்ந்துள்ளது என்பதை ஆதார்ரங்களுடன் விளக்கி உள்ளார். குறிப்பாக, மகாராஜக்கடை ஊர் ஓவியத்தையும், வண்ணத்தில் எழுதப்பட்ட பிராமிக் கல்வெட்டையும் கண்டு பிடித்த இவ்வாசிரியர் அவை குறித்தும் இந் நூலில் சிறப்பாக விளக்கி உள்ளார்.

தகடூரை யாண்ட அதியர்களையும் அவர்களைப் பற்றிய சங்கப் பாடல்களையும் ஆங்காங்கே மேற்கோள் காட்டிச் சென்றுள்ளார். சங்க காலத்தை யடுத்து, தகடூர் பகுதியை ஆண்ட மன்னர்களைக் குறிப்பிட்டு, அவர்களுக்கும் தகடூருக்கும் உள்ள தொடர்பை நன்கு தெளிவுபடுத்தி உள்ளார்.

மேலும், விஜயநகர மன்னர்கள், நாய்க்க மன்னர்கள் காலத்தில் தருமபுரி எந்த அளவு புகழ் பெற்றிருந்தது என்பதையும் அவர் குறிப்பிடத் தவறவில்லை. எல்லாவற்றிற்கும் மேலாகத் தகடூரைப் பற்றி அறிந்து கொள்ள, நமக்குத் துணையாகவுள்ள 'தகடூர் யாத்திரை' யையும் அதியர்களுடன் தொடர்புடைய சங்கப் பாடல்களையும் பின்னிணைப்பாக இணைத்துள்ளமை பாராட்டத் தக்கதாகும்.

நூலின் இரண்டாம் பகுதியாகப் பிரகலாத சரித்திரம் என்னும் நாடகத்தைப் பதிப்பித்திருக்கிறார். பழஞ்

அடிகளைப் பதிப்பித்த இலக்கிய வல்லுநர்களின் பட்டியலில் தம்மையும் இணைத்துக் கொள்கிறார் இந் நூலாசிரியர்.

மொத்தத்தில் இந் நூல், அவரது முதல் முயற்சியில் முகிழ்த்த முத்தாகும். தகடூரின் வரலாற்றை மேலும் முயற்சியெடுத்து விரிவான முறையில் நூல் எழுதி இருக்கலாம். அந்த முயற்சி அடுத்து வரும் பதிப்பில் மேற்கொள்வார் என்று நாம் எதிர்பார்ப்போம்.

இந் நூலினைப் போன்று, தமிழகத்தில் ஒவ்வொரு பகுதியிலும் ஒவ்வொரு நூல் வெளிவருமாயின், அந்தந்தப் பகுதியிலே வாழும் மக்கள தங்கள் தங்கள் பண்டைய பாரம்பரியத்தை அறிந்து, பெருமையும் பெருமிதமும் கொள்வதற்குத் துணையாக அமையும்.

இம் முயற்சியில் இளைஞர்கள் ஈடுபட வேண்டும் என்பது என் பேரவா.

முதல் முயற்சியிலேயே தனக்கென ஒரு முத்திரையைப் பதித்துக் கொண்டுள்ள நண்பர் திரு. ச. கிருஷ்ணமூர்த்தி எம். ஏ., அவர்கள், மேலும் பல நூல்கள் எழுத எனது உளங் கனிந்த பாராட்டுகள்.

சென்னை
7-3-89.

நடன. காசிநாதன்



# என்னுரை

வரலாற்று நூலில் இலக்கியமும் இலக்கிய நூலில் வரலாறும் அமையும்படி ஆய்வாளர் பலர் நூல்கள் எழுதி உள்ளனர். அவ்வாறே ஆய்வாளர்க்காகச் சில நூல்களும் பொது மக்களுக்காகச் சில நூல்களும் ஆய்வாளர் சிலர் எழுதி உள்ளனர். வரலாற்றையும் இலக்கியத்தையும் சம அளவில் எழுத முனைந்து, ''தருமபுரி வரலாறும் பிரகலாத சரித்திரமும்'' என்ற நூலைப் படைக்கிறேன்.

ஆய்வாளர் ஆய்வு செய்ய வசதியாகக் கல்வெட்டு மூலங்களையும், ஓலைச் சுவடிச் சாசனங்களையும் இணைத்துள்ளேன். கூடிய வரை அடிக் குறிப்புகள் மூலம் பல செய்திகளைக் குறிப்பிட்டுள்ளேன். தகடூர் (தருமபுரி) மாவட்ட ஆசிரியர்களுக்காகவும் ஆய்வாளர்களுக்காகவும் தகடூர் யாத்திரையையும், அதியமான்களுடன் தொடர்புடைய சங்கப் பாடல்களையும் இணைத்துள்ளேன். தேவையான நிழற் படங்களையும் சேர்த்துள்ளேன்.

தருமபுரி மாவட்டத்தில் பல கல்வெட்டுகளையும், ஓலைச் சுவடிகளையும், பெருங்கற்கால ஓவியங்களையும், சிற்பங்களையும் யான் கண்டுபிடித்துள்ளேன். அவை அவ்வப்போது நாளிதழ்களில் செய்திகளாகவும் கட்டுரைகளாகவும் வெளிவந்துள்ளன.

நாளிதழ்களில் வந்தவற்றைத் தொகுத்து, நூலாக வெளியிடுமாறு என் துணைவியார் வேண்டிக் கொண்டார். மாவட்டத்தின் வரலாற்றை முழுவதுமாகத் தொகுக்கப் புகுந்தால் நூல் விரியும் என்பதால், தருமபுரி நகரை மட்டும் எழுதுவது என்று முனைந்தேன். இந்நிலையில், 'பிரகலாத சரித்திரம்' என்ற நாடகம் (ஓலைச் சுவடியாக) என் பார்வைக்குக் கிட்டியது. தருமபுரி அருங்

காட்சியகத்திற்காக மேற்படி ஓலைச் சுவடியைச் சேகரித்து நான், பின்னர் நகல் செய்தேன். சுவடி வழங்கிய அமரர் காவேரி பூசாரி நூலாக வெளியிடுமாறு வேண்டினார்.

பிரகலாத சரித்திரம் என்றவுடன் 25 ஆண்டுகளுக்கு முன்னரே இந் நாடகத்தின் மீது எனக்கிருந்த ஈடுபாட்டை இவண் குறிப்பிட வேண்டும்.

சென்னை இராயப்பேட்டை, பிள்ளையார் கோவில் தெருவில் என் குடும்பம் இருந்தபோது, யான் எட்டாம் வகுப்புப் படித்துக் கொண்டிருந்தேன். என் உறவினர் பிரகலாத சரித்திரத்தை நாடகமாக நடத்த வேண்டி மூன்று மாதம் ஒத்திகை நடத்தி, பின்னர் அரங்கேற்றினர். ஒத்திகை நடந்தபோது தினமும் எதிரில் உட்கார்ந்து பார்த்ததால், பல பாடல்கள் என் மனத்தில் பதிந்தன. அப் பாடல்களில் ஒன்று கூடத் தற்போது கிடைத்துள்ள நாடகத்தில் இல்லை. சான்றாக,

**ஏண்டா மறுத்துரைப்பதோ தந்தை பெயர் சொல்**
**தாண்டா பிள்ளை பிறப்பதோ?**

என்று லீலாவதி மகனிடம் பாடும்போது கண்டிப்பும் வேதனையும் வெளிப்படும்.

**இனியேனும் எனது பெயர் இரணிய நமவென**
**உரசி மனமகிழ்வாய்**

என்று இதமாகக் கூறும் இரணியன், பின்பு

**சிற்றப்பனைக் கொன்ற குற்றப் படுபாவி — நீ**
**சேவித்திட லாகுமோ?**

எனக் கடுமையாகக் கூறுவான். இவை போன்ற பாடல்கள் தற்போது கிடைத்துள்ள நாடகத்தில் இல்லை. இதனை வெளியிட யான் விரும்பினேன்.

அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகத்தில் உள்ள பிரகலாத சரித்திரம் என்ற சுவடியுடனும் அச்சில் வந்துள்ள நூலுடனும் தற்போது கிடைத்த நாடகம் வேறுபாடு இல்லாமல் காணப்பட்டது.

தஞ்சை மாவட்டத்தில் மெலட்டூர், சாலியமங்கலம் போன்ற ஊர்களில் பிரகலாத சரித்திரம் ஆண்டு தோறும் நாடகமாக நடைபெறுகிறது. தஞ்சையில் பணியாற்றும்போது யானும் பல முறை கண்டு மகிழ்ந் திருக்கிறேன். அது தெலுங்கில் நடைபெறும்.

தருமபுரி மாவட்டத்தில் பல நாடகக் குழுக்கள் இருப் பினும், எக் குழுவும் பிரகலாத சரித்திரத்தை நாடக மாக நடத்துவதாக எனக்குத் தெரியவில்லை. எனினும் 60 ஆண்டுகளுக்கு முன்பு இந்த நாடகம் பழைய தரும புரியில் நடத்தப் பெற்றுள்ளது. இனி வருங்காலத்தில் பிரகலாத நாடகம் நடத்த யாராவது முன் வந்தால் இந் நூல் பயன்படும்.

1937இல் 'தருமபுரி வரலாறு' என்ற சிறிய நூலைக் கோபால் செட்டியார் எழுதி உள்ளார். தமிழ்நாடு அரசு தொல் பொருள் ஆய்வுத்துறை, 'தகடூர்' என்ற நாலணா விலையுள்ள சிறிய நூலை வெளியிட்டுள்ளது. தகடூர் மாவட்ட வரலாற்றுப் பேரவை, மலர் ஒன்றை வெளி யிட்டுள்ளது. கொங்கு ஆய்வகமும் தருமபுரியில் கருத் தரங்கு ஒன்றை நடத்தியுள்ளது. டாக்டர் இரா. நாக சாமி, திரு. குழந்தைவேலு (கல்வெட்டாய்வாளர்), திரு. நடன காசிநாதன் (இயக்குநர், தொல்பொருள் ஆய்வுத்துறை), திரு. சாந்தலிங்கம் (தொல் பொருள் அலு வலர்), ஆசிரியர் திரு. துரைசாமி, திரு. புது பே. வெங் கட்ராமன் ஆகியோர் எழுதிய கட்டுரைகள் பல்வேறு நூல்களில் இடம் பெற்றுள்ளன. மத்திய அரசு தொல் லியல்துறை நரசிம்மையா, கல்வெட்டாய்வாளர் திரு. சம்பத் ஆகியோர் தருமபுரியுடன் தொடர்புடைய தொல் பொருள் பற்றி ஆங்கிலத்தில் எழுதி உள்ளனர்.

குலசேகரன் என்ற அன்பர், தருமபுரி குறித்தும் அதியமான் குறித்தும் நூல் எழுதி இருப்பதாகக் குறிப்பிட்டார். ஆயினும் யான் அந் நூலை இதுவரை பார்வையிடவில்லை. தவிர லியோபான், ரிச்சர்ட்ஸ் ஆகியோர் சேலம் மாவட்ட விவரநூலில் தருமபுரி குறித்து எழுதி உள்ளனர்

ஆயினும் கல்வெட்டு, சிற்பம், சாசனம் இவற்றின் அடிப்படையில் ஒரு நூலாக வெளிவருவது, தருமபுரி நகரைப் பொறுத்தவரை இதுவே முதலாவது எனலாம்.

1965 ஆம் ஆண்டில் சேலத்தில் இருந்து தரும்புரி தனி மாவட்டமாகப் பிரிந்தது. மாவட்டத்தின் வளர்ச்சியை மனத்தில் கொண்டு, தருமபுரி மாவட்ட வளர்ச்சிக் கழகம் உருவாக்கப்பட்டது. நூல் அச்சேறத் தருமபுரி மாவட்ட வளர்ச்சிக் கழகத் தலைவரும், மேலாண்மை இயக்குநரும் ரூ 5000/ பொருளுதவி புரிந்தனர். மேலாண்மை இயக்குநர் திரு. சண்முகம் அவர்கள் நூலிற்குத் தொகை நல்கியதுடன் அரிய ஆலோசனையையும் வழங்கியமைக்கு நன்றி

தருமபுரியில் அருங்காட்சிபகம் ஏற்படக் காரண கர்த்தாவாக இருந்த திரு. சிவசுப்பிரமணியம் இ. ஆ. ப. அவர்களுக்கும், அருங்காட்சியகத்தை ஏற்படுத்தித் தொல்லியல் துறைக்கு ஒப்படைத்த வரலாற்றுப் பேரவைக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். பேரவையின் சீரிய தொண்டுக்கு நன்றி தெரிவிக்கும்முகத்தான், இந் நூலைப் பேரவை வெளியீடாக வெளியிடுவதில் மகிழ்ச்சி கொள்கிறேன். குறிப்பாக, திரு. மாணிக்கம் (செயலர்) அவர்கள் நூல் வெளிவரப் பெரிதும் முயற்சி மேற்கொண்டார்கள். தருமபுரி மாவட்ட வளர்ச்சிக் கழகத்தின் ஆலோசனைக்கு இணங்கப் பொது மக்களிடமிருந்தும் பேரவை நன்கொடை திரட்டியது. தருமபுரியில் மட்டுமன்றிப் பல ஊர்களைச் சேர்ந்தவர்களும் மனமுவந்து பொருளுதவி புரிந்துள்ளார்கள். அவர்கள் எல்லோருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

நூல் வெளியிட அனுமதி வழங்கிய முன்னாள் இயக்குநர் டாக்டர். இரா. நாகசாமி அவர்களுக்கும் கூடுதல் இயக்குநர் திரு. பக்கிரிசாமி அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

நூலிற்குத் தொடக்கவுரை நல்கிய தகடூர் மாவட்ட வரலாற்றுப் பேரவைக்கும், வாழ்த்துரை வழங்கிய மாவட்ட ஆட்சித் தலைவர் திரு. இரா. இரத்தினசாமி இ. ஆ. ப. அவர்களுக்கும் என் மனமுவந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலை அச்சிட்ட சேகர் பதிப்பக உரிமையாளர் வெள்ளையாம்பட்டு சுந்தரம் சிறப்பாக அச்சிட்டுள்ளார். அவருக்கு என் நன்றி. அச்சுக்கோப்பில் ஈடுபட்ட செல்வி செந்தாமரை, திருமதி சுந்தரி, செல்வி உமா மற்றுமுள்ள வர்களுக்கும் என் நன்றி. நூல் விரைவில் முடியப் பலவகை யிலும் ஆலோசனை வழங்கிய கொவளைமுனிசாமி அவர் களுச்கும் அருர் நண்பர் குலோத்துங்கனுக்கும் வரலாற்றுப் பேரவை செயலருக்கும் இதயங்கனிந்த நன்றியைத் தெரி வித்துக் கொள்கிறேன்.

ஆய்வுக்கட்டுரை பல எழுதி இருப்பினும் இது எனக்கு முதல் தனிநூல். ஆகவே தவறுகள் இருப்பின் வாசகர்கள் சுட்டிக்காட்டுமாறு வேண்டுகிறேன். பிழை திருத்தம் செய்த கவிஞர் அரங்க சீனிவாசன், அரக்கோணம் கவிஞர் நலங்கிள்ளி முதலியோர்க்கு என் நன்றி.

அரி ஓம் நமோ நாராயண

தருமபுரி
22.3.89

அன்பன்
ச. கிருஷ்ணமூர்த்தி

## தகடூர் மாவட்ட வரலாற்றுப் பேரவையின்

# பதிப்புரை

தகடூர் [தருமபுரி] மாவட்டம் பண்டைய வரலாற்றுக் கருவூலங்களைத் தன்னகத்தே கொண்டது. மாவட்டத்தின் பல பகுதிகளில் கல்வெட்டுகள், புதிய கற்கால மக்கள் வாழ்ந்த பகுதிகள், போரில் இறந்தோர்க்கான வீரக் கற்கள், பல காலங்களில் பல மரபு மன்னர்களால் கட்டப்பட்ட கோயில்கள், பல்வேறு வகையான நாணயங்கள், ஓலைச் சுவடிகள் ஆகியன இம்மாவட்டத்திற்குப் பெருமை சேர்க்கின்றன. வரலாற்று ஆர்வத்துடன் அவற்றைத் திரட்டிச் செய்திகளை வெளியிடவேண்டும் என்ற நோக்கத்துடன், **தகடூர் மாவட்ட வரலாற்றுப் பேரவை** என்ற அமைப்பை உருவாக்கினோம். முதல் கட்டமாக, மாவட்டத்தில் அழியும் நிலையில் பாதுகாப்பின்றி இருந்த வரலாற்றுச் சின்னங்களைத் திரட்டி, தகடூரில் அருங்காட்சியகம் ஒன்றை ஏற்படுத்தினோம். அக் காட்சியகம் அமைய ஊக்கம் கொடுத்து ஆலோசனை நல்கிய மாவட்ட ஆட்சித் தலைவர் திருமிகு எஸ். சிவசுப்பிரமணியம் இ.ஆ.ப. அவர்களுக்கும் தகடூர் சட்டமன்ற உறுப்பினராக இருந்த அமரர் திருமிகு பி.கே.சி. முத்துசாமி அவர்களுக்கும் பேரவை பெரிதும் கடமைப்பட்டுள்ளது.

பழைய தருமபுரி திரு. காவேரி பூசாரி அவர்களிடமிருந்து **பிரகலாதன் சரித்திரம்** என்னும் ஓலைச்சுவடி கிடைத்தது. இப்பகுதியில் இந்நாடகம் நடிக்கப்பட்டுள்ளது. இவ்வளவு காலம் சுவடியைப் பாதுகாத்து வைத்திருந்து தருமபுரி அருங்காட்சியகத்திற்கு வழங்கிய அவர் போற்றுதலுக்குரியவராவார். இந் நாடகப் பாடல்களை அவர்

ஏற்ற இசையில் பாடியும் காட்டினார். இந் நாடகம் குலவேள் பிள்ளை மகன் காமி என்பவரால் பாடப்பட்டதாகும். பிரகலாத சரித்திரம் நாட்டு மக்களால் அறியப்பட்டதாயினும், இது இசை நாடக வடிவில் உள்ளது. நாடகத்தின் ஒவ்வொரு காட்சியும் குறிப்பிட்ட இசையில் பாடவேண்டும் என ஐம்பதுக்கும் மேற்பட்ட தாள வகைகள் குறிப்பிடப்பட்டுள்ளன. இஃது தற்கால நாடகக் கலைஞர்களுக்குப் பெரிதும் பயன்படும்.

இந் நூலினை முழுவதுமாகப் படித்துப் படியெடுத்துச் செப்பம் செய்தவர் திருவாளர் ச. கிருட்டினமூர்த்தி அவர்கள் ஆவார். அவர் சிறந்த தொல்லியல் அறிஞர். ஆயிரத்துக்கு மேற்பட்ட சுவடிகளைச் சேகரித்தவர்; இம் மாவட்டத்தில் பல தொல்லியல் தடயங்களைச் சேகரித்தவர். இந் நூல் அவருடைய நுண்மாண் நுழைபுலத்தை எடுத்துக் காட்டுவதாக அமைந்துள்ளது. பிரகலாத சரித்திரத்தைப் படிக்குமுன்பு, தகடூர் நகரின் பண்டைய வரலாற்றினைச் சுருங்கச் சொல்லி விளங்க வைத்துள்ளார். அவருக்கு இம் மாவட்ட மக்கள் என்றும் கடப்பாடு உடையவர்களாவர்.

இந் நூலை வெளியிட நிதிவசதியின்றித் தவித்தபோது வான் மழையென மனமுவந்து பெரும்பகுதிச் செலவினை ஏற்றுக் கொண்ட தருமபுரி மாவட்ட வளர்ச்சிக் கழகத்திற்கு எங்கள் மனமுவந்த நன்றி. வரலாற்றில் ஆர்வம் கொண்டு இந்நூலை வெளியிட நிதியுதவி செய்த அன்பர்களுக்கும் வரலாற்றுப் பேரவை நண்பர்களுக்கும் நன்றி.

இந் நூலினைச் செம்மையாக அச்சிட்டுக் கொடுத்த சென்னை சேகர் பதிப்பகத்தார்க்கும் எங்கள் நன்றி. இந் நூலுக்கு அணிந்துரை வழங்கிய தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை இயக்குநர் திருமிகு நடன. காசி

நாதன் அவர்களுக்கும் அணிந்துரை வழங்கிச் சிறப்பித்த தகடூர் மாவட்ட ஆட்சித் தலைவர் திருமிகு இரா. இரத்தினசாமி இ. ஆ. ப. அவர்களுக்கும் எங்கள் நன்றியை உரித்தாக்குகிறோம்.

இந் நூல் வெளிவரப் பல்லாற்றானும் எங்களுக்கு ஆலோசனை நல்கி ஊக்குவித்த நண்பர் திரு. பீ. குலோத் துங்கன் அவர்களுக்குப் எங்கள் நன்றி. இந் நூல் இன்னும் பல வெளியீடுகளுக்கு முன்னோடியாகும்.

இந் நூலினைத் தமிழ் மக்கள் குறிப்பாக, தருமபுரி மாவட்டப் பொதுமக்கள் படித்து இன்னும் பல வெளியீடு கள் வெளிவர எங்களை ஊக்குவிப்பார்கள் என நம்பு கின்றோம்.

இங்ஙனம்
புலவர் மு. தேவராயன்
தலைவர்

புலவர் செ. கோவிந்தராசு
பொருளர்

புலவர் மு. மாணிக்கம்
செயலர்.

தகடூர் மாவட்ட
வரலாற்றுப்
பேரவை,
பாப்பாரப்பட்டி.
21.3.1989.

# பொருளடக்கம்



'சதியபுதோ அதியன் நெடுமான் அஞ்சி ஈத்த பாளி'

சங்க காலத்தில் தகடூரை ஆண்ட அதியமான் நெடுமான் அஞ்சி வெட்டிய தமிழி கல்வெட்டு.

இடம் : ஜம்பை, திருக்கோவிலூர் வட்டம். (தெ. ஆ. மாவட்டம்)



அச்சு குத்தப்பெற்ற மௌரியர் காசுகள்.
(கி. மு. 3—1 நூற்றாண்டு) தருமபுரி அருங்காட்சியகம்



ஐந்து காலுடைய ஜாடி. குருவிநாயனப் பள்ளி. கிருஷ்ணகிரி வட்டம்.

இ

ஓவிய ஓலைச் சுவடி (தருமபுரி). யாளி, அன்னம்,



ஓவியம் வரையப்பெறற ஓலைச சுவடி
தேவதைகள், மன்னர், கோமாளி





அதியமான் பெருவழி மைல் கல்
கி. பி. 11 ஆம் நூற்றாண்டு.

# தருமபுரியின் வரலாறு

தமிழ் நாட்டில் வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த நகரங்களுள் தருமபுரியும் ஒன்றாகும். கி.பி. 17ஆம் நூற்றாண்டு வரை தருமபுரி **தகடூர்** என்றே அழைக்கப்பட்டு வந்தது.

சங்க காலத்தில் பாடப்பட்ட ஒரு நூலுக்குத் **தகடூர் யாத்திரை** என்ற பெயரே உள்ளது. தகடூரின் சிறப்பைப் புறநானூறு போற்றுகிறது. சங்க காலத்திற்குப் பின்னர் தகடூர் குறித்துப் பல கல்வெட்டுகளில் பார்க்கிறோம்.

தகடூர் என்ற பெயர் நாட்டின் பெயராகவும் ஊரின் பெயராகவும் இருந்துள்ளது. கல்வெட்டுகளில் 'தகடூர் நாட்டுத் தகடூர்' என்ற வரிகளைக் காண முடியும். நாட்டின் பெயரும், தலை நகரத்தின் பெயரும் தகடூர் என்றே வழங்கப்பட்டது குறிப்பிடத் தக்கதாகும்.[1]

## எல்லை

தகடூர் நாட்டின் எல்லை காலத்திற்குக் காலம் மாறுபட்டிருந்தாலும் பொதுவாகக் கொங்கு நாட்டின் வடக்கிலும், தொண்டை நாட்டின் மேற்கிலும், வடுகர் நாட்டின் தெற்கிலும், எருமை நாட்டின் கிழக்கிலும் சங்க காலத்தில் இருந்தது எனலாம்.[2] தகடூர் ஊரில் அதியமான்

கோட்டை, அதகப்பாடி போன்ற ஊர்கள் அடங்கி யிருந்தன. பிற்காலத்தில் தகடூர் ஊரின் எல்லையும் மாறுகின்றன.

தருமபுரி மாவட்டத்தின் பெரும் பகுதியும், வட ஆர்க் காடு மாவட்டத்தின் ஒரு பகுதியும், சேலம் மாவட்டத் தின் ஒரு பகுதியும், ஆந்திர மாநிலத்தின் மிகச் சிறிய பகுதியும் கொண்டதாகத் தகடூர் மாறுகிறது. தகடூர் ஊரின் எல்லையும் சுருங்குகிறது. அதியமான் கோட்டை, அதகப்பாடி போன்ற ஊர்கள் தனி ஊர்களாக மாறு கின்றன. இன்று நாம் அழைக்கும் பழைய தருமபுரியே தகடூராக அன்று விளங்கியது எனலாம். எனினும் தகடூர் ஊரின் எல்லையைச் சரியாக வரையறுக்க இயலவில்லை.

மீண்டும், நொளம்பர் காலத்தில் நொளம்பபாடியின் ஒரு பகுதியாகத் தகடூர் நாடு மாறுகிறது[3]. பின்னர் சோழர் காலத்தில் நிகிரிலிச் சோழ மண்டலத்தில் ஒரு பகுதியாகத் தகடூர் நாடு அமைகிறது. சங்க காலத்திற்குப் பின்னர் தகடூரைக் கங்கர் ஆண்டதால் தகடூர்நாடு, **கங்க நாடு** என்றும் அழைக்கப்பட்டது. கங்கர்கள் முத்தரையர் என்றும் வழங்கப்பட்டுள்ளனர்.

இதன் காரணமாகக் கி.பி. 5 ஆம் நூற்றாண்டு முதற் கொண்டு நொளம்பர் காலம் வரை அதாவது, கி.பி. 10 ஆம் நூற்றாண்டு வரை தகடூர்நாடு என்ற பெயருடன் கங்க நாடு அழைக்கப்பட்டது.

பிற்காலச் சோழர் காலத்தில் "நிகிரிலிச் சோழ மண் டலத்து தகடூர் நாட்டுத் தகடூர்" என்று அழைக்கப் பட்டமை பார்க்கிறோம்.[4] நிகிரிலிச் சோழ மண்டலமும் முடிகொண்ட சோழமண்டலமாக மாறுகிறது. இறுதி யாக விஜயநகரப் பேரரசர் காலத்தில் 'சந்திரகிரி' ராஜ்

ஜியத்தில் தகடூர் நாடு வருகிறது. இக்காலத்திலும் 'தகடூர் நாட்டுத் தகடூர்' என்றே கல்வெட்டுகள் குறிப்பிடு கின்றன.

கி.பி. 17 ஆம் நூற்றாண்டளவில் தகடூர், தருமபுரி எனப் பெயர் மாற்றம் பெறுகிறது.[5] பின்னர் தகடூர் பெயர் மறைந்து தருமபுரியே நிலைத்துவிட்டது. தகடூர், தருமபுரி, மட்டுமின்றி வேறு பெயர்களும் இவ்வூருக் கிருந்துள்ளன. அவற்றை விரிவாகப் பின்னர் காண் போம். இனி, சங்க காலத் தகடூரைப் பார்ப்போம்.

# சங்க காலமும் தகடூரும்

சங்க காலத்தில் தருமபுரி, தகடூர் என வழங்கப் பட்டது. தகடூர் என்ற சொல்லுக்குப் பலர் பலவிதமாகப் பொருள் குறிப்பிடினும் பூவிதழ் என்ற சொல் பொருத்த மாக உள்ளது. தஞ்சை மாவட்டத்தில் தகட்டூர் என்ற பெயரில் ஓர் ஊர் உள்ளது. தகடூர் நாட்டைச் சங்க காலத்தில் அதியமான்கள் அல்லது சத்தியபுத்திரர்கள் அரசாண்டுள்ளார்கள். அதியமான்களை வேளிர் என்றும், வேற்று நாட்டிலிருந்து குடி பெயர்ந்தவர் என்றும் அறிஞர்கள் பலவாறு கூறுவார்கள். இம் மரபில் வந்த ஒருவனே தமிழ் நாட்டிற்குக் கரும்பை அறிமுகப் படுத்தியவன் எனப் புறநானூறு குறிப்பிடுகிறது.[6]

அதியமான்கள், பனம்பூ மாலையைச் சூடியவர்கள். சேரர்களும் பனம்பூ மாலையைச் சூடியவர்களேயாவர். திருமுடிக்காரி போலவே அதியமானும் மழவர்குடியைச் சேர்ந்தவனேயாவான். வரலாற்றாசிரியர்களும், சங்க நூற்களும், பிற்கால உரை நூற்களும் அதியமான்களைக் குறுநில மன்னர்களாகவே குறிப்பிடினும் உண்மையில் அதியமான்கள் பேரரசர்கள் என்றே துணியலாம். மாமன்னன் அசோகன், சேர, சோழ, பாண்டியரைக் குறிப் பிடும்போது சத்திய புத்திரரையும் குறிப்பிட்டுள்ளான்.[7] வேறு எந்தத் தமிழ் நாட்டுக் குறுநில மன்னனையும் அசோகன் குறிப்பிடவில்லை.

அதியமான்கள் ஆண்டது போல் வேறு குறு நில மன்னர்கள் பெருநிலப் பரப்பை ஆண்டதாகக் கூறமுடியாது. ஆகவே அதியமான் மரபினர் முடியுடைவேந்தராக இல்லாவிடினும் பேரரசர் என்றே நாம் குறிப்பிட வேண்டும்[8].

## அதியமான் மன்னர்கள்

சங்க இலக்கியங்கள் மூலம் கீழ்க்கண்ட அதியமான் மன்னர்களின் பெயர்களைக் காண்கிறோம்.

1. அதியமான் நெடுமிடல்
2. அதியமான் நெடுமான் அஞ்சி
3. அதியமான் பொகுட்டெழினி
4. அதியமான் அஞ்சி
5. எழினி

அஞ்சி, எழினி என்ற சொற்கள் பட்டப் பெயர்களாக இருந்திருக்கலாம்.[9] சேரர்கள் குட்டுவன், பொறையன் எனப் பெயர் வைத்துக் கொண்டமை நாமறிவோம்.

## அதியமான் நெடுமிடல்

சோழன் இளஞ்சேட்சென்னி, சேரன் நார்முடிச் சேரல், பாண்டியன் பசும்பூண் பாண்டியன் ஆகியோர் சம காலத்தவர் ஆவர். சேரனுக்கும் நெடுமிடலுக்கும் பகை இருந்துள்ளது. சேரனிடம் தோற்ற பின் பசும்பூண் பாண்டியனின் படைத் தலைவனாக நெடுமிடல் மாறுகிறான். காப்பியாற்றுக் காப்பியனார், நார்முடிச் சேரல் அதியமான் நெடுமிடலைப் போரில் சாய்த்ததாகப் பதிற்றுப்பத்தில் குறிப்பிடுகிறார்.[10]

## அதியமான் நெடுமான் அஞ்சி

கடையேழு வள்ளல்களில் ஒருவன் கிடைத்தற்கரிய நெல்லிக்கனி தமக்குக் கிடைத்தபோது தானும் உண்ணாமல், தன் துணைவியாருக்கும் தராமல், அருமை மகனுக்கும் வழங்காமல், தமிழ் மொழி மீது கொண்ட காதலால் அவ்வையாருக்கு ஈந்து அவரால்,

> " நீலமணிமிடற்றன்போல மன்னுக பெரும வாழ்நாள்"

என வாயார வாழ்த்துப்பா பெற்றவன்.

இவனை அவ்வையார் பல பாடல்களில் புகழ்ந்துள்ளார். இவன் பொருட்டுத் தொண்டைமானிடம் அரசியல் தூதும் சென்றுள்ளார். பரணர், பொன்முடியார், பெருங்குன்றூர்க்கிழார் போன்றோரும் இம் மன்னனைப் பாடியுள்ளனர். பெருஞ் சித்திரனார், மாமூலனார், நல்லூர் நத்தத்தனார் ஆகியோரும் இவனைப் போற்றி உள்ளனர்.

## அதியமானும் திருமுடிக்காரியும்

அதியமான் நெடுமான் அஞ்சிக்கும் திருக்கோயிலூர் திருமுடிக்காரிக்கும் பகைமை இருந்துள்ளது. அதியமான் திருக்கோயிலூர்வரை படையெடுத்துச் சென்று காரியைத் தோற்கடித்தான் என அவ்வையார் குறிப்பிடுவார்.

திருக்கோயிலூர் அருகில் ஜம்பை எனும் ஊரில் கிடைத்துள்ள பிராமி கல்வெட்டு அதியமான் நெடுமான் அஞ்சியினுடையதாகும்.[12] இக் கல்வெட்டும்

> " முரண்மிகு சிறப்பின் கோவலூர் நூறிநின்
> அரண்டு திகிரி யேந்திய தோளே "[13]

என்ற சங்கப் பாடலும் அதியமானின் வீரத்தைக் குறிப்பிடுகின்றது. போரில் தோற்ற காரி சேரனுடன் சேர்ந்து

கொள்கிறான். அதியமானின் நண்பனும் சேர மன்னனின் பகைவனுமான கொல்லிமலை ஓரி மீது படையெடுக்கிறான். ஓரியைக் கொன்று கொல்லிமலையைச் சேரனுக்கு வழங்குகிறான்.

## அதியமானும் சேரனும்

சேரன் செங்குட்டுவன் ஆட்சி புரிந்தபோது தகடூர் நாட்டின்மீது படையெடுக்கிறான். எதிர்த்துப் போரிடுவாரின்றித் திரும்புகிறான். போர்த் தந்திரம் கருதி நெடுமான் அஞ்சி போரிடாமல் இருந்தான் போலும். எனினும் பெருஞ்சேரல் இரும்பொறை மன்னனால் அதியமான் தோற்கடிக்கப் படுகிறான். இதனைச்

" தகடூர் எறிந்து நொச்சி தந் தெய்திய அருந்திறல்
ஒள்ளிசைப் பெருஞ்சேரல் இரும்பொறை "

எனப் பதிற்றுப் பத்து பதிகம் குறிப்பிடுகிறது.

நீர்கூரில் வென்றது மட்டுமின்றிச் சேரன் தகடூர் கோட்டையை அழிக்கத் தகடூர்வரை வருகிறான். அங்குப் போர் கடுமையாக நடைபெறுகிறது. தந்தை அதியமானைப் போல வீரம் செறிந்த எழினி போரில் பங்கு கொண்டு வீரமரணம் எய்துகிறான். தகடூர் கோட்டை தரை மட்டமாக்கப்படுகிறது. பின் தகடூர் சேர அரசாட்சியின்கீழ் வருகிறது. தகடூர் வந்து வெற்றி பெற்றதன் நினைவாக, " தகடூர் எறிந்த பெருஞ்சேரல் " எனும் அடைமொழியைச் சேரன் பெறுகிறான். தகடூர் அருகே இருந்த ஒரு மலை **சேர அரையன் மலை** ஆகிறது. அதுவே இன்று சேர்வராயன் மலை என வழங்கப் பெறுகிறது.

நெடுமான் அஞ்சி இறந்த பின் அவ்வையார் கண்ணீர் விட்டுப் பாடிய பாடல்கள் அஞ்சியின் புகழைப் பறை சாற்றுகின்றன. நடுகல்லாக அஞ்சி மாறிய பின்,

கொடுயர் பிறங்குமலை கெழீஇய
நாடுடன் கொடுப்பவும் கொள்ளா தோன்[16]

ஆகிய அஞ்சிக்குப் படையல் தந்தால் ஏற்பனோ? மாட்டான் என்று பாடுகிறார். புறநானூறு மட்டுமின்றி 'தகடூர் யாத்திரையும்' அதியமான் புகழைக் குறிப்பிடுகின்றது.

## எழினி

அதியமான் மகன் பொகுட்டெழினி தந்தையைப் போலவே வீரம் மிக்கவன். இவன் பிறந்தபோது அதியமான் போர்க் களத்தில் இருந்ததால் போர்க்கள உடையுடனே தம் மகனை வந்து பார்த்ததாக அவ்வையார் குறிப்பிடுவார். அதியமான் தகடூரை ஆண்டபோது தகடூர் அருகில் உள்ள குதிரை மலையில் இருந்து பொகுட்டெழினி அரசாண்டுள்ளான்.[17] சேரன் தகடூர் கோட்டையை முற்றுகையிட்டபோது எதிர்த்துப் போரிட்டு மாண்டுள்ளான். எழினிக்குப் பின்னர் சில காலம் தகடூர் நாடு மாற்றார் வசத்தில் இருந்தது.

எனினும் குறுநில மன்னர் என்ற அளவில் தகடூரிலும் நாமக்கல்லிலும் இம் மரபினர் பிற்காலத்தில் அரசாட்சி புரிந்துள்ளனர். இனி மழவர்கள் குறித்து சுருக்கமாகக் காண்போம்.

# மழவர்கள்

சங்க கால மக்கள் இனத்தவருள் மழவர் ஒரு பிரிவின ராவர். இவர்கள் தகடூர் உள்ளிட்ட பகுதிகளில் வாழ்ந் தார்கள். அதியமான்கள் இப் பிரிவினரேயாவார்கள். மலை சூழ்ந்த பகுதிகளில் வாழ்ந்தவர் ஆதலால் ''மலைவர்'' என வழங்கப்பட்டு, அவர்களே பின்னர் மழவராயினர் என்பர் சிலர். சிறந்த போர் மறவர்களாக இவர்கள் விளங்கியதால் மறவர்கள் என வழங்கப்பட்டுப் பின் மழவர்கள் ஆனார்கள் என்பர் வேறு சிலர். திரு. வீ. இராமமூர்த்தி, மாலத் தீவுகளில் வாழ்ந்த மக்கள் (மழைத்தீவு என முன்னர் வழங்கப்பட்டது) மழவர்களின் மூதாதையர் என்று கூறுகிறார்.[20] இந்த மழைத் தீவு மலவார் அல்லது மலபார் ஒட்டி இருந்துள்ளது. இம் மழைத்தீவு மக்களே கொங்கு நாட்டிலும் தகடூரிலும் குடி யேறியவர்கள் என்கிறார் அவர். மேலும், ''நீரக இருக்கை ஆழிசூட்டிய நின் முன்னோர்'' என்ற அவ்வை யாரின் பாடலைச் சான்றாகக் கொள்கிறார்.

ஆய்வாளர் சிலர் வடநாட்டில் உள்ள மாளவத்துடன் மழவர்களைத் தொடர்புபடுத்தி அங்கிருந்து வந்ததாகக் கூறுகிறார்கள். ''ஆயின் மழ'' என்ற சொல் இளமை என்ற பொருள் குறிக்கிறது. இளங்கன்று பயமறியாது என்பதுபோல் வீரம் செறிந்தவர்கள் என்பதை உணர்த்

தவே மழவர் என அழைத்ததாக நாம் கருதுவதே ஏற்புடைத்தாகும்.

இம் மழவர்கள் சிறந்த குதிரைப் படைகளை வைத் திருந்த குதிரை மறவர்கள் என்பதை, 'உருவக் குதிரை மழவர் ஓட்டிய' என்ற தொடர் விளக்குகிறது,

கொல்லி மலையை ஆண்ட ஓரி, திருக்கோயிலூரைத் தலைநகராகக் கொண்டு சேதி நாட்டை ஆண்ட காரி ஆகியோரும் மழவர்களே யாவர். கி.பி. பத்தாம் நூற் றாண்டில் சிவாலயத் தொண்டு புரிந்த செம்பியன் மா தேவி மழவர் குடியைச் சேர்ந்தவர் என்பது குறிப்பிடத் தக்கது. மழவர்களுடன் தொடர்புடைய மழபாடி என்ற திருமழபாடியை ஈண்டு குறிப்பிட வேண்டும். மழு என்ற ஆயுதத்தின் அடிப்படையிலும் மழவரைத்தொடர்பு படுத்துவர்.

(எது எப்படியிருப்பினும்) தமிழகத்தில் பழங்குடிகளில் மழவர்கள் குறிப்பிடத்தக்கவர்கள் எனலாம். இம் மழவர் கள் கொங்குப் பகுதியிலும் தகடூர் நாட்டிலும் இருந்தா லும் கொங்கர்களிலிருந்து வேறுபட்டவர்கள் என்பதையும் குறிப்பிட வேண்டும். கொங்கர்களே இன்றைய நாட்டுக் கவுண்டர் என இராமமூர்த்தி கருதுகிறார்.[2] மழவர் என்ற பிரிவினர் பழந்தமிழ் நாட்டில் இருந்த பழங்குடியினர் என்று அருணாசலக் கவுண்டர் கருதுகிறார்.

## தகடூர் வருணனை

சங்க இலக்கியங்கள் தகடூரையும் அதியமான் நெடு மான் அஞ்சியையும் பெரிதும் போற்றுகின்றன. நாகை யார், அஞ்சியின் அத்தை மகளாகச் சிலர் கருதுவர்.[22]

அதியமான்நாடு, உண்ணும் நீர்த் துறையில் மலை மலர் அணிசெய்யும் தலைநீர் நாடாகும். குலுங்கும் வள முடைய குதிரைமலை அவனுடையதாகும். மறவோரும் மன்றத்தில் கூடி விழாவெடுப்பர். மன்றமெல்லாம் மணம் கமழும். மன்றமொத்து நெடுமனை முற்றம் நிறைந்து வழியும். ஆர் வலர் குறுகின் அல்லது மாற்றரசர் கனவிலும் குறுகா கடியுடை வியநகர். தகடூரில் மலைக் கூட்டமொத்த மாடங்கள் நிறைந்திருக்கும். உடைந்த வளையல் ஒத்து வெண்காந்தட் பூ மலரும் மல்லிகையின் மணம் கமழும். வேங்கை மலர்ந்து மணமூட்டும். வேழம் மேல் எடுத்த வெற்றிக் கொடியென உயர்ந்து தோன்றி இழிதரும். அருவிகளின் வளக் காட்சி விருந்தளிக்கும். தகடூர் மலைப்பகுதிகளில் தெய்வப்பெண்கள் வாழ்ந் திருப்பர். கன்றொடு கூடிய பசுக்கூட்டங்கள் ஏதமின்றிக் காட்டிலே வாழலாம். கொடிய பாலைநிலத்தில் வரும் வழிப்போக்கர் வேண்டிய இடத்தில் தங்கலாம். கனம் மலிந்த நெல்மணிக்குவியல்கள் காவலின்றிக் கிடக்கும். ஆநிரைக்காக்கும் அண்ணலான அதியன் சிறிய கள் கிடைத் தால் புலவருக்கு வழங்கிவிடும் இயல்புள்ளவன். பெரிய கள் உள்ளபோது புலவர் பாடத் தாம் மகிழ்ந்துண்ணும் இயல்புடையவன். புலவருடைய பாசி யுடையை நீக்கி விட்டுப் புத்தாடை வழங்க மியல்புடையவன். வெள்ளி வெண்கலத்தில் கறி சோறு வழங்குவான். ஒரு நாளில் எட்டுத் தேரைச் செய்வோர் ஒரு திங்களில் கூடிச் செய்த தேர்க்காலை ஒத்தவன்.

தண்ணீரில் யானையை வீழ்த்தும் முதலைபோன்று காலம் இடமறிந்து பகையை வெல்பவன். தீக்கடைக் கோல்போல் தன்னாற்றலை அடக்கித் தோன்றாதிருக் கவும் வல்லன். கனை எரி போன்று தன்னாற்றலை வெளிப்படுத்தவும் வல்லவன். அவன் படைக்கலங்கள் புதிதாக இன்றி கொல்லன் உலைக் களத்தில் கிடந்த வண்ணமிருக்கும்.[28]

அந்தோ! வாரி வழங்கிய வள்ளல் மாண்டதால் புலவர்கள் எத்தகு வேதனையுற்றார்களோ?

## தகடூரும் சோழரும்

அதியமான் வீழ்ச்சியடைந்த பின் சேரர் தகடூரை ஆண்டபோது பிட்டன் கொற்றன் இப் பகுதியில் அரசாண்டுள்ளான். சேரனின் படைத்தலைவன் இவன்.[24]

சங்க காலத்தின் இறுதிக் காலத்தில் களப்பிரர் நுழைவதற்கு முன்னர் தகடூர் நாடு சேரர் பிடியிலிருந்து நீங்கிச் சோழர் பிடியில் இருந்துள்ளதாகத் தெரிகிறது.[25]

கோச்செங்கணான் என்னும் சோழன், சேரன் கணைக்காலிரும் பொறையைத் தோற்கடித்துச் சிறையில் வைத்தமை நோக்கியும், தருமபுரியில் கோச்செங் கண்ணீஸ்வரம் என்ற கோவில் கல்வெட்டில் இருப்பதை நோக்கியும் இக் கருத்து தோன்றுகிறது. கோச்செங் கண்ணீஸ்வரம் கோயிலைப் பற்றிப் பின்னர் விரிவாகக் காண்போம்.

## தகடூரும் வேற்று நாட்டவரும்

சங்க காலத்திற்குப்பின் களப்பிரர் என்ற கூட்டத்தவர் தமிழ் நாட்டில் நுழைந்துள்ளனர். திருப்பதிமலையை யொட்டியிருந்தவர் தொண்டை நாட்டிற்கும் கருநாட காவையொட்டியிருந்தவர் தகடூர் வழியாகச் சோழ பாண்டிய நாட்டிற்கும் சென்றுள்ளனர். தவிர தகடூரை ஒட்டியுள்ள மொழி பெயர் தேயத்தில் கட்டி என்ற மன்னர் சங்க காலத்தில் இருந்துள்ளனர். இவர்களும் தருமபுரியை நோக்கி வந்துள்ளனர்.[26] கங்கர், பாணர் போன்ற மன்னர்களும் சங்க காலத்தில் இருந்ததைப்

பார்க்கிறோம். இவர்களும் தகடூரையடைந்து குறுநில அரசுகளை ஏற்படுத்துகின்றனர்.[27]

களப்பிரரை வீழ்த்திய பல்லவர் தொண்டை நாட்டில் காலூன்றிய பின் தகடூர் நாட்டிலும் ஆதிக்கம் செலுத்த முற்படுகின்றனர்.[28]

நொளம்பர் என்ற மரபினர் தகடூரைக் கைப்பற்றும் வரை சிற்றரசர் பலர் தகடூர் நாட்டை ஆண்டுள்ளனர். தங்களுக்குள் ஓயாது போரிட்டுள்ளனர். இப்போர்களைக் குறிப்பிடும் நூற்றுக் கணக்கான நடுகற்களைத் தருமபுரி மாவட்டத்தில் பார்க்கிறோம்.[29]

கட்டி மரபில் வந்தவர்களில் கட்டணை பருமன் குறிப்பிடத் தக்கவனாவான்.[30] கங்கர்களில் ஸ்ரீபுருஷன், சிவமாறன் ஆகியோர் சிறந்தவர்கள் எனலாம்[31] பாணர்களில் மாவலி வாணாதிராயர் குறிப்பிடத் தக்கவர் எனலாம்.[32] இவர்கள் தங்களுக்குள் போரிட்டுக் கொண்டதுடன் சில சமயம் பல்லவப் பேரரசுடனும் மோதி உள்ளனர். சிம்மவிஷ்ணு மன்னனுடன் கோவூர் நாட்டையாண்ட அளப்பை கங்கதி அரையர் போரிட்டுள்ளார்.[33]

## தகடூரில் வாழ்ந்த கடமைப் பற்றுள்ள வீரன்

கி. பி. 8 ஆம் நூற்றாண்டளவில் அரிமிதைய வாணாதிராயன் என்பவன் தகடூர் நாட்டை ஆண்டு வந்தான். நுளம்பன் என்பவன் வாணாதிராயனுடன் தொடர்பு கொண்டான். நட்புறவு கொண்ட அவன் தகடூர் நாட்டை வஞ்சித்துக் கைப்பற்றிக் கொண்டான். அச்சமயம் வாணாதிராயன் தேவி கருவுற்றிருந்தாள். அவளைப் பாதுகாப்பான ஓர் இடத்தில் வைத்திருந்து

குழந்தை பெறும் வரை சங்கரக் குட்டியார் என்பவர் காப்பாற்றி உள்ளார். பின் நுளம்பனைத் தோற் கடித்துத் தகடூரைக் கைப்பற்றுகிறார். இதைக் கூறும் கல்வெட்டு வருமாறு:

> ''சுவஸ்திஶ்ரீ அரிமிதைய மாவலி வாணராயர் கங்கநாடும், புறமலைநாடும், கோயினூர்நாடும் கோவூர்நாடும், தாயனூர் நாடும், பற்றநாடும் ஆள
>
> அவர்க்கு தான் ஆகிபிள்ளை கொண்டு உள் புகுந்து வஞ்சித்து நாடு கொண்டான் நுளம்பன்.
>
> அவன்போரில் கருப்பிணி அருளராக அவளைக் காத்திருந்து ஆண் பிள்ளை பெறுவதும் தகடூர் புகுந்து நுளம்பன் பலத்தோடே துணிந்து நாடுபாவினார் சங்கரக் குட்டியார் அவரோடு உடன் புகுந்து தகடூரில் மீட்டார் நாகந்தை சங்கரக் குட்டியார் கல்நாடு''[34]

போரில் நுளம்பனைச் சங்கரக் குட்டியார் தோற் கடிக்கிறார். இப் போரில் சங்கரக் குட்டியார் சேவகன் நாகந்தை இறந்துபடுகிறான். இவனுக்குச் சங்கரக் குட்டியாரே நடுகல் எடுப்பிக்கிறார். எனினும் மீண்டும் நொளம்பரே தகடூரைக் கைப்பற்றிப் பல ஆண்டுகள் ஆண்டமையை வரலாற்றில் பார்க்கிறோம்.

இன்றைக்கு 1200 ஆண்டுகளுக்கு முன் பாலவாடி என இன்றழைக்கப்படும் பகுதியை ஆண்ட பறைகளிணி யார், தகடூர்ப் படையுடன் மோதி உயிர் நீத்துள்ளார். அவருக்காக எடுக்கப்பட்ட நடுகல் பாலவாடியில் இன்று முள்ளது.[35] அக்கால கட்டத்தில் தகடூர் நாடு ஏழுநாடு களாக இருந்துள்ளன. பின்னர் 9 நாடுகளாக மாறு கின்றன.[36] தகடூர்நாடு கங்கநாடு என்றும் வழங்கப் பட்டுள்ளது.

## விண்ண வருமன்

அகநானூற்றில், அதியன் விண்ணத்தன் என்ற புலவர் ஒரு பாடலைப் பாடி உள்ளார். கி. பி. ஐந்தாம் நூற்றாண்டு இருளப்பட்டி அல்லது பாப்பம்பாடி நடுகல் மூலம் விசைய விண்ண வர்மன் ஒருவனைக் காண்கிறோம்.[37]

கோவிசைய விண்ண பருமற்கு நான்காவ்
து தக ரேரு நாடாளும் கங்கரைசரு
மேல் வந்த தண்டத் தோடு எ
றிந்த பட்ட வாண பெரு மரைசரு

கோவிசைய விண்ண வருமருடைய நான்காவது ஆட்சியாண்டில் தகடூரையாளும் கங்க அரசர் தம்மீது படையோடு வந்தவரை எதிர்த்தார். அப் போரில் பாண அரசன் மாண்டான். அவனுக்காக இந்நடுகல் எடுக்கப்பட்டது.

அகநானூற்றுப் பாடலை எழுதிய அதியன் விண்ணத்தவனும் விசைய விண்ண பரும்ரும் ஒருவராக இருக்கலாம். யாப்பருங்கலம் பழசை விண்ணன் என்பானைக் குறிப்பிடுகிறது அவனே இவன் போலும். மற்றொரு நடுகல் விண்ணப்பேரேனாதியைக் குறிப்பிடு கிறது. கங்கர், சங்க நூற்களிலேயே இடம் பெற்றுள்ளனர்.

1 வாணபரும
2 அரைசரு சே
3 வகன் உழ
4 மூணுகன் மக

5 ன் விசய ம

6 ங்கல மாண்

7 ட விண்ண பே

8 ரேனாதி கல்

9 விண்ணப் பேரே

10 னாதி சேவகன்

11 கொற்றந்தை கோட

12 ன் கல்

கல்வெட்டில் பாண அரசருடைய சேவகன் உழமுனுகன் மகன் ஆண்ட பகுதியும் அவனுடைய சேவகன் கொற்றந்தை பெயரும் கல்வெட்டில் பார்க்கிலோம். விண்ணப் பேர் என்பது பெயர் ஏனாதி பட்டப் பெயர் இவனுடைய சேவகர் கொற்றந்தை கோடன். பாணரும் சங்க இலக்கியங்களில் இடம் பெற்றுள்ளனர். ஆகக்கங்கர், பாணர். அதியர் ஆகிய மூன்று மரபையும் இருளப்பட்டி நடுகற்கள் குறிப்பிடுகின்றன எனலாம்.

முதல் மகேந்திரவர்மனுடைய 14 ஆம் ஆட்சியாண்டு, 'மொண்டு குழி' கல்வெட்டு மூலம் பல்லவருக்குக் கீழ்ப் பட்ட மன்னராக அதிகை மான் மரபினர் கி. பி 6 ஆம் நூற்றாண்டில் இருந்தமையை அறிகிறோம்.[39] கடிகாவின் அஞ்சினாரு என்பவரின் மக்கள் பொற்கோவனாரும் வீரவாண்ணரலூர் மக்கள் பொன்மோதனாரும் பொரிட, போரில் அதிகை மான் மரபினன் இறந்து பட்டுள்ளான்.

கடிகாவின் என்ற சொல் கடிய காவலை உடைய அல்லது காவல் மிக்க சோலையுடைய நாட்டின் தலைவன் என்று பொருள் கொள்ளலாம். சங்க நூற்கள்

வருணிக்கும் அதியமானுடன் இச் சொல்லை ஒப்பிட்டு மகிழலாம். மேலும் பொற்கோவரைரு என்ற அதிகை மான் மரபினன் கொற்ற மங்கலம் என்ற பகுதியை(புற மலை நாட்டின் ஒரு பகுதி) ஆண்டு வந்துள்ளான். இவ னுடைய சேவகர் புளிகளாலும் தேருணி சாத்தனாரும் மேற்கண்ட போரில் பொன்மாதனாருடன் போரிட்டு மாண்டுள்ளார். போர் நரிப்பள்ளியில் நடைபெற் றுள்ளது. அதிகைமான் மரபினன் வாண அரசருடன் சென்று போரிட்டுள்ளான்.

கி. பி. 8ஆம் நூற்றாண்டளவில் மாவலி வாணராயர் கங்க நாடான, அதாவது சிவமாறனுடைய 22ஆம் ஆட்சி யாண்டில் தகடூரை நோக்கி இந்திரன் (இராஷ்டிரகூட மன்னன் இந்திரவர்மனாக இருக்கலாம்) படையெடுத்து வர, கண்ணனூர்த் தலைவனான கமியத்தழமன் போரில் இறந்ததை ஊத்தங்கரை வட்டம் ஒட்டப்பட்டி நடுகல் குறிப்பிடுகிறது.[40]

சிவமாற வர்மருடைய ஆட்சியில் கங்கநாடு வாணர் களால் ஆளப்படுகிறது. இந்தச் சிவமாறன் கட்டி மரபி னைச் சேர்ந்தவனாக இருக்கலாம். இராட்டிரகூடர் கி. பி. 925லும் அதாவது வீரநுளம்பனுடைய ஆட்சியில் பசுக் கூட்டங்களைக் கவர்ந்து செல்ல முயன்றபோது போர் ஏற்பட்டுள்ளது. இராஷ்டிரகூடரை வல்லவரைய நாட்டார் என்று கல்வெட்டுக் குறிப்பிடுகிறது. மேற் கண்ட கல்வெட்டு அரூர் வட்டம் முத்தானூர் பொன்னேரி

யில் உள்ளது. நுளம்பர் ஆட்சிக்கு வரும் வரை பல அரசு மரபுகளைத் தகடூர் வரலாற்றில் காண்கிறோம். இனி நுளம்பர் வரலாற்றைக் காண்போம்.

## நுளம்பரும் தகடூரும்

பாணர், கங்கர், கட்டி மரபினர் போன்றோர் தகடூரில் பல்வேறு பகுதிகளை ஆண்டிருப்பினும் நுளம்பர் வரலாறு போல் தொடர்ச்சியாக இவர்கள் வரலாற்றைக் குறிப்பிட முடியவில்லை. நுளம்பர் போல பெரும் பரப்பையாண்டதாகவும் குறிப்பிட முடியவில்லை. தகடூரில் நுளம்பர் கட்டிய கோயில்கள் போல பாணர், கங்கர் போன்றோர் கட்டியதாகவும் வரலாறு இல்லை.[41]

கி பி 873 - 968 வரை ஆண்ட நுளம்பர் முதலில் ஹேமாவதியையும் பின் தகடூரையும் தலைநகரமாகக் கொண்டிருந்தனர். நுளம்பவாடி 32,000 என அவர்கள் நாடு அழைக்கப்பட்டது. இவர்கள் பல்லவர் குலத்தில் வந்தவரென்றும் கூறிக் கொள்ளுவார்கள். நுளம்ப பல்லவ ரென்றே இவர்களுக்குப் பெயருண்டு. முதலில் கங்கர் களின்கீழ்ப் பணி புரிந்தார்கள்.

## மகேந்திர நுளம்பன்

இவன் நுளம்பர்களில் குறிப்பிடத்தக்கவன். அதிய மான் கோட்டையை மகேந்திர மங்கலமாக மாற்றிய வன்.[42] மைந்தீஸ்வர முடையார் கோயிலை எழுப்பியவன். தகடூரில் சமணக் கோயிலுக்கும் சைவக் கோயிலுக்கும் தானம் வழங்கியுள்ளான். சைவ ஆசாரியருக்கு மருதன் ஏரியில் நிலம் வழங்கி உள்ளான்.[43] இவ்வூர் இன்று மருதேரி என வழங்கப்படுகிறது. சமண ஆசாரியர் நிதியண்ணன் மற்றும் சண்டியண்ணன் இருவருக்குமாக ஜெயின பஸ்தியாக மூலப்பள்ளி நிலம் வழங்கியுள்ளான்.

ஜைபின கோயில் தற்போது இல்லை. ஆயின் இரு சமணப் பெரியோர் உருவங்கள் செதுக்கிய சிற்பம் தருமபுரி சந்தைப் பேட்டையிலிருந்து கொண்டுவந்து தகடூர் அருங் காட்சியகத்தில் வைக்கப்பட்டுள்ளது. இச்சிற்பத்தை இராமக்கா, இலட்சுமணக்கா எனப் பாமர மக்கள் குறிப்பிடுவார்கள். கல்வெட்டில் வரும் சமண ஆசாரியர் இருவர், இவர்களாகவும் இருக்கலாம். அவ்வாறே சைவ ஆசாரியர்; விருந்தாடி அம்மன் கோயில் அருகில் உள்ள கற்சிற்பமாக இருக்க வேண்டும். பார்ப்பதற்குச் சைவத் துறவிபோல இவ்வுருவம் உள்ளது.

மகேந்திர நுளம்பனுக்குப் பின் படடத்திற்கு வந்த அய்யப்பத்தேவன் தன் தந்தையைப் போலவே சமணக் கோயிலுக்கு நிலம் தானமாக வழங்கி உள்ளான். தமிழ், கன்னடம் இரண்டு மொழிகளிலும் இவனுடைய கல்வெட்டுகள் உள்ளன. பின் அன்னய்யன் அல்லது வீர நுளம்பனும் இறுதியாக திலீப்பரசனும் ஆள்கின்றனர். எனினும் மூன்றாம் கிருஷ்ணன் என்ற திறமை வாய்ந்த மன்னன் வந்த பின், நுளம்பர் வீழ்ச்சி அடைகின்றனர். மேலைக் கங்க மன்னன் இரண்டாம் நரசிம்மனிடம் கி. பி. 974இல் நுளம்பர் தோற்றபின் இம் மரபு செல்வாக்கிழக்கிறது. நுளம்பர்கள் நிர்வாக வசதிக்காக தம் நாட்டைப் பலபிரிவுகளாகப் பிரித்து அரசகுலத்தவரால் நிர்வகித்து வந்தார்கள். பெண்களும் அதிகாரிகளாக இருந்துள்ளார்கள். நுளம்பர் காலத்தில் எடுக்கப்பட்ட சிவன் கோயிலைப் பின்னர் விரிவாகக் காண்போம்.

## தகடூரும் பிற்காலச் சோழரும்

மாமன்னன் இராஜராஜன் பல்வேறு நாடுகளை வென்றபோது தகடூர் உள்ளிட்ட நுளம்பப்பாடியையும் வென்றான். வென்றபின் நுளம்ப பாடியைத் தனியாக ஒரு மண்டலமாக்கினான். பழைய பெயருடன் நிகரிலி

சோழ மண்டலம் என்றும் பெயரிட்டான். இவனுக்குப் பின்னர் தகடூர் சோழர் பேரரசில் இருந்துள்ளது. இராஜ ராஜன் வெளியிட்ட ஈழ மனிதக் காசு ஒன்று தகடூர் அருகில் கிடைத்துள்ளது.[44] நிகரிலி சோழமண்டலம் கி. பி. 13ஆம் நூற்றாண்டில் விஜய ராஜேந்திர மண்டலமாக மாறு கிறது.

சோழர் காலத்தில், பல கல்வெட்டுகள் தகடூர் நாட்டில் வெட்டப்பட்டுள்ளன. சில நடுகற்களாக இருப்பினும் பல கோயில்களுக்கு வழங்கிய தானத்தைக் குறிப்பிடு கின்றன. மூன்றாம் குலோத்துங்கன், மூன்றாம் இராச ராசன் போன்றோர் கல்வெட்டுகள், கோயில் தானத் தையே சுட்டுகின்றன. சோழர் காலத்தில் எடுக்கப்பட்ட இராஜ ராஜீஸ்வரமுடையார் கோயிலைப் பற்றியும் அவர் கள் காலத்தில் புதுப்பிக்கப்பட்ட பிற கோயில்களைப் பற்றியும் பிறகு காண்போம்.

## பிற்கால அதியமான்களும் தகடூரும்

சங்க காலத்திற்குப் பின்னர் பல்லவர் காலத்தில் அங் கொன்றும் இங்கொன்றுமாக அதிகாரிகளாக இருந்த அதியமான்கள், கி. பி. 8ஆம் நூற்றாண்டளவில் நாமக் கல்லைத் தலைமை இடமாகக் கொண்டு, கோட்டை கட்டிக் கொண்டு அரசாட்சி புரிந்துள்ளனர். இவர்களில் சோமன் குறிப்பிடத்தக்கவன் ஆவான். புகழ்பெற்ற குடைவரைக் கோயில்களை நாமக்கல்லில் அதியமான் மரபினர் கட்டியுள்ளனர்.[45] பாண்டியர்களால் நாமக்கல் லில் ஆண்ட அதியமான் தோற்கடிக்கப்பட்டபின் சோழ ரின்கீழ் அதிகாரிகளாக மாறுகின்றனர். ஒருசிலர் அரசர் போலவே தகடூர் நாட்டை ஆண்டுள்ளதைக் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. குறிப்பாக இராஜராஜ அதிகைமான் என்ற விடுகாதழகிய பெருமாளைக் குறிப்பிடலாம்.

இவன் தகடூர் மட்டுமல்றி வட ஆர்க்காடு மாவட்டம் போளூர் வரை கிழக்கிலும், வட்டிகம் வரை வடக்கிலும் (ஆந்திரா) அரசாண்டுள்ளான். பல கோயில்கள் எடுப்பித்ததுடன் பழைய கோயில்களைப் புதுப்பித்து மிருக்கிறான்.

அதேபோல் மற்றொரு அதிகைமான் அதியமான் கோட்டையிலிருந்து நாவல் தாவளம் வரை 30 காதங்களுக்குச் சாலை ஏற்படுத்தி, தொலையளவுகற்களும் நிறுவியுள்ளான். தருமபுரி அருகே குள்ளனூரில் 29ஆம் எண்ணுள்ள தொலைஅளவுகல் இன்றுமுள்ளது. இச் சாலையின் பெயர் அதிகைமான் பெருவழியாகும்.[46] இவ் வதியமான்கள் காலத்தில் தகடூர் 'விடுகாதழகிய நல்லூர்' என்றும் வழங்கப்பட்டுள்ளது. அரூராகிய அரியூரும் 'விடுகாதழகிய நல்லூர்' என வழங்கப்பட்டுள்ளது.

உரைமருவும் குலோத்துங்க சோழ தேவர்க்கு
உரைத்தயாண் டிருபதின் மே லிரண்டிற் பெண்ணைக்
கரைமருவுஞ் சிறுகோட்டை குனன்நாகை நாயகற்
களித்துக் கற்றளி தன்பேரிட்டகாரணையக் கையான்
திரைமருவுந் தடங்கமலத் தகடை மன்னன்
செழும்பாலி பெண்ணைத் திருநதி மூன்றுடைய
விரைமருவுந் தார்மார்பன் ராஜராஜ வதிகன்
விலங்காமொழி விடுகா தழகியப் பெருமானேய் [47]

என்ற விருத்தம், இராஜராஜ அதிகைமானின் ஆட்சிப் பரப்பையும் சிவபக்தியையும் குறிப்பிடுகின்றன. 'விலங்கா மொழி' என்ற பெயரும் 'நமசிவாய நம' என்ற தொடரும் ஒரு கல்வெட்டில் உள்ளன.[48]

இராஜராஜ அதிகைமான், தகடை மன்னன் என்றே வழங்கப்பட்டுள்ளான். விடுகாதழகிய பெருமான்

சமண சமயத்தையும் போற்றி உள்ளான். பள்ளிச் சந்த மாக வெட்டிய குட்டையை ஊத்தங்கரை பாறைக் கல் வெட்டு குறிப்பிடுகிறது.[49]

விடுகாதழகிய பெருமாள், மூன்றாம் குலோத்துங் கன 10ஆம் ஆட்சியாண்டு முதல் மூன்றாம் இராஜ ராஜ சோழன் 8ஆம் ஆட்சியாண்டு வரை ஆண்டமை யைப் பார்க்கிறோம்.

வட ஆர்க்காடு மாவட்டம் போளூர் வட்டம் திருமலைக் கல்வெட்டு சேர வமிசத்தில் அதிகைமான் வந்த தாகக் கூறுகிறது. தகடூர் யாத்திரை 7ஆம் பாடலும் சேர னின் தம்பியாக அதியனைக் குறிப்பிடும்.

வில்லுடன் கூடிய அரசச் சின்னம் ஆந்திராவில் உள்ள லட்டிகம் 'நீலகண்டேசுவரர்' கோயிலில் உள்ளது. இராஜ ராஜ அதிகமானும் சம்புவராயரும் செய்து கொண்ட ஒப்பந்தக் கல்வெட்டு ஒன்று வட ஆர்க்காடு மாவட்டம் செங்கத்தில் உள்ளது.[50] அக் கல்வெட்டின் மூலம் கரிகால் சோழ ஆடையூர் நாடாள்வானும் செங்கேணி அம்மை யப்பன் அத்திமல்லன் ஆகிய் விக்கிரமச் சோழ சம்புவராய னும் அதிகைமானுடன் போர் உடன்படிக்கை செய்து கொண்டனர். அதிகைமான், சீய கங்கன் என்ற கொங்கு மன்னனுடனும், மகத மன்னனாகிய ..ாணனுடனும் காடவராயவனுடனும் பகை கொண்டிருந்ததாகத் தெரி கிறது.

அக் காலக் கட்டத்தில் ஒரு குறுநில மன்னன் பெரும் பரப்பை ஆட்சி புரிந்தது விடுகாதழகிய பெருமாளே யாவான்.

விடுகாதழகிய பெருமாள் பெண்ணையாற்றங் கரையின் சிறுகோட்டையில் தன் பெயரில் கோயில் எடுப்பித்துள்ளான்.[51] சிந்தல்பாடி, சிவனீஸ்வர முடை

யாருக்குத் தானம் வழங்கி உள்ளான்.[52] வாணியம்பாடியில் அதிதிகேஸ்வரம் என்ற கோயிலை எடுப்பித்துள்ளான்.[53] இறைவன் பெயர் விடுகாதழகீஸ்வரமுடையாராகும். போளூர் வட்டம் திருமலைச் சமணக் கோயிலுக்கும் தானம் வழங்கி உள்ளான். கோயிலில் திருப்பணியும் புரிந்துள்ளான். குளமொன்றும் எடுப்பித்துள்ளான்.[54] மூன்றாம் இராஜராஜன் 7ஆம் ஆட்சியாண்டு கல்வெட்டின்படி ஊத்தங்கரை வட்டம் ஆம் பள்ளியில் விடுகாதழகிய பெருமாள் ஆழ்வாருக்காகக் கங்க காமண்டன் பள்ளிச்சந்தமாகக் குட்டை ஒன்றை எடுப்பித்துள்ளான்.[55] பெண்ணேஸ்வர மடத்தில் கோயிலில் 'அதிகைமான் பிள்ளையார்' என்ற பிள்ளையார் கோயில் உள்ளது. இது இராஜராஜ அதிகைமான் பெயரில் ஏற்பட்டதாக இருக்கலாம்.

தருமபுரி வனச் சரக அலுவலகத்தில் (தருமலிங்கம் சாலையில்) நடுகல் சிற்பம் ஒன்றுள்ளது. வெண்கொற்றக் குடையுடன் கூடிய இச் சிற்பம் கி. பி. 13ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த ராஜராஜ அதிகைமானுடையதாக இருக்கலாம்.[56]

விடுகாதழகிய பெருமாள், கம்பை நல்லூர் என இன்று வழங்கப்படும் நாகையம்பள்ளியில் சிவன் கோயில் தோற்றுவித்தான்.[57] புலவர் பெருமக்களை ஆதரித்ததால் காரணைய கையான் எனப் போற்றப்பட்டான்.[58] வட ஆர்க்காடு மாவட்டம் திருமலையில் உள்ள குந்தவை ஜினாலயத்தில் இவனுடைய பாடல் கல்வெட்டு உள்ளது.[59]

**வஞ்சியர் குலபதி யெழுனி**
**வருத்த வியக்க ரியக்கிய ரோடு**
**எஞ்சிய வழிவு திருத்தி**
**யெண்குண விறை திருமலை வைத்தான்**

அஞ்சிதன் வழிவரு மவன்
வழிமுதலி கலி அதிகனவன்
விஞ்சையர் தலைபுனை தகைமையர்காவலன்
விடுகா தழகிய பெருமாளேய்

இவன் மாற்றுச் சமயத்தையும் போற்றி உள்ளான். 'நமசிவாயா' என்ற மந்திரத்தில் பெருவிருப்பம் கொண் டிருந்தான்.[60]

செங்கத்தில் உள்ள இரண்டு கல்வெட்டுகள் மூலம் அதியர் சம்புவராயர், மூன்றாம் குலோத்துங்கனிடம் செய்த ஒப்பந்தம் பார்க்கிறோம்.[61] ஒன்றில், இராஜராஜ அதியன் மகன் பராந்தகப் பெருமாள் என்பவனிடம் 'நீங்கள் போருக்குச் செல்வதென்றாலோ கூட்டு வைத்துக் கொள்வது என்றாலோ என் ஒப்புதலைப் பெற வேண் டும்' எனச் சோழன் கூறுகிறான். மற்றொரு கல்வெட்டு, விடுகாதழகிய பெருமாள் அதே சம்புவராயன் முதலியோ ருடன் செய்து கொண்ட ஒப்பந்தம்; ஏற்கனவே பார்த் தோம். குலோத்துங்கனிடம் விடுகா தழகியப் பெருமாள் மிகவும் நெருக்கமாக இருந்துள்ளான். ஆகக் கி. பி. 12 ஆம் நூற்றாண்டில் விடுகாதழகிய பெருமாள், பராந் தகப் பெருமாள் என்ற இரு அதியமான்கள் தங்களுக்குள் ஒற்றுமையின்றி இருந்துள்ளனர்.

சோழர் வீழ்ச்சிக்குப் பின் அதியமான்கள் படிப்படி யாக மறைகின்றனர். அதே நேரத்தில் போசளர்கள் எழுச்சி பெறுகிறார்கள்.

## தகடூரும் போசளரும்

'புலிகடி மாஅல்' என்ற சங்க கால மன்னரின் வழி வந்தவராகப் போசளரைச் சிலர் குறிப்பிடுவர். எனினும் கி.பி.13ஆம் நூற்றாண்டில், தகடூரில் இவர்களே ஆதிக்கம்

செலுத்தி உள்ளனர். குந்தாணியைத் தலை நகரமாகக் கொண்டு ஆண்ட இவர்கள் காலத்தில் பல கோயில்களுக் குத்தானம் வழங்கப்பட்டன.[62] இவர்கள் காலத்தில் தகடூர், 'கடைக்கோட்டூரான நானாதேசிப்பட்டினம்' என வழங் கப்பட்டது.[63] குலோத்துங்க சோழ தகடாதராயன், என்பான் இவர்கள் காலத்தில் தகடூரில் இருந்த அதிகாரி யாவான்.[64]

# தகடூரும் விஜயநகரப் பேரரசரும்

போசளர் வீழ்ச்சி அடைந்த பின் விஜய நகரப் பேரரசின்கீழ் தகடூர் நாடு வருகிறது. இம் மரபில் வந்த பல மன்னர்கள், கோயில்களுக்கு வழங்கிய தானங்களை நாம் பார்க்க முடியும். பல கோயில்களை இவர்களும் புதுப்பித்துள்ளனர். கி. பி. 1421இல் தகடூர் நாட்டுக் கடைக்கோட்டூரைச் சேர்ந்த இராஜராஜீஸ்வர முடைய நாயனார்க்குப் பூசைக்கும் திருப்பணிக்குமாகத் தகடூர் நாட்டை நாயகம் செய்வானாகிய இராமநாயனார் பொன்னக் கூத்தன் மேலேரியில் நன்செய் புன்செய் நிலம் வழங்குவதுடன் பல வரிகளையும் கோயிலுக்காக வழங்கு கிறான்.[65] வீரதேவ மகாராயன் காலத்தில் பொம்மைய நாய்க்கன் மகன் திம்மைய நாய்க்கன் நன்மைக்காக வேண்டி இத் தானம் செய்யப் பெறுவதாகக் கல்வெட்டுக் குறிப்பிடுகிறது.

இராமக்கா ஏரி, இவன் பெயரையொட்டி ஏற்பட் டிருக்கலாம். இராமநாய்க்கன் பட்டி என்ற ஊரும் இவன் பெயரையொட்டி ஏற்பட்டதாகும்.[66] இராம நாயனார் தகடூரையாண்ட அதிகாரியாவான்.. மற்றொரு கல்வெட்டு திம்மைய நாய்க்கன் நன்மைக்காக வேண்டி, தகடூர் நாட்டு நாயகம் செய்பவனாகிய ஆரோதர் இராம நாயனாரும் மற்றும் நாட்டவரும் கூடி உதையப் பெரு மாளுக்குத் திருக்கோபுரம் புதுப்பித்துத் தருகின்றனர்.

இக் கோயில் பழைய தருமபுரியில் இன்று உள்ள நரசிம்மப் பெருமாள் கோயில் ஆகும். இங்குள்ள கோபுரம் மிகச் சிறந்த கோபுரமாகச் சேலம் மாவட்ட விவர நூல்கள் எழுதிய அனைவருமே குறிப்பிடுகின்றனர். கோட்டைக் கோயில் மல்லிகார்ச்சுனர் கோயில் என வழங்கப்படு கிறது.[68] நுளம்பர் காலத்தில் எழுப்பப்பட்ட இக் கோயில் மல்லிகார்ச்சுனர் என்ற விஜய நகர அரசர் காலத்தில் கி. பி. 15ஆம் நூற்றாண்டில் மாற்றம் பெற்றி ருக்க வேண்டும்.

விஜய நகரப் பேரரசு வீழ்ச்சியடையும் காலத்தில் மிகச் சிறந்த குறுநில மன்னர்களில் ஒருவனாக விளங்கிய ஜெகதேவிராயன் காலத்தில் தகடூர், தருமபுரி எனப் பெயர் மாற்றம் பெற்றது. பல விருதுப் பெயர்களுள் தருமராசன் என்பதும் இவனுக்கு ஒரு பெயராகும். 12 பார மஹால் கோட்டைகளை எழுப்பியதாகக் கூறப்படும் ஜெகதேவிராயன் இவனேபோலும்! இவனுடைய பெயரில் ஜெகதேவிதுர்க்கமும் இம் மாவட்டத்தில் உள்ளது.[69]

## ஜெகதேவிராயன்

கி.பி. 16 ஆம் நூற்றாண்டின் இறுதியில் ஜெகதேவி ராயன் மரபினர் குறுநில மன்னராக உருவாகி விஜய நகரப் பேரரசின் அன்பிற்குப் பாத்திரமாயினர்.[70] கி. பி. 77இல் பெனுகொண்டா மீது பீஜப்பூர் சுல்தான் அலி ஆதடின் படையெடுப்பின்போது ஜெகதேவிராயன் வீரச் செயல் புரிந்து சீரங்கராயரின் பெரு மதிப்பிற்கு ஆளா னான். அவன், மன்னன் மகளையும் மணந்து கொண் டான். கி. பி. 1619இல் விருபாட்சிபுரத்தைத் தானம் செய்த ஜெகதேவிராயனை விருபாட்சிபுரம் சாசனம் போற்று கிறது.[71]

இவன் கட்டிய கோட்டையே ஆங்கிலேயர்கள் குறிப்பிடும் கோட்டையாகும். இக் கோட்டை பிற்காலத் தில் இடிபாடுகளுக்காளானது. திரு. லெபானு என்பவர் கோட்டையைப் பற்றிக் கூறும்போது பழைய கோட்டைக்கு அருகில் தெற்கில் நன்கு திட்டமிட்டுக் கட்டப்பட்டதாகக் கூறுகிறார். கோட்டைக் கோயில் அமைந்துள்ள இடமே கோட்டையாகும்.

கி. பி. 17 ஆம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் பீஜப்பூர் சுல்தான் வசம் இக் கோட்டை வருகிறது. எனினும் கி. பி 1652 இல் மைசூர் உடையார் (கண்டீரவ நரச ராஜா) பீஜப்பூர் சுல்தானிடமிருந்து கைப்பற்றிக் கொள்கிறார். பின் அவரிடமிருந்தும் விடு படுகிறது. எனினும் கி.பி. 1688இல் தர்மபுரியை சிக்கதேவ ராயர் கைப்பற்றுகிறார். பின்னர், மைசூர் ஆதிக்கத் தில் இருந்தது. எனினும் ஐதரும் திப்புவும் போரிட்ட போது, தருமபுரி கோட்டை பராமரிப்பவரின்றி சீர்குலைய ஆரம்பித்தது. பல பகுதிகளில் முட்கள் மண்டின. கி. பி. 19 ஆம் நூற்றாண்டு ஆரம்பத்தில் ஏற்பட்ட பஞ்சத்தின்போது மக்களுக்கு உதவ நினைத்த கிழக்கிந்தியக் கம்பெனி கோட்டைச் சுவர்களை இடித்துத் தரை மட்டமாக்கும்படி கூறியது. 1883லேயே சுவர்கள் இல்லை எனத் திரு லெபானு கூறுகிறார். கோட்டை இருந்த இடத்தில் ஈஸ்வரன் கோயில், காமாட்சி கோயில், பரவாசுதேவர் கோயில், லெப்டினன்ட் கர்னல் ஜேம்ஸ் ஐவிசின் என்பவரின் கல்லறை ஆகியவை உள்ளன.

ஈஸ்வரன் கோயிலுக்குத் தெற்கில் குப்பைத் தொட்டி யாக இப்பொழுது காட்சி தரும் மேடை ஒன்று, உண்மையில் ஜேம்ஸ் ஐவிசினுக்கு அமைக்கப்பட்ட மாதியாகும். இவர் மகித்பூரில் வீர மரணம் அடைந்த சார் என்றறிகிறோம்.

தருமபுரி என்ற பெயருக்குப் பதில் வேறு சில பெயர்களும் இக்காலத்தில் தோன்றினாலும் தருமபுரியே நிலைத்து விட்டது. தரும நல்லூர், வருணமாபுரி போன்ற பெயர்களை ஓலைச்சுவடி குறிப்பிடுகின்றது. சிக்க கிருஷ்ணராயன் என்ற மைசூர் உடையார் காலத்தில் கி.பி. 1714இல் தருமபுரிப் பேட்டையில் கலிதீர்த்த வாத்தியார் என்ற தண்டமிழ்க் கவிஞர் வாழ்ந்துள்ளார். கி பி.1792 சீரங்கப்பட்டின உடன்படிக்கைக்குப் பின் தருமபுரி உள்ளிட்ட பெரும்பகுதி ஆங்கிலேயர் ஆட்சியின்கீழ் வந்தது. எனினும் நான்காம் மைசூர் போருக்கு மூன் கிறித்துவ மதப்பிரசாரகர்களுக்கும், மாதா கோயில்களுக்கும் திப்புவால் இடையூறு ஏற்பட்டதாக ஆங்கிலேயர்கள் குறிப்பிட்டுள்ளனர். தமிழும், ஆங்கிலமும், பிரெஞ்சும் அறிந்த பாதிரியார் அப்பே தூபே தருமபுரி வந்து எளிய வாழ்க்கை வாழ்ந்து தம் சமயத்தை வளர்த்தார். மக்கள் இவரை அந்தோணி சாமியார் என அழைத்தனர். மன்றோ என்ற நிர்வாகியும் மக்களால் போற்றப்பட்டுள்ளார். அவருடைய நினைவாக நினைவுத்தூண் ஒன்று தருமபுரியில் எழுப்பி உள்ளனர்.



# சர் தாமஸ் மன்றோ

தருமபுரி நகருடன் பெரிதும் தொடர்புடைய சர் தாமஸ் மன்றோ 1780ஆம் ஆண்டு ஜனவரி 15 ஆம் தேதி சென்னைக்கு வந்தார். ஹைதர் அலியை எதிர்த்த ஆங்கிலேயப் படையில் உத்தியோகஸ்தராக இருந்தார். போரில் வெற்றி பெற்றார். சுமார் 12 ஆண்டுகள் இராணுவப் பணியில் ஈடுபட்டிருந்த மன்றோவுக்கு 1788இல் லெப்டினன்டு உத்தியோகம் கிடைத்தது. கேப்டன் ரீடிக்கு உதவி உத்தியோகஸ்தராக 1789இல் பணியாற்றினார். பாரமஹாலைப் பரிபாலித்து வந்த ரீடிடம் மன்றோ, மாக்லியாடு, கிரஹாம் எனும் மூவர் கீழ் நிலை அதிகாரிகளாகப் பணியாற்றினார்கள். மன்றோ 1799 வரை சுமார் 7 ஆண்டுகள் தருமபுரியிலேயே இருந்து வேலை பார்த்து வந்தார். ரெவின்யூ வசூல் செய்யும் விஷயத்தில் விவசாயிகளுக்கு எளிய நடை முறையைக் கொண்டு வந்தார். குடிமக்கள் தாங்களே நேரிடையாக வரி கட்ட ஏற்பாடு செய்தார். இதுவே ரயத்வாரி ஏற்படக் காரணமாயிருந்தது எனலாம்.

மன்றோ தருமபுரியில் ஒரு குளம் வெட்டினார். இதற்கு மன்றோ சாப்புக் குளம் என்று பொது மக்கள் அழைத்தனர். அவ்வாறே அவர் உண்டாக்கிய தோட்டம் மன்றோ சாப்புத் தோட்டமென்று வழங்கப்பட்டது.

மன்றோ குடியிருந்த வீட்டின் அடையாளம் இல்லை யெனினும் குளம் இன்று உள்ளது. சோழர் காலக் கல்வெட்டு படிக்கட்டில் உள்ளதால் ஏற்கனவே இருந்த குளத்தைப் புதுப்பிக்கும் பணியில் மன்றோ ஈடுபட்டார் எனலாம். தொப்பூர் அருகில் மன்றோ குண்டா என்ற குளம் ஏற்படுத்தியதாகவும் அறிகிறோம். ஆயின் அக் குளம் தற்போது கண்டுபிடிக்க முடியவில்லை. தருமபுரி குறித்து மன்றோ குறிப்பிடுவதாவது:

''இது மிகவும் ரம்மியமான தோர் பிரதேசம். இவ் விடத்தில் உள்ள ஒவ்வொரு மலையும் மரமும் எனக்கு இன்பத்தைத் தருகிறது. நான் தருமபுரியிலிருக்கும் போது எல்லாம் இத் தோட்டத்தில் ஒரு மணி நேர மாவது கழித்து வருவேன். இவ்விடத்தைவிட்டு இப்போது நான் செல்ல வேண்டியிருப்பதை நினைக்க வெகு நாள் பழகிய நண்பனை விட்டுப் பிரிய நேர்ந்தால் எவ்வித கவலை உண்டாகுமோ அத்தகு கவலை உண்டாகிறது.''

பின்னர் மன்றோ நிஜாம் தந்த பகுதியைப் பரிபாலித்து வந்தார். 1808இல் தாய்நாடு சென்று 1814ல் திரும்பி வந்து சென்னை அரசாங்கத்தில் பல சீர்திருத் தங்கள் செய்தார். 1819இல் இவர்மேஜர் ஜெனரல் பட் டம் பெற்றார். 1820 இல் சென்னை கவர்னரானார்: இந்தியர்களுக்குப் பல வேலை வாய்ப்புகள் கொடுத்தார். கல்வி வளர்ச்சிக்குப் பாடுபட்டார். 1827 ஆம் வருடம் ஜூலை 6ஆம் தேதி காலமானார். இவரது சிலை சென்னையில் உள்ளது.

மன்றோ தவிர கர்னல் ரீட், கர்னல் வுட் ஹார்கிரேவ் போன்ற அதிகாரிகள் தருமபுரியில் வாழ்ந்துள்ளார்கள்.[76] கி.பி.1808 முதல் 1820 வரை சேலம் மாவட்டத் தலைநகர மாக இருந்த தருமபுரி, பிறகு மாவட்டத் தலைநகர் சிறப்பை இழந்தது. எனினும் கி.பி 1911 முதல் துணை

மாவட்ட ஆட்சியர் அலுவலகத்தைக் கொண்ட நகரமாக விளங்கியது. 2.10.1965 அன்று சேலம் மாவட்டம் இரண்டாகப் பிரிந்தபோது தருமபுரி மாவட்டத்தின் தலைநகரமாகத் தருமபுரி உருவாகியது. இன்று மாவட்டத்தின் பெயரும் தலை நகரத்தின் பெயரும் தருமபுரி என்றே அழைக்கப்படுகிறது. தருமபுரி நகரில் ஆங்கிலேயருக்குக் கீழ் பணிபுரிந்த இந்திய அதிகாரி நரச அய்யராவார். அவர் பெயரில் நரச குளம் தருமபுரி நகரில் இன்றுமுள்ளது.[77] தீர்த்த கிரி முதலியார் என்பாரும் தருமபுரியில் பிறந்தவராவார்.[78]

தற்போதுள்ள தருமபுரி நகரம் விருபாட்சிபுரம், வெள்ளே கவுண்டன் பாளையம், குமாரசாமிப் பேட்டை, அன்ன சாகரம், மதிகோன் பாளையம் ஆகியவற்றைக் கொண்டதாக உள்ளது. மதிகோன் பாளையம் பெயர், மதிகெட்டான் நாடகத்தில் வரும் தலைவன் பெயரில் கி.பி.17ஆம் நூற்றாண்டில் ஏற்பட்டதாகும்.[79] அவ்வாறே விருபாட்சிபுரம், அன்னசாகரம் ஊர்ப் பெயர்கள் விஜய நகர அரசர் காலத்தில் ஏற்பட்டவை எனலாம். வரலாற்றுக் காலத்திற்கு முன்பே, தகடூர் நாகரிகம், கலை, பண்பாடு இவற்றில் சிறந்து இருந்துள்ளது. ஆகவே தொல்பழங் காலமும் தகடூர் நாடும் என்ற தலைப்பில் சுருக்கமாக ஆய்வு செய்து, பின் நடுகற்கள், ஓலைச் சுவடிகள், அருங்காட்சியகம் ஆகியவற்றை மேலோட்டமாகப் பார்த்துவிட்டு, தருமபுரியில் உள்ள கோயில்களை விரிவாகக் காண்போம்.

# தொல் பழங்காலமும் தகடூர் நாடும்

வரலாற்றுக் காலம் என்றும் வரலாற்றுக்கு முற்பட்ட காலமென்றும் வரலாற்றை ஆய்வாளர்கள் பிரிப்பார்கள். எழுத்துச் சான்றுகள் இன்றி மக்கள் பயன்படுத்திய தொல் பொருள் சின்னங்களின் அடிப்படையில் வராலாற்றுக்கு முற்பட்ட கால மக்களின் வாழ்க்கையை அறிகிறோம். தகடூரைப் பொறுத்தவரை பழைய கற்காலக் கருவிகள் இதுவரை கிடைக்கவில்லை. ஆயின் கி. பி. 1916இல் இராபர்ட் புரூஷ்பூட் என்பவர் புதிய கற்காலக் கருவிகளை பருகூரில் கண்டெடுத்து, அங்குப் புதிய கற்காலத் தொழிற்சாலை இருந்ததை வெளிப்படுத்தினார். பின்னர் கப்பல்வாடி, வற்றல்மலை, மூக்கனூர் மலை போன்ற இடங்களில் 'செல்ட்' எனப்படும் கைக் கோடரிகள் பெருமளவில் கண்டுபிடிக்கப்பட்டன. புதிய கற்காலக் கருவிகள் செய்யப் பயன்படும் பசால்ட், டோலரைட் ட்ராப்டைக் முதலான கற்கள் இப்பகுதியில் மிகுதியாக உள்ளன.

தருமபுரி மாவட்டத்தில் மட்டுமின்றி வட ஆர்க்காடு மாவட்டம், சேலம் மாவட்டம், மற்றும் ஆந்திரா,

கருநாடக மாநிலங்களிலும் புதிய கற்காலக் கருவிகள் காணப்படுகின்றன. மக்கள் புதிய கற்காலக் கருவி களை வட்டங்களாகவோ, தனிக் குத்துக் கற்களாகவோ நிறுத்தி வணங்குகின்றனர். சான்றாக அதனை இலளிகம் என்ற ஊரில் இன்றும் காணலாம். புதிய கற்காலக் கருவிகள் வேட்டைக்கு மட்டுமின்றி நிலத்தை அகழவும் பட்டன. தருமபுரி மாவட்டத்தின் எல்லைப் பகுதியில் பயன் அமைந்த பையம்பள்ளி அகழ்வாய்வின் மூலம் புதிய கற்கால மக்களின் வாழ்க்கைப் பழக்க வழக்கங்களை வெளிப்படுத்தப்பட்டன.

## பெருங் கற்காலம்

உலக முழுதும் பெருங் கற்காலச் சின்னங்கள் இருப் பினும், தமிழ் நாட்டில் ஊருக்கு ஊர் பல்வேறு வடிவங் களில் உள்ளன. தருமபுரி மலைப் பாங்கான பகுதி என்பதோடு காடுகள் மிகுதியாக உள்ளதால் பெருங்கல் சின்னங்கள் பலவும் அழியாமல் உள்ளன. கல்திட்டை, கல்பதுக்கை, குத்துக்கல், நடுகல், கற்குவை, கற்கிடை, மண்குவை, வட்டப் புதைகுழி எனப் பல தன்மைகளில் ஈமச் சின்னங்கள் உள்ளன. 'மெகலிதிக் டோம்ப்ஸ்' எனப் படும் கல்திட்டைகள் சில இடங்களில் நூற்றுக்கணக்காக உள்ளன. மகாராஜக்கடை, மல்லப்பாடி போன்ற இடங் களில் இவற்றைக் காணலாம்.

## பெருங்கற்கால ஓவியங்கள்

தமிழ் நாட்டில் முதன் முதலாகத் தருமபுரி மாவட்டம் மல்லப்பாடி எனும் ஊரில்தான் பெருங்கற் கால ஓவியங்கள் கண்டு பிடிக்கப்பட்டன. இவ்வோவியங் களைச் சென்னைப் பல்கலைக் கழகத் தொல்லியல் துறை கண்டு பிடித்தது. பின்னர் கிருஷ்ணகிரி, மகாராஜக்கடை, மல்ல சமுத்திரம், தாளப்பள்ளி, குருவி நாயனப் பள்ளி

முதலிய ஊர்களில் பெருங்கற்கால ஓவியங்கள் தமிழகத் தொல்பொருள் ஆய்வுத் துறையால் கண்டு பிடிக்கப்பட்டன. மலைக்குகைகளில் மட்டுமின்றி கல்திட்டைகளிலும் பெருங்கற்கால ஓவியங்கள் உள்ளன.

பிராம்மி எழுத்து வண்ணத்தில் (ஓவியத்தில்) எழுதப்பட்ட கல்வெட்டு மகாராஜக் கடை மலை உச்சியில் ஈஸ்வரன் கவி(குகை)யில் உள்ளது. "தம்ம தொபக் கோடனயகு காமப்ப" என அங்குள்ள கல்வெட்டு தற்போது படிக்கப்பட்டுள்ளது.

பெருங்கற்கால ஓவியங்களில் பெரும்பாலும் வெள்ளை வண்ணமே பயன்படுத்தப்பட்டுள்ளது. எனினும் காவிநிறத்திலும் (மல்லப்பாடி) கருப்பு நிறத்திலும் (மகாராஜக்கடை)கூட ஓவியங்கள் தீட்டப்பட்டுள்ளன.

மகாராஜக்கடை எனும் ஊரில் கீழ்க்கண்ட ஓவியங்கள் உள்ளன.

அம்பும் கேடயமும் ஏந்தியுள்ள இரு ஆடவர் (குட்டையாக ஒருவரும் உயரமாக ஒருவரும் உள்ளனர்)

புலி, சூரியன், தாய்த் தெய்வம் போன்ற உருவம், பிரபை போன்ற அமைப்பில் தீச்சுவாலையுடன் கூடிய உருவம், குதிரை மீது அமர்ந்த வீரன், காட்டுப் பறவை ஆகியவை தீட்டப்பட்டுள்ளன. பிரபை போன்ற தீச்சுவாலை அக்காலக் கடவுளாக இருக்கலாம்.

மல்லப்பாடியில் குதிரை மீது அமர்ந்த வீரன், மான் உருவங்களைப் பார்க்கிறோம். மேலும், மல்ல சமுத்திரத்தில் வேட்டைக் காட்சிகள், குழுத் தலைவன் புலி மீது அமர்ந்தபடி காட்சி தருதல், சிந்து சமவெளியில் காணப்படும் சில குறியீடுகள், அச்சுக் குத்தப்பட்ட

காசுகளில் காணப்படும் சில குறியீடுகள் முதலியவற்றைப் பார்க்கிறோம். கிருஷ்ணகிரி மலையில் உள்ள ஓவியங்கள் குழு நாட்டியத்தையும் பறவை வேட்டையையும் உணர்த்து கின்றன. தமிழ் நாட்டில் வேறெங்கும் பறவை வேட்டை ஓவியமில்லை எனலாம்.

பெருங்கற்கால ஓவியங்களில் காணப்படும் சில குறியீடுகள், சில பானை ஓடுகளில் பார்க்கிறோம். 'பரதன்' எனத் தமிழ் எழுத்தில் கூடிய பானை ஓடு ஒன்று கடத்தூர் திரு. வெங்கட்ராமனிடம் உள்ளது.

குருவி நாயனப் பள்ளியில் கிடைத்த 5 கால்களை உடைய மண்ஜாடி கருப்பு வண்ணத்தில் ஓவியத்துடன் காணப்படுகிறது. முதுமக்கள் தாழி, ஈமப் பேழை, மதுச் சாடி, மற்றும் இரும்புப் பொருட்கள் பெருங்கல் சின்னங் களில் மிகுதியாகக் கிடைக்கின்றன. திரு. நரசிம்மையா என்பார் தருமபுரி மாவட்டத்தை விரிவாக ஆய்வு செய்து 'பெருங்கல் சின்ன' ஆய்வு குறித்து நூலொன்று எழுதி யுள்ளார். தகடூர் மாவட்ட வரலாற்றுப் பேரவையும், தொல் பொருள் ஆய்வுத் துறையும் இம் மாவட்டத்தில் கண்டெடுத்த பெருங் கற்கால தொல் பொருட்களைச் சேகரித்து தகடூர் அருங்காட்சியகத்தில் வைத்துள்ளன. வண்ணத்தில் கூடிய ஓவியங்கள் மட்டுமின்றி பாறையில் கோட்டுருவம் என்ற நிலையிலும் இம் மாவட்டத்தில் பெருங்கற்கால ஓவியங்கள் உள்ளன. பென்னாகரம் அடுத்த ஏரியூரில் கோட்டுருவ ஓவியத்தை இன்றும் மலை மீது காணலாம். அருகில் வட்டப்புதை குழிகள் காணப் படுகின்றன.

## நடுகற்கள்

இறந்த வீரர்களுக்குக் கல் நட்டு வழிபடுவது சங்க கால வழக்கமாகும். பெருங்கற் காலத்திலேயே நடுகற்கள்

தோன்றிவிட்டன எனலாம். உருவம் ஏதும்மற்ற தனிக் கல்லே நடுகல்லாக இருந்து பின் உருவமும் எழுத்தும் படிப்படியாக வளர்ச்சி அடைந்திருக்க வேண்டும்.

> "காட்சி கால்கோள் நீர்ப்படை நடுதல்
> சீர்த்தகு மரபின் பெரும்படை வாழ்த்தலென்று
> இருமூன்று வகையிண கல்லொடு புறர"

எனத் தொல்காப்பியர் குறிப்பிடுவார்.

நாளடைவில் தனிக் கல்லுக்குப் பதில் நெடு நிலை நடுகல் அல்லது கல்வீடு பெருகியது. இத்தகு நெடு நிலை நடுகற்களில் இறந்துபட்ட வீரனின் உருவத்தை யும் அவனுடன் தொடர்புடையவற்றையும் ஓவியமாக வரைந்தனர். சங்க காலத்தில் நடுசல் என்பது ஓவிய மாகவே இருந்திருக்க வேண்டும். பெருங் கற்கால கல் திட்டைகளில் காணப்படும் ஓவியங்கள் நடுகல் வழி பாட்டைக் குறிப்பிட்டிருக்க வேண்டும். பல்லவர் காலந் தொடங்கி ஓவியத்திற்குப் பதில் சிற்பமாக நடுகல் உருவாக்கப்பட்டது. எழுத்துக்களும் பொறிக்கப்பட்டன. பொதுவாகத் தமிழ் நாட்டிலேயே நடுகற்கள் தருமபுரி மாவட்டத்தில் தான் மிகுதியாக உள்ளன. நூற்றுக் கணக்கான நடுகற்களை இம் மாவட்டத்தில் பார்க் கிறோம். தமிழ் மற்றும் வட்டெழுத்தில் இந்த நடுகற்கள் உள்ளன. தமிழில் மட்டுமின்றி கன்னடம் மற்றும் தெலுங்கு மொழிகளிலும் நடுகற்கள் இம்மாவட் டத்தில் மிகுதியாக உள்ளன. தருமபுரி அருங் காட்சி யகத்தில் பல நடுகற்கள் காட்சிப் பொருள்களாக வைக் கப்பட்டுள்ளன. நடுகற்கள் மட்டுமினறி பன்றிக்குத்திப் பட்டான் என்பன போன்ற வீர நடுகற்களும் இம்மாவட் டத்தில் உள. இவை கல்வெட்டுடனும் கல்வெட்டின்றி யும் உள்ளன.

**காசுகள்**

சங்க காலத்தில் இந்தியா முழுவதும் அச்சுக் குத்தப் பட்ட காசுகள் வழக்கில் இருந்துள்ளன. இந்தியாவில் பல மாநிலங்களில் அச்சுக் குத்தப்பட்ட வெள்ளிக் காசுகள் கண்டு பிடிக்கப்பட்டன. தமிழ் நாட்டில் பல மாவட்டங்களில் அச்சுக் குத்தப்பட்ட காசுகளும் உரோ மானிய காசுகளும் சங்க கால சேர சோழ, பாண்டிய, மலையமான் காசுகளும் கிடைத்துள்ளன. அச்சுக் குத்தப் பட்ட காசுகள் எண்ணிக்கையில் குறைவாகவே கிடைத் துள்ளன. ஆயினும் தருமபுரி மாவட்டம் நவலை கிராமத் தில் 335 அச்சுக்குத்தப்பட்ட வெள்ளிக் காசுகள் பல் வேறு வடிவங்களில் கிடைத்துள்ளன. உரோமானிய எழுத்துக்களும் உருவங்களும் சில காசுகளில் பொறிக் கப்பட்டுள்ளன. இவை கள்ளக் காசுகளாயிருத்தல் கூடும், என்று டாக்டர் இரா. நாகசாமி அவர்கள் கருத்துத் தெரி வித்துள்ளார். நாணயவியல் அறிஞர்களுக்கு வியப்பை யூட்டும் அக்கள்ள நாணயங்கள் உரோமானியர்கள் வேண்டுமென்றே செய்து வெளியிட்டவையாகும். இக் காசுகள் கள்ள நாணயமா? இல்லையா? என்பது குறித்து ஆய்வாளர்களிடையே விவாதமே நிகழ்ந் துள்ளது.

பல்லவர் காலத்தைச் சேர்ந்த காசுகளும், சோழ, பாண்டிய, கங்க, விஜய நகர மற்றும் குறுநில அரசர் களின் காசுகளும் இம் மாவட்டத்தில் மிகுதியாகக் கிடைத் துள்ளன. இது வரை சேகரிக்கப்பட்ட பழங்காலக் காசு களில் வெள்ளியுடன் பொற் காசுகளும் செம்புக் காசு களும் அடங்கும். தருமபுரி வரலாற்றை எழுத இக் காசுகள் பெரிதும் உதவியாக உள்ளன. சேகரிக்கப்பட்ட பழங்காலக் காசுகள், அருங் காட்சியகத்தில் வைக்கப் பட்டுள்ளன. காசுகள் மட்டுமின்றி, ஐம்பொன் சிலை களும் அவ்வப்போது கண்டு பிடிக்கப்பட்டு வருகின்றன.

## ஓலைச் சுவடிகள்

தருமபுரி மாவட்டத்தில் எண்ணற்ற ஓலைச் சுவடிகள் தனிப்பட்டவர்களிடம் உள்ளன. வரலாறு, இலக்கியம், வைத்தியம், சோதிடம் போன்ற பல துறைகளை அச் சுவடிகள் கொண்டுள்ளன. கி. பி. 17 ஆம் நூற்றாண்டில் தருமபுரியில் நடிக்கப் பெறற **"மதிகெட்டான் நாடகம்"** என்பது சுவையான ஒன்றாகும். அவ்வாறே **பிரகலாத சரித்திரம், கிருஷ்ண நாடகம், மார்க்கண்டேய நாடகம்** என்பவை குறிப்பிடத்தக்கன எனலாம். மார்க்கண்டேய நாடகம் தமிழ்ப் பாடல்களுடன் தமிழில் எழுதிய வடுகுப் பாடல்களையும் கொண்டதாக உள்ளது.

கோயில் தலபுராணங்களைக் கூறும் சில சுவடிகளும் இவற்றில் உள்ளன. சிறந்த சுவடிகள் தருமபுரி அருங் காட்சியகத்தில் காட்சிப் பொருளாக வைக்கப்பட்டுள்ளன. ஓலையில் மட்டுமின்றி துணியில் எழுதப்பட்ட ஆவண மும் அருங்காட்சியகத்தில் உள்ளன. இம் மாவட்டத்தில் கண்டு பிடிக்கப்பட்ட பல செப்பேடுகளின் வாயிலாகத் தருமபுரியின் பழங்கால வரலாறு மேலும் விளக்கமா கிறது. குயவருக்கும் தீர்த்த மலைக்கும் உள்ள தொடர்பைக் காவேரிப் பட்டணம் குலாலர் கோயிலில் உள்ள செப்பு பட்டயம் விளக்குகிறது. தவிர வெளி உலகுக்குத் தெரியாமல் சில செப்பேடுகள் தனியார் வசம் உள்ளன. அவை ஆய்வாளர்க்குக் கிடைத்தால் தரும புரியின் வரலாறு மேலும் தெளிவாகும்.

## நாடகம், விழாக்கள்

இம் மாவட்டத்தில் பல இடங்களில் தொலுங்கிலும் நாடகங்கள் நடக்கின்றன. புராதன கலைகளைக் கிராம மக்கள் போற்றி வருகின்றார்கள். **'மண்டு விழா'** என்பது பழங்காலந் தொடங்கி இன்று வரை சில கிராமங்களில் நடத்தப் பெறுகின்றன. **மன்று** என்பதே **மண்டு** என

மாறியுள்ளது. பெருந் தெய்வங்களாகிய சிவ, விஷ்ணு வழிபாட்டைக் காட்டிலும் சிறு தெய்வ வழிபாடே, குறிப்பாக நடுகல் வழிபாடு அல்லது கிராமதேவதை வழி பாடே இம்மாவட்டத்தில் மிகுதியாக நடை பெறு கிறது. சங்க நூலான புறநானூறும் நடுகல் வழிபாட்டை உயர்வாகக் கூறுகிறது.

## தருமபுரி அருங்காட்சியகம்

தருமபுரி பேருந்து நிலையத்தின் அருகில் தொல் பொருள் ஆய்வுத் துறை அருங்காட்சியகம் அமைந்து உள்ளது. தருமபுரி மாவட்டத்தில் சேகரிக்கப்பட்ட நடு கற்கள், தொல் பொருட்கள், காசுகள், ஓலைச் சுவடிகள், போன்றவை காட்சிப் பொருள்களாக வைக்கப் பட்டுள்ளன.

இவ்வருங் காட்சியகம் குறித்துத் தனியாக கையேடு வெளியிட உள்ளதால் இங்கு விரிவாகக் கூறவில்லை. தருமபுரி மாவட்ட ஆட்சித் தலைவராக இருந்த திரு. சிவசுப்பிரமணியம் அவர்களது முயற்சியாலும் இவ்வருங் காட்சியகம் உருவாயிற்று. அவ்வாறே தருமபுரியில் வாழ்ந்த தமிழ்ப் புலவருக்கு வழங்கிய தானத்தைக் குறிப் பிடும் ஓலைச் சுவடி தந்த இலட்சப் பிரபு என்ற பள்ளி மாணவனையும் இங்கு குறிப்பிட்டுப் பாராட்ட வேண் டும். இனி அச் சாசனத்தைக் காண்போம்.

# தருமபுரியில் வாழ்ந்த தமிழ்க் கவிஞர்.

தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை தருமபுரி அருங்காட்சியகம், தருமபுரியில் 5 ஏடுகளைக் கொண்ட வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த ஓலைச்சுவடியைச் சேகரித்தது. தருமபுரி அதியமான் மேல்நிலைப் பள்ளியில் ஏழாம் வகுப்பு படித்த மாணவன் இலட்சப்பிரபு மேற்கண்ட சுவடியை என்னிடம் வழங்கினான். இச்சுவடியைப் படித்து ஆய்வு செய்தேன். கி.பி. 1747ல் தருமபுரியில் வாழ்ந்த வாணிக வைசிய மரபினைச் சேர்ந்த கவிதீர்த்த வாத்தியாருக்கு அம்மரபினைச் சேர்ந்தவரகள் ஒன்றுகூடிக் கௌரவித்தனர். கவிதீர்த்த வாத்தியார் சிறந்த தமிழ்க் கவிஞராக இருந்துள்ளார்.

இவர் கலித்துறை, கழிநெடில் விருத்தம், ஆசிரிய விருத்தம், இன்னிசை, தாழிசை, வண்ணம், பதம் இந்த வகைகளில் தமிழில் பிரபந்தங்கள் பாடி உள்ளார். அப்பிரபந்தங்கள் பஞ்ச லட்சணத்துடன் இனிமையாக இருந்ததால் வாணியர்கள் அப்பாடலைக் கேட்டு மகிழ்ந்தார்கள். புலவருக்குச் சிறப்பு செய்ய முற்பட்டார்கள். புலவர், வாத்தியார் என்றும் ஐயர் என்றும் குறிப்பிடப்படுகிறார். சாலிவாகன சகாப்தம் 1667 (கி. பி. 1747) பிரபவ வருடம் வைகாசி மாதம் ஏழாம் தேதி பூர்வபட்சம் பஞ்சமி ரோகிணி நட்சத்திரம் நிறைந்த சோமவாரமும் கூடின அமுர்த

சித்தியோக சுப சோபன தினத்தில் வக்குவமகாரிஷி குடியில் பிறந்த ஆயிர வாணியர் தருமபுரி அருகே உள்ள சோகத்தூரில் கூடுகின்றனர்.

ஏட்டின் ஆரம்பத்தில் விஜய நகரப் பேரரசருடைய மெய்க்கீர்த்தி விரிவாகக் குறிக்கப்படுகிறது. அம்மரபினைக் கூறியபின் டில்லி மொகலாயப் பேரரசர் அபரங்க பாஷா (ஔரங்கசீப்), பின் டில்லி பாக்ஷா சாயபு (ஷா ஆலம்கீர்) கூறியபின் மைசூர் உடையார், நஞ்சராஜா தேவராஜா ஆகியோரின் கைப் பொம்மையாகவும் பின் ஹைதர் அலியின் கண்காணிப்பிலும் இருந்ததாக வரலாறு குறிப்பிடுகிறது. சிக்க (சின்ன) கிருஷ்ணராஜ உடையார் அல்லது இரண்டாம் கிருஷ்ணராஜ உடையார் (கி. பி. 1747 — 1786 வரை) ஆட்சியின் போது தருமபுரி மாவட்டம் மைசூர் உடையார் ஆளுகைக்கு உட்பட்டிருந்தாகத் தெரிகிறது. இவருடைய ஆட்சிக் காலத்தில் தான் சாசனம் எழுதப்பட்டது.

மெய்க்கீர்த்தியில் 'செகதேவிராய மகாராயர் பெயரும் வருகிறது ஜெகதேவிராயர் என்ற பெயரில் சில குறுநில மன்னர்களை விஜயநகர வரலாற்றின் கடைசி கால கட்டத்தில் பார்க்கிறோம். ஈண்டுள்ள ஜெகதேவிராயன் பெயருக்கு அடுத்தபடியாக அபரங்க பாக்ஷா குறிக்கப் படுவதால் ஔரங்கசீப் காலத்தில் வாழ்ந்த ஜெகதேவிராயரே இவர் எனலாம். இவர் சிறந்த வீரராவர்.

விஜயநகர மெய்க்கீர்த்தியை யடுத்து, ஆயிர வாணிய மரபினர் பெருமைகளைப் பறை சாற்றும் 'வைசிய மெய்க்கீர்த்தி' விரிவாகப் பேசப்படுகிறது. சித்திரமேழி பெரிய நாட்டார், நாட்டுக்கோட்டை செட்டிகள் ஆகியோர் தமக்கென்று மெய்க்கீர்த்திகளை வைத்திருந்தது போல் இவர்களும் வைத்திருந்தார்கள் போலும்.

வக்குவமகாரிஷி கோத்திரத்தில் பிறந்தவராக வாணிக வைசியர் கூறிக் கொள்கின்றனர். மூன்றாங்குடித் தலைவர் என்றும் கூறுகின்றனர். அரசர் பின்னோர் என்றும். அந்தணர் அரசர் ஆகியோருக்கடுத்தவர் [illegible] என்றும் இலக்கியங்கள் கூறுவதை ஈண்டு ஒப்பிடலாம். சாசனத்தில் உள்ள ஆயிர வாணியருடைய விருதுகளை இனிக் காண்போம்.

செகஞ்சோதி நகரப்பிரதாபர், சகஸ்திர கோத்திர கோத்திராதிபர், தசாங்க விருதுக் கதிபர், தெய்வசம் சந்தம் பெற்றவர், அழகாபுரிக் கதிபர், வைகுந்த வளநாடு படைத்தவர், கருடக் கொடிக்கதிபர், கமலகண்டிகை ரதாதிபர், பம்பைநதி கிட்கிந்தைப் படைத்தவர், தொண்டையந்தார் மார்பர், அயிராபதத் தலைவர், கலிமாருதப் புரவி வல்லபர், பைநாக முரசும் படைத்தவர், நகரமுக மண்டவீரர், ராசஸ்தான பூஷிதர், காவேரிக்கரை கண்ட வல்லபர், கம்பனூர் கோவில் செம்பொன்னால் வேய்ந்தவர், வரதருக்குக் கற்பூர விளக்கு வைத்தவர், ஈழக்கடார முறையிட்டவர். ஆணையிடை மதித்தவர், சேர சோழ பாண்டியர் மூவருக்கும் முடிதரித்தவர், சீவக மகாராசனைக் காத்தவர், அவ்வை கையி லந்தாதி பெற்றவர், அவ்வைக்குப் பொற்படா மீய்ந்தவர். சோழனிட்டப் பீடத்துக்கெதிர் 'பீடமிட்டவர், சோழன் பெண் கேழ்க்கச் சுணங்களைக் கட்டி வைத்தவர், தோழனுக்காகத் தலையரிந்த கீர்த்தி படைத்து தலைபெற்றவர், பொன்பெற்றி வேளாண் புத்திரனுக்காகத் தன் புத்திரனைத் தன்வாளிலெ தீர்த்தவர்' திருவிடமருதூர் மருதப்பருக்கு அன்பிற்பெரியாளைத் திருக்கலியாணம் செய்து கொடுத்தவர். தென்னனைச் செண்டாடி வென்றவர், திரிவித சங்கத் திருந்து தமிழாய்ந்தவர், தன்மதா வளவர், அபையதா வளவர்; தனவசீகரம், தானிய வசீகரம், சுகன வசீகரம், முகவசீகரம் ராசவசீகரம் பெற்ற வசிகர், பஞ்ச காவியத் தலைவர், அரிபூசை, குருபூசை, சிவபூசை, மயேசுரபூசை

மறவாத வல்லபர், அம்பலத்தாடும் குருசுவாமியார் சரண்ராசிய தொண்ணூத் தெண்ணகரமும், பதினென் பூமியும், ஐம்பத்தாறுதேசமும் படைத்த இளவரசாகிய அணிகேசர்.

மேற்கண்ட விருதுகள் பல உபசார வழக்காகக் குறிக்கப்படினும் சில வரலாற்றுச் செய்திகளும் இதில் உள்ளன. முச்சங்கமிருந்து தமிழ் ஆய்ந்த செய்தி இதில் வருகிறது, அவ்வையாரால் பாராட்டப்படுவதும் அவ்வைக்குப் பரிசில் நல்குவதும் பெருமை என்பதும் தெரிகிறது. 98 நகரம், பதினெண் பூமி, 56 தேசம் வணிகர்களுக்குரியதாக இதில் பார்க்கிறோம் பத்துரிசமானர் நல்லதம்பி செட்டியார் மகன் செட்டியப்பச் செட்டியார் முதலில் குறிக்கப்படுகிறார். இவர் மரபினர் இன்றும் பென்னாகரத்தில் உள்ளனர். பின்னர் 34 ஊர்களிலிருத்து வந்த 58 வணிகர்கள் சேர்ந்து, முடிவு எடுக்கின்றனர். இம்முப்பத்து நான்கு ஊர்களும், ஊரும் பேரும் ஆய்வு செய்பவர்களுக்குத் துணை புரியும்.

தருமபுரி பேட்டை — இவ்வூரைச் சேர்ந்த ஆடியபாத செட்டியார், முத்தப்ப செட்டியார், குழந்தை செட்டியார், அருணாசல செட்டியார் ஆகியோர் சபைக் கூட்டத்தில் கலந்து கொள்கின்றனர். தருமபுரி கடைத் தெருவே தருமபுரி பேட்டையாகும்' கோட்டைக் கோயில் மற்றும் அதையொட்டிய பகுதிகள் தருமபுரியாகும். ஹளே தருமபுரி என்றும் பழைய தருமபுரி என்றும் வழங்கம்படும் பகுதி 18 ஆம் நூற்றாண்டில் தருமநல்லூர் என வழங்கப் பட்டுள்ளது. சங்க காலந் தொடங்கிப் பல நூற்றாண்டுகள் வரை (கி. பி. 17ம் நூற்றாண்டு வரை) தருமபுரி நகரமும் அதையொட்டிய ஊர்களும் தகடூர் என்றும் தகடை நாடு என்றும் வழங்கப்பட்டமை கல்வெட்டுகளாலும், இலக்கியங்களாலும் நாம் பார்த்தோம்.

மாறண்டபளி பேட்டை — இவ்வூர் இன்று மரண்ட ஹள்ளி என வழங்கப்படுகிறது. இவ்வூரைச் சேர்ந்த சின்னண்ண செட்டியார், சோலையப்ப செட்டியார் கூட்டத்தில் கலந்து கொண்டார்.

பென்னகரம்பேட்டை — இன்றுள்ள பென்னாகரமே யாகும் இவ்வூரிலிருந்து பிழை பொறுத்த செட்டியார், குப்பிச் செட்டியார் ஆகியோர் கூட்டத்தில் பங்கு கொண் டனர். குப்பிச் செட்டியார் மரபினர் இன்றும் வாழ்ந்து வருகின்றனர்.

காவேரிபுரம் — காவேரியாற்றிற்கருகில் இன்றும் இதே பெயரில் இவ்வூர் உள்ளது. இவ்வூரைச் சேர்ந்த தாசி செட்டியார் கவுதள்ளி பெருமாள் செட்டியார், தாண்டவ செட்டியார் கூட்டத்தில் கலந்து கொண்டனர்.

பண்டபள்ளி — இன்றும் இதே பெயரில் இந்த ஊர் உள்ளது. சிதம்பர செட்டியார் கலந்து கொண்டார்.

ஆனூறு — இன்றும் ஆனூர் என்றே அழைக்கப்படு கிறது. தம்பி செட்டியார் கலந்து கொண்டார்.

மாம்பளி — இன்றுள்ள மாம்பட்டி ஊர் போலும். இந்த ஊரிலிருந்து பெரியம்பல செட்டியார் கலந்து கொண்டார்.

சத்தியகாலபாளையம் கொள்ளேகால் — கொள்ளே கால் என்ற பெயரில் ஊர் இன்றுள்ளது. இந்த ஊரி லிருந்து பச்சை செட்டியார் கலந்து கொண்டார்.

சவுளிகரை — இன்றுள்ள சவுளூர் போலும். இவ் வூரைச் சேர்ந்த சின்னவாணிய செட்டியார் கலந்து கொண்டார்.

டெங்கணிக்கோட்டை — இன்று டெங்கிணிக்கோட்டை அல்லது தேன் கணிகோட்டை என வழங்கப்படுகிறது. பழங்காலத்தில் தாக்கணங்கு கோட்டை என வழங்கப் பட்டது. இவ்வூரிலிருந்து நஞ்சைய செட்டியார், முத்தலப்ப செட்டியார் வைசியர் கூட்டத்தில் கலந்து கொண்டனர்.

தெல்லமங்கலம் — இன்றுள்ள கெல்லமங்கலமேயாகும் இங்கிருந்து நஞ்சைய செட்டியார், முத்தப்ப செட்டியார் கூட்டத்தில் கலந்து கொண்டனர்.

ரத்னகிரி — இன்றும் இதே பெயரில் இவ்வூர் உள்ளது. இந்த ஊரைச் சேர்ந்த சென்னியப்பச் செட்டியார் கூட்டத்தில் கலந்து கொண்டார்.

பழம்பேட்டை — பழைய கிருஷ்ணகிரியே பழம் பேட்டையாகும். இவ்வூரைச் சேர்ந்த முனிய செட்டி யார் சபை கூட்டத்தில் கலந்து கொண்டார். வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த ஊர் இதுவாகும்.

ஊடியதுருகம் — இன்றுள்ள ஊடேதுருகமே அன்று ஊடியதுருகமாக இருந்துள்ளது. ஊடே என்ற கன்னடச் சொல் தமிழில் ஊடிய என மாற்றப்பட்டது போலும். அன்றி, ஊடிய என்ற சொல் ஊடே என மாற்றப்பட்ட தாகவும் குறிப்பிடலாம். சென்னி செட்டியார் இவ்வூர் சார்பாகச் சபையில் கலந்து கொண்டார்.

மல்லிகான்துருகம் — இன்றுள்ள மல்லிகார்ச்சுனதுருக மேயாகும். இவ்வூரிலிருந்து அம்பலத்தாடி செட்டியார் கலந்து கொண்டார்.

சூளகிரி — இன்றுள்ள சூளகிரியேயாகும். இங்கிருந் துக் குப்பிச் செட்டியார் கலந்து கொண்டார்.

இராயக்கோட்டை — இராயக்கோட்டை என்றே இன்றும் அழைக்கப்படுகிறது. பிள்ளையப்ப செட்டியார் இவ்வூர் சார்பாகக் கலந்து கொண்டார்.

பாலக்கோடுப்பேட்டை — இவ்வூர் பாலக்கோடு என்று மட்டும் இன்று வழங்கப்படுகிறது, பெரியம்பல செட்டியார், சந்தி செட்டியார் இருவரும் வாணிக வைசியர் கூட்டத்தில் கலந்து கொண்டனர்.

பாப்பாரப்பட்டி — இன்றும் இதே பெயரில் அழைக்கப்படுகிறது. இவ்வூரிலிருந்து சின்னய செட்டியார், மொட்டைய செட்டியார் கலந்து கொண்டனர்.

இண்டூர் — இன்றும் இண்டூர் என்றே வழங்கப்படுகிறது. வடமை செட்டியார், பேரம்பல செட்டியார் இருவரும் கூட்டத்தில் கலந்து கொண்டனர்.

அதிமாங்கோட்டை — அதியமான்கோட்டை என்ற பழம் பெயரே அதிமாங்கோட்டை என இதில் உள்ளது. இன்று அதிமன்கோட்டை என வழங்கப்படுகிறது. நொளம்பர் மற்றும் சோழர் காலத்தில் மகேந்திர மங்கலம் என இவ்வூர் அழைக்கப்பட்டது. கி.பி. 14ஆம் நூற்றாண்டளவில் இவ்வூரிலிருந்து நாவல் என்ற ஊருக்குப் பெருவழி இருந்துள்ளது. அதற்கு அதியமான் பெருவழி என்று பெயர். சங்க காலத்தில் அதியமான்களின் கோட்டையாக இருந்த இவ்வூரில் பிற்காலத்தில் பல கோயில்கள் கட்டப்பட்டன. சமணர் கோயில், பெருமாள் கோயில் சிவன் கோயில், காளி கோயில், மட்டுமின்றி நடுகற்களும் இவ்வூரில் உள்ளன. இவ்வூரைச் சேர்ந்த அழகச்சி செட்டியார் கி.பி. 1747ல் கூடிய வாணிக வைசிய சபை கூட்டத்திற்குச் சென்றிள்ளார்.

சோகத்தூர் — இன்றும் இவ்வூர் இதே பெயரில் வழங்கப்படுகிறது. இவ்வூருக்கருகில்தான் அதியமான்

பெருவழி 29 ஆம் காத மைல்கல் உள்ளது. இவ்வூரில்தான் வாணிக வைசிய கூட்டம் விக்கினேஸ்வரன் கோயில் முன் மண்டபத்தின் ஆலமரத்தினடியில் கூட்டப்பட்டது. அம்பலத்தாடி செட்டியார், சின்னமுத்து செட்டியார் ஆகியோர் கூட்டத்தில் பங்கு கொண்டனர். திரு. டி சி புஷ்பாகரன் இன்று தருமபுரி அம்பலத்தாடி செட்டித் தெருவில் வசித்து வருகிறார். இவர் குடிக்குச் சோகத் தூரான்குடி என்றே பெயராகும்.

சோம்பள்ளி — இன்று சோம்பள்ளி அல்லது சோம் பட்டி என இவ்வூர் அழைக்கப்படுகிறது. கூட்டத்திற்கு இவ்வூர் சார்பாக நல்லதம்பி செட்டியார் சென்றுள்ளார்

அனுமந்தபுரம் — இவ்வூர் இன்றும் இதே பெயரில் வழங்கப்படுகிறது. பெரியண்ண செட்டியார், வேட்ட ராய செட்டியார் இருவரும் கூட்டத்தில் கலந்து கொண் டனர்.

காரிமங்கலம் — முதல் மகேந்திரன் ஏழாம் ஆட்சி யாண்டு முதல் (கி. பி. 6 ஆம் நூற்றாண்டு) இந்த ஊர் காரிமங்கலம் என்றே வழங்கப்பட்டு வருகிறது. இங்குப் பல கோயில்கள் உள்ளன இவ்வூர் சார்பாக வேட்ராய செட்டியார் கூட்டத்திற்குச் சென்றுள்ளார்.

காவேரிப்பட்டினம் — தருமபுரி மாவட்டத்தில் நீர்வள முள்ள செழிப்பான ஊர்களில் ஒன்றாகும். இன்றும் இதே பெயரில் ஊர் வழங்கப்படுகிறது. வெங்கிட செட்டியார், ராமி செட்டியார் கூட்டத்திற்குச் சென்றனர்.

கிருஷ்ணகிரி — இவ்வூரின் பழைய பெயர் மேலைக் கோட்டையாகும். முதலாம் கிருஷ்ணராஜ உடையார் காலத்தில் கி. பி. 17 ஆம் நூற்றாண்டளவில் கிருஷ்ணகிரி

பெயர் தோன்றியிருக்கலாம். புதிய கிருஷ்ணகிரி தவிர பழைய பேட்டையும் கிருஷ்ணகிரியில் உள்ளன. தொன்மையான கோவில்களும், கோட்டையும் பழைய பேட்டையில்தான் உள்ளன. கிருஷ்ணகிரியைச் சேர்ந்த வேங்கிட செட்டியார், மொட்டைய செட்டியார் இருவரும் சபை கூட்டத்தில் கலந்து கொண்டனர்.

செகதேவி — ஜெகதேவிராயன் பெயரில் தோன்றிய ஊர், பாரமஹால் (12 கோட்டைகள்) கோட்டைகளில் ஒன்றாகும். இன்றும் இவ்வூர் இதே பெயரில் உள்ளது. மல்ல செட்டியார் சபை கூட்டத்தில் கலந்து கொண்டார். செகதேவிதுர்க்கம் என்றும் இவ்வூர் அழைக்க படும்.

மலைப்பாடி — இவ்வூர் இன்று மல்லப்பாடி என்று வழங்கப்படுகிறது. இவ்வூரில்தான் முதன் முதலில் கற்கால ஓவியங்கள் (தமிழகத்தைப் பொறுத்தவரை) கண்டு பிடித்தனர். கோட்டையும், சிற்ப வேலைப்பாடு களுடன் கூடிய விஜயநகர அரசர் கால இரண்டு கோயில்களும் இவ்வூரில் உள்ளன. இவ்வூர் சார்பாகப் போத்த செட்டியார் சபை கூட்டத்திற்குச் சென்றுள்ளார்.

திருப்பத்தூர் — இவ்வூர் இன்று வடஆர்க்காடு மாவட்டத்தில் உள்ளது. இவ்வூரைச் சேர்ந்த நாராயண செட்டியார், பூமாலை செட்டியார், கதவணி பச்சை முத்து செட்டியார் ஆகியோர் கூட்டத்திற்குச் சென்றுள்ளனர்.

கல்லாவி — இன்றும் இதே பெயரில் இவ்வூர் உள்ளது. குண்டு செட்டியார், சென்னி செட்டியார், இருவரும் கூட்டத்திற்குச் சென்றுள்ளனர்.

கம்பைநல்லூர் — இன்றும் இதே பெயரில் இந்த ஊர் வழங்கப்படுகிறது. ம்பரம்பல செட்டியார், பிரமி செட்டியார் இருவரும் கூட்டத்திற்குச் சென்றுள்ளனர்.

அரியூர் — கி. பி. 13-ஆம் நூற்றாண்டு முதல் அரியூர் என வழங்கப்பட்டு வரும் இந்த ஊர் இன்று படித்தவர்கள் மத்தியில் அரூர் என்றும் பாமர மக்கள் மத்தியில் அரியூர் என்றும் அழைக்கப்படுகிறது. இந்த ஊருக்குப் பிரதி பெயராக **விடுகாதழகிய நல்லூர்** என்ற பெயரும் இருந்துள்ளது. இந்த ஊரைச் சேர்ந்த வேட்டராய செட்டியார் கூட்டத்திற்குச் சென்றுள்ளார்.

தென்கரைக்கோட்டை — இன்றும் இதே பெயரில் இந்த ஊர் அழைக்கப்படுகிறது. சிறந்த தரைக்கோட்டை இங்குள்ளது. இந்த ஊரைச் சேர்ந்த நல்லபிரமி செட்டியார், சடைய செட்டியார் இருவரும் கூட்டத்தில் கலந்து கொண்டனர். மேற்கண்ட 58 பேர்கள் தவிர மற்றும் பலரும் கலந்து கொண்டதாகச் சாசனத்தில் பார்க்கிறோம்.

வாணிய வைசியர்கள் அனைவரும் பஞ்ச லட்சணத்துடனும், அமிர்தவாக்காகவும், கலிதீர்த்த வாத்தியார் பாடல் பாடி வந்ததால் மிகவும் மகிழ்ந்து பாக்கு வெற்றிலை உடுகறை (உடுக்கும் வேட்டி) உச்சிதமும் கொடுத்து நம்ம உறமுறைக்குள்ளே இப்படி ஒருவர் இருக்க நமக்கும் மெத்த அழகுதானேயென்று பாடி வந்த தமிழுக்குத் தியாகவரியாக வேணுமென்று பத்து பேரும் சம்மதித்துக் கலிதீர்த்த வாத்தியாருக்கு மேரை வழங்க முடிவு செய்கின்றனர். வாத்தியார் பரம்பரைக்குத் தொடர்ந்து மேரை என்றைக்கும் கிடைக்கும்படி ஏற்பாடு செய்கின்றனர் பத்துபேர் என்பது கூட்டத்திற்கு வந்த 58 பேரைப் பொதுவாகக் குறிப்பிடும். ஆண்டிற்கு ஒரு பணம் ஒவ்வொரு குடும்பமும் புலவர் குடும்பத்திற்குத் தர வேண்டும்.

கலியாண காலத்தில் மணப்பெண்ணும், மணமகனு மாகத் தலா ஒரு பணம் தரவேண்டும். வாத்தியாரவர்கள் சாதாரணமாக யார் வீட்டுக்காவது வந்தால் மரியாதை யுடன் வரவேற்று மகிழ்ச்சியாக உடுகறை வெகுமதி வழங்க வேண்டும். கலியாண காலத்தில் புலவர் திரு மணத்திற்கு வர இயலாவிடினும் உறமுறையாரிடம் புலவருக்குத் தர வேண்டிய வெகுமதிகள் தந்து அனுப்ப வேண்டும். இத்தானம் 'மேறை' என்ற சொல்லால் வழங்கப்படுகிறது. தானத்தைக் காப்பவர் பெறும் புண்ணியமும் தானத்தை அபகரிப்பவர் அடையும் பாவத்தையும் பின்னர் பார்க்கிறோம். சபையார் எடுத்த முடிவிற்குச் சாட்சியாக விநாயகரையும் மன்றில் உன்ன மாரியம்மனையுமே குறிப்பிடுகின்றனர். இது தான பட்டையங்களில் புதுமையானதாகும். இந்தச் சாசனத்தைக் காக்கங்கரை அதிகாரி நஞ்சையன் எழுதி யுள்ளார். சாசனத்தின் இறுதியில் அன்பிற் பெரி யாளம்மன், சரசுபதியம்மன், அம்பலத்தாடும் சிவன், காமாட்சிதேவி ஆகியோர் கிருபை குறிப்பிடப்படுகிறது.

சாசனம் ஓலைச்சுவடியில் மட்டுமன்றிச் செப்பேட் டிலும் இருந்திருக்க வேண்டும். சாசனத்தில் குறிப்பிட்டப் படி கலிதீர்த்த வாத்தியார் குடும்பத்திற்குச் சமீபகாலம் வரை திருமணத்தின் போது திருமண வீட்டார் முதல் மரியாதை செய்து வந்தனர். சுமார் 30 ஆண்டுகளுக்கு முன் பென்னாகரத்தில் நடைபெற்ற வாணியர் திருமண மொன்றில் கலிதீர்த்த வாத்தியார் பரம்பரையினர் திரு மணத்திற்கு வராத நிலையில் திரு ராஜரத்தினம் என்பவர், கலிதீர்த்த வாத்தியார் குடும்பத்தாருக்கு மரியாதை பொருட்கள் தர வேண்டியதில்லை என்று கூற, தரும புரியிலிருந்து சென்றிருந்த வாணியர்கள் எதிர்ப்பு தெரி வித்தனர். திருமண வீட்டாருக்குச் சங்கடமேற்பட்டது. இறுதியில் கலிதீர்த்த வாத்தியார் குடும்பத்திற்குரிய பொ ருட்கள் தனியாக எடுத்துவைக்க அனைவரும் உடன்பட்

டனர். பின் தருமபுரியில் தங்கவேல் வாத்தியாரிடம் 'கலிதீர்த்த வாத்தியார் பரம்பரையினர்) இருந்த ஓலைச் சுவடி சாசனத்தை (நமக்கு கிடைத்துள்ள இந்த சாசனத் தின்படி) நகல் செய்து திரு. ராஜரத்தினத்திடம் காட்ட அவர் வாத்தியார் குடும்பத்திற்கு முதல் மரியாதை தரு வதின் தாத்பரியத்தை உணர்ந்து கொண்டதாகத் திரு. புஷ்பாகரன் தமது பழைய அனுபவத்தை என்னிடம் குறிப்பிட்டார். தங்கவேல் வாத்தியாரின் மகனே திரு தாஸ் (நகராட்சிப் பள்ளியில் ஆசிரியராகப் பணிபுரிந்து வருகிறார்) ஆவார். திரு தாஸின் மகனே நமக்குச் சுவ டியை அன்பளிப்பாக வழங்கிய இலட்சப்பிரபு என்ற மாணவனாகும். சாசனம் பிழையின்றி எழுதப்பட்டுள் ளது. ஐ, மற்றும் ஔ, அய், அவ், என்றோ அன்றி அவு என்றோ எழுதப்பட்டுள்ளன. மே '86ல் வாணியர் மாநாடு நடைபெற்ற சமயத்தில் மேற்கண்ட சாசனத்தைக் கண்டுபிடித்து விரிவாக ஆய்வு செய்ததற்காக என்னைப் பெரிதும் பாராட்டினார்கள், தானம் பெற்ற புலவர் கலிதீர்த்த வாத்தியார்' தஞ்சை மாவட்டம் வைத் தீஸ்வரன் கோயிலிருந்து வந்தவராகும். இப்புலவர் மர பினர் இன்றும் வைத்தீசுவரன் கோயிலுக்குச் சென்று வரு கின்றனர்.

## ஓலைச்சுவடி வாசகம் வருமாறு

ஸ்ரீமன் மண்ட லேஸ்பரன் மேதினி சூரகண்டன் கட்டர் சாளுவன் தரணி பரிபாலன் தரணி பராக்கிறா யன் சத்த சமுத்திராதிபதி ராசாதி ராசன் ராச பரமே சுபரன் ராசகெம்பீரன் ராச நாராயணன் பாஷைக்குத் தப்புவராய கண்டன் கண்டனாடு கொண்டு கொண்ட னாடு கொடாதான் துலுக்கர் தளவிபாடன் துலுக்கர் மோகந்தவிழ்த்தான் ஒட்டியர் தளவிபாடன் ஒட்டியர் மோகந்தவிழ்த்தான் ஆரியர் தளவிபாடன் ஆரியர் மோகந் தவிழ்த்தான் யீழந்திறை கொண்ட பெருமான் சகரந்

திறை கொண்டபெருமான் தேசந்திறை கொண்ட பெரு மான் யீழமுங் கம்பளமும் எண்மண்டலமுங் கொண்ட சங்கீத சாயுத்திய வித்தியா வினோதன் நவகோடி நாரா யணன் சேரசோழ பாண்டிய பிறதெஷ்டாசாரியன் வீரன் தினவரத சூரன் கரதலபாரிசாதன் துஷ்ட தளவிபாடன் பறமன்னிய நாராயணன் மாத்தரித மானாபரணன் அபறாங்க நவுத்திரன் அசுவநகுலன் அயிராபதயிந்திரன் விருதுநரபாவன் கோதண்டராமன் கரிகுல கர்ணன் பூருவர்பட்சம் உத்திரசுரதானன் சகலதானப் பிறதாபன் சகலகீர்த்தி பிறதாபன் ராசதேவேந்திர சூடாமணி கெச வேட்டை கண்டருளி பரப்பிறதாப தேவமகாராயன் நரசிங்க தேவமகாராயர் பிறவுட தேவமகாராயர் ஆனை கொந்தி தேவமகாராயர் சதாசிவதேவ மகாராயர் வீர வசந்த புசமல திருமல தேவமகாராயர் குமார வேங் கிடபதி தேவமகாராயர் அனந்ததேவ மகாராயர் ஏக சக்கர செகதிராயர் மகாராயர் பிறுதி அசரது அபரங்க பாஷ்ஷா சாயுபு டில்லி பாஷ்ஷாயி சாயிபு பிறுதி மைசூர் சமஸ்தான மகாராசராச மான்யராச ஸ்ரீகிருஷ்ண ராசுடையர் பிறுதிராச்சியம் ஏகசக்கிரஞ் செலுத்தியரசு நடத்தி செங்கோல் செலுத்தியருளா நின்ற கலியுக சாலிவாகன சகாப்தம் 1675 மேற் செல்லா நின்ற பிரபவஷூ வைகாசிமீ எ பூருவ பட்சம் பஞ்சமி ரோகினி நட்சத்திரம் நிறைந்த சோமவாரமுங் கூடின அமிர்த சித்தியோக சுகசோபன தினத்தில் வக்குவ மகாரிஷி வரப்பிறசாதிபராகிய மூன்றாங்குடித் தலைவர் செகஞ்சோதி நகரப் பிரதாபர் சகஸ்திர கோத்திர கோத் திராதிபர் தசாங்க விருதுக்கதிபர் தெய்வசம்மந்தம் பெற்றவர் அளகாபுரிக்கதிபர் வைகுந்தவளநாடு படைத் தவர் கெருடக்கொடிக்கதிபர் கமலகண்டிகை ரதாதிபர் பம்பைநதி கிட்கிந்தை படைத்தவர் தொண்றியந் தார் மார்பர் அயிராபதத்தலைவர் கலிமாருதப் புரவி வல்லபர் பைனாக முரசுப்படைத்தவர் நகர முகமண்டலீகர் ராசஸ்தான பூஷிதர் காவேரிக் கரை கண்டவல்லபர்

கம்பனூர்கோவில் செம்பொனால் வேய்ந்தவர் வரதருக்குக் கற்பூரவிளக்கு வைத்தவர் யிழக்கடார முறையிட்டவர் ஆணையிடை மறித்தவர் சேரசோழபாண்டியர் மூவருக்கு முடிதரித்தவர் சீவகமகாராசனைக் காத்தவர் அவ்வைக்கையிலந்தாதி பெற்றவர் அவ்வைக்குப் பொற்படாக மீய்ந்தவர் சோழனிட்ட பீடத்துக்கெதிர் பீடமிட்டவர் சோழன் பெண்கேழ்க்கச் சுணங்கனைக் கட்டி வைத்தவர் தோழனுக்காகத் தலையறிந்து கீர்த்திப்படைத்துத் தலைபெற்றவர் பொன்பெற்றவேளான் புத்திரனுக்காகத் தன்புத்திரனைத் தனிவாளிலெதிர்த்தவர் திருவிடமருதூர் மருதப்பருக்கு அன்பிற் பெரியாளைத் .திருக்கலியாணஞ் செய்து கொடுத்தவர் தென்னனைச் செண்டாடி வென்றவர் திரிவித சங்கத்திருந்து தமிழாய்ந்தவர் தன்மதாவளவர் அபையதா வளவர் தன வசீகரம் தானிய வசீகரம் ககன வசிகரம் முகவசீகரம் ராசவசீகரம் பெற்றவசீகர் பஞ்சகாவியத் தலைவர் அரிபூசை குருபூசை சிவபூசை மயேசுபரபூசை மறவாத வல்லபர் அம்பலத்தாடும் குருசுவாமியார் சரணராகிய தொண்ணூத்தெண்ணகரமும் பதினெண் பூமியும் எண்பத்தாறு தேசமும் படைத்தயிளவரசராகிய வணிகேசர் பத்தூரிசமான நல்லதம்பி செட்டியார் குமாரன் செட்டியப்ப செட்டியார் தர்மபுரி பேட்டை ஆடியபாத செட்டியார் குழந்தை செட்டியார் அருணாசல செட்டியார் மாறாண்டபளிப்பேட்டைச் சின்னண்ண செட்டியார் சீராம செட்டியார் சோலையப்ப செட்டியார் பென்னகரம்பேட்டை தாண்டவ செட்டியார் பிழை பொறுத்த செட்டியார் குப்பி செட்டியார் காவேரிபுரம் தாசி செட்டியார் கவுதள்ளிப் பெருமாள் செட்டியார் தாண்டவ செட்டியார் பண்டஹள்ளி சிதம்பர செட்டியார் ஆனூருதம்பி செட்டியார் மாம்பளி பெரியம்பல செட்டியார் சத்திய கால பாளையம் கொள்ளேகால் பச்சை செட்டியார் சவுளிகரை சின்னவாணிய செட்டியார் டெங்கினிக் கோட்டை நஞ்சைய செட்டியார் முத்தலப்ப செட்டியார்

கெல்லமங்கலம் நஞ்சைய செட்டியார் முத்தப்ப செட்டியார் ரத்தினகிரி சென்னி செட்டியார் பழம்பேட்டை முனிய செட்டியார் ஊடியதுருகம் சென்னி செட்டியார் மல்லிகார்ச்சுனத் துருகம் அம்பலத்தாடி செட்டியார் சூளகிரி குப்பி செட்டியார் ராயக்கோட்டைப் பிள்ளையப்ப செட்டியார் பாலக்கோடுபேட்டை பெரியம்பல செட்டியார் சந்தி செட்டியார் பாப்பாரப்பட்டி சின்னைய செட்டியார் மொட்டைய செட்டியார் இண்டூரு வயிடமை செட்டியார் பேரம்பல செட்டியார் அதிமாங் கோட்டை அழகச்சி செட்டியார் சோகத்தூரு அம்பலத்தாடி செட்டியார் சின்னமுத்து செட்டியார் சோம்பள்ளி நல்லதம்பி செட்டியார் அனுமந்தபுரம் பெரியண்ண செட்டியார் வேட்ராய செட்டியார் காரிமங்கலம் வேட்ராய செட்டியார் காவேரிப்பட்டினம் வேங்கட செட்டியார் ராமி செட்டியார் கிருஷ்ணகிரி வேங்கிட செட்டியார் மொட்டைய செட்டியார் செகதேவி மல்ல செட்டியார் மலைப்பாடி போத்த செட்டியார் திருப்பத்தூர் நாராயண செட்டியார் பூமாலை செட்டியார் கதவணிப் பச்சைமுத்து செட்டியார் கல்லாவி குண்டு செட்டியார் சென்னி செட்டியார் பேரம்பல செட்டியார் பிரமி செட்டியார் அரியூருவேட்ராய செட்டியார் தென்கரைக் கோட்டை நல்லபிரமசெட்டியார் சடையசெட்டியார் மற்றுமிடங்களிலுண்டாகிய உறமுறை ஆயிரவாணியரெல்லோரும் சாதிக்காரிய நிமித்தியமாய்ச் சோகத்தூருப் பேட்டையில் அரசடி விக்கினேசுபரர் முன்மண்டபத்தில் ஆலவிருட்சத்தடியில் கூடியிருந்தபோது தருமபுரிகலிதீர்த்த வாத்தியார் உறமுறையிசமானர் பேரில் வெண்பா, கலித்துறைபாட்டு விருத்தம் கழிநெடில் விருத்தம், ஆசிரியவிருத்தம், இன்னிசை, தாழிசை, வண்ணங்கள், பதங்கள் இந்தவகையில் தமிழ்ப் பிரபந்தங்கள் அவரவர் பேருக்கு மங்கலச் சொல்லாக பஞ்சலட்சணத்துடனும்.

அமிர்த வாக்காகப் பாடி வந்தபொழுது உறமுறையார் எல்லோரும் சந்தோஷமாகக் கேட்டு மகிழ்ச்சியாய்ப் பாக்கு வெத்திலையுடுகறை யுச்சிதமுங் கொடுத்து நம்ம உறமுறைக்குள்ளேயிப்படி ஒருவரிருக்க நமக்கும் மெத்த அழகுதானேயென்று பாடி வந்த தமிழுக்குத் தியாகவரியாக வேணுமென்று பத்துபேரும் சம்மதித்துக் கலிதீர்த்த வாத்தியாரையருக்குப் புத்திரப் பாரம்பரியமும் சந்திரசூரியருள்ள வரைக்கும் பூமி ஆகாசமுள்ள மட்டுக்கும் ஆயிரவாணிபரெங்கிருந்தபோதைக்கும் உறமுறையிலே வர்த்தனையுண்டு பண்ணி நடப்பிக்குறோமென்று சாசனப் பட்டையம் எழுதிக் குடுத்தபடி வருஷங் குடிக்கொரு பணமும்.

உறமுறையார் கலியாண மெங்கே யானபோதைக்கு மாப்பிள்ளைவீடு ஒருபணம் பெண்வீடு ஒரு பணமாக எடுத்துக் கலியாணத்துக்கு இரண்டு பணம் குடுக்கவும் வாத்தியாரையரவர்கள் வந்தால் மரியாதியா வுடுகறை வெகுமதியள் பண்ணிச் சந்தோஷத்துடனே யனுப்பிவைக்கவும் வாராமலிருந்தால் அந்தந்த ஊரு யிசமானர் வாத்தியாரையனவர்களுக்கு முந்தின பாக்கும்பணமும் வாங்கி வைத்து கலியாணத்துக்கு வந்த உறமுறை கையிலே கட்டியனுப்பிவைக்கவும். கலியாணமில்லாத வேளையிலே வாத்தியாரையனவர்கள் வந்தாலும் மரியாதையுடனே அழைத்துப் பராமரித்து மனது சந்தோஷமாக உடுகறைவெகுமதியள் செய்து அனுப்பவும் இந்த மேரைக்கு வர்த்தனை நடப்பித்து வருகிறோமென்று ஆயிர வாணியரெல்லோருஞ் சம்பதித்துக் கலிதீர்த்த வாத்தியாருக்கு வர்த்தனை கலிதீர்த்த வாத்தியார் சந்ததியுள்ளவரைக்கும் ஆயிர வாணியரெங்கிருந்தபோதைக்கும் வர்த்தனை சந்திராதித்தருள்ள வரைக்கும் நடப்பித்து வரவும் யிதுக்குச் சாட்சி சோகத்தூரு ஏரி எதுவாயில் நிறைந்த அரசடி வினாயகன் மருதை மாரியம்மன் இந்தப் பட்டையம் எழுதின நன்மைக்கு காக்கங்கரை அதிகாரி

நஞ்சையன் வாக்கு எழுதினது யிந்த மேரைக்கு வர்த்தனை யன் மாறாமல் நடப்பிச்சு வந்த பேருக்கு அஷ்ட அயிசுபரியமும் ஆரோக்கியமும் சந்தான சவுபாக்கியமும் மென்மேலும் சரசுபதியம்மன் கடாட்சத்தினால் உண்டாகி வாழ்வார்கள் யிந்த வர்த்தனைக்கு யாதாமொருவன் விகர்தம் பண்ணினாலும் யிந்த வர்த்தனைப் பணத்தை எடுத்துத் தான் சேர்த்துக் கொண்டாலும் குருத்துரோகம் பண்ணின பலத்தையனுபவிப்பார்கள் யிது உறமுறைபத்துஞ் சொன்னவாக்கியம். யிதுபொய்யல்ல. யிந்த வருத்தனை பூமி யாகாசம் சந்திர சூரிய ருள்ளவரைக்கும் நடப்பிச்சு வந்தபேருக்கு அன்பிற் பெரியாளம்மன் கிருபையினாலும் சரசுபதியம்மன் கடாட்சத்தினாலும் அம்பலத்தாடுங் குருகிருபையினாலும் எத்தேசக்காலமும் கனரக ஐசுபரியமும் பெற்று சந்தான சவுபாக்கியமும் பெற்றுசுகத்தை யனுபவித்துக் கீர்த்தி பெற்று வாழ்வார் களென்றவாறு. காமாட்சி தேவி சகாயம்.

# கோச்செங்கண்ணீஸ்வரர் கோயில்

முதலாம் இராஜாதி ராஜனுடைய கல்வெட்டும் மூன்றாம் இராஜராஜனுடைய கல்வெட்டும் கோச்செங் கண்ணீஸ்வர முடைய கோயிலைக் குறிப்பிடுகின்றன. இக் கோயில் தகடூரில் இருந்துள்ளது. அரிஹர நாதர் கோயி லின் அம்மன் சன்னதி படிக்கட்டில் காணப்படும் முத லாம் **இராஜாதி ராஜனுடைய** கல்வெட்டில் 'கோச்செங் கண்ணீஸ் வரமுடைய நாயனார் பெயர் உள்ளது.[80] தவிர தருமபுரி அருகே சிவாடி என்ற ஊரில் சிவன் கோயில் அருகில் உள்ள தனித்தூணில் மூன்றாம் இராஜ ராஜன் கல்வெட்டு காணப்படுகிறது.[81]

இராஜராஜ தேவற்கு யாண்டு 11-ஆவது நிகரிலிச் சோழ மண்டலத்து கங்க நாட்டுத் தகடூர் நாட்டுத் தகடூர்தள

முடைய வியாபாரி கந்த முழான் ஜெயங் கொண் டான் திருவண்

ணாமலையுடையான் பர மண்டலேஸ்வர ஜெய பாலனேன் திருச்செங் கண்ணீஸ்வர முடைய தேவற்கு

இராஜராஜ அதிகைமானார் தகடூரில் வேள் நங்கைக்காற

ன் அணையிலே எனக்குத் தந்தமுப் பதின் கண்டக விதையும் தேவதா

னமாக திருப்படி மாற்றுக்கு விட்டேன் கந்த முழான் பரமண்டலேஸ்வர ஜெயபாலனேன் இது அழிவு செய்வான் கெங்.

கைக் கரையில் ஆயிரம் குரரல் பசுவைக் குத்தினான் பரமத்திபடுவான்.

கி. பி. 1221இல் **இராஜராஜ அதிகைமான்** என்ற குறுநில மன்னன் **கந்தமுழான்** என்ற வியாபாரிக்கு வேள் நங்கக் காரன் அணையிலே 30 கண்டக விதை விளையக்கூடிய நிலத்தைத் தந்துள்ளான். வேள் நங்கக்காரன் அணை என்பது எந்த ஆற்றின்மீது குறுக்கே கட்டப்பட்டது என தெரியவில்லை என்றும், அணை என்பது ஆணையாகவும் இருக்கலாம் என 'தருமபுரி கல்வெட்டுகள்' தொகுதி 2 புத்தகம் குறிப்பிடுகின்றது. வேள் நங்கக்காரன் அணை என்பது வேள் நங்கக்காரன் ஆறு அருகில் நீர் மிகுதியாய்ப் பாயும் நிலம் என்று நான் கருதுகிறேன். கிராமங்களில் மதகு அருகில் உள்ள நிலங்கள் எப்போதும் நீர் வளமுள்ள இடமாக இருக்கும். இதனை **மொதமோடை** (முதல் மடை) என அழைப்பர். இத்தகு மொதமோடை யைத்தான் அணை என்ற சொல் குறிப்பிடுகிறது. மதகுக்கு அருகில் வளமுள்ள நிலம் கோச்செங்கண்ணீஸ்வர முடைய கோயிலுக்குத் தேவதானமாகக் 'கந்தமுழான்' வழங்கிவிடுகிறான். நிலத்தின் அளவு 30 கண்டகம் நெல் விதை விளையக்கூடிய பரப்பு ஆகும்.

பிற மாவட்டங்கள் போலின்றி இம்மாவட்டத்தில் நிலத்தின் அளவைக் குறிப்பிடும்போது குறிப்பிட்ட அளவு **கண்டகம்** விதையக்கூடிய நிலப்பரப்பைக் கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன. இதனால் நிலத்தின் அளவைத் தோராயமாகக் குறிப்பிட முடியுமேயொழிய துல்லியமாகக் குறிப்பிட முடியாது.

தஞ்சை மாவட்டம் போல் வளமான பகுதியாக இல்லாமல் ஏரி, குளம், கிணறு, மழை நீரையே நம்பி யிருக்கும் தகடூர் மாவட்டத்தில் சில கிராமங்களில் இன்று கூட ஏக்கர் செண்டு அளவுடன் கண்டக விதை விளையக் கூடிய நிலப்பரப்பு மக்கள் பேச்சு வழக்கில் இருந்து வரு கின்றன. தானம் வழங்கியவன் வியாபாரியாவான். திருவண்ணாமலையிலிருந்து வந்தவன் போலும். சிவ பக்தி நிறைந்தவனாகையால் இராஜராஜ அதிகைமான் இவனுக்கு நிலம் வழங்குகிறான். சிவபக்தியில் மிக்க கந்தமுழான் மீண்டும் சிவன் கோயிலுக்கே, அதுவும் சோழர்களில் முற்காலச் சோழன் கட்டிய கோயிலுக்கு வழங்கிவிடுகிறான். இக்கோயில் தற்போது இல்லை. இங்கிருந்த இரண்டு கல்வெட்டுள்ள கற்களே அரிஹர நாதர் கோயிலில் ஒன்றும், சிவாடியில் ஒன்றுமாக உள்ளன.

கோச்செங்கண்ணீஸ்வரமுடையார் கோயில், பழைய தருமபுரி என இன்றும் வழங்கப்படும் பகுதியில் இருந் திருக்கலாம். வேள்காரன் அணையும் இங்கேயே இருந் திருக்கலாம். மேலும் வேள்காரன் என்பது நிலத்தின் பெயராகவும் இருந்திருக்க ஒவ்வொரு நிலத்திற்கும் அடையாளத்திற்காகப் பெயரிடும் போக்கு கிராமங் களில் முன்னாளில் இருந்துள்ளன. இன்றும்கூட குடுமி கழனி, தச்சன் கழனி, பட்டி நிலம் எனப் பெயர்கள் இருப்பதைக் கிராமங்களில் பார்க்கலாம். ஆக மொத்த மோடையாகிய வேள் நங்கக்காரன் நிலத்தில் 30 கண்டகம் விதை விதைக்கக்கூடிய நிலம் கோச்செங்கண்ணீஸ்வர முடையாற்கு வழங்கப்படுகிறது.

அணை என்பதற்கு நீர்க்கரையொட்டிய பகுதி என்றே ஈண்டு பொருள் கொள்ளவேண்டும். 30 கண்டக விதை விதைக்கக்கூடிய நிலம் தற்போதைய கணக்கின்படி 120 ஏக்கர் ஆகும். கடைச்சங்க காலத்தில் கட்டப் பட்டுப் பிற்

காலச் சோழர் காலத்தில் இக்கோயில் போற்றப்பட்டது. பிற்காலச் சோழர்களால் பலதானங்கள் வழங்கப்பட்ட இக்கோயில் சோழருக்குப் பின் பாழ்பட்டுப் போனதாகத் தெரிகிறது. ஆண்டிருந்த கற்களே அரிஹரநாதர் கோயிலி லும் சிவாடி கோயிலிலும் இன்றுள்ளன. கோச்செங்கண் ணீஸ்வரமுடையார் கோயில், கோச்செங்கண்ணன் தாமோ அன்றி அவன் பெயரில் வேறுயாரோ கட்டியிருக்கலாம். கோச்செங்கண்ணான் கட்டிய கோயில்கள் பலவும் கால வெள்ளத்தில் மறைந்தன போல இக் கோயிலும் அழிந்து பட்டது போலும்.

கோச் செங்கண்ணானுடன் தொடர்புடைய திரு வாணைக்கா போன்ற கோயில்கள் பிற்காலத்தில் கற்றளி யாக மாற்றப் பட்டு தொடர்ந்து போற்றப்பட்டு வந்தது. ஆயின் தகடூரில் இருந்த கோயில் துரதிருஷ்டவசமாகக் காப்பாற்றப்பட வில்லை. பெயர் மட்டுமே எஞ்சி யுள்ளது.

சுந்தரமூர்த்தி நாயனார் கி. பி. 9ஆம் நூற்றாண் டில், பல சைவத் தலங்களையும் பாடிப் போற்றியுள்ளார். சில ஊர்களைப் பொதுவாக வைத்தும் பாடுவார். அத்தகு பாடல்களில் ஒன்று வருமாறு

''வீழக் காலனைக் கால்கொடு பாய்ந்த விலங்கலான்
கூழை ஏறுகந்தான் இடங்கொண்டதும் கோவலூர்
தாழையூர் தகடூர் தக்களூர் தருமபுரம்
வாழைக்காய்க்கும் வளர் மருகல் நாட்டு மருகலே''[83]

தகடூரில் இருந்த கோச்செங்கண்ணீஸ்வரர் கோயிலே சுந்தரரால் பாடப் பட்ட கோயிலாக இருக்க வேண்டும். இன்றுள்ள கோட்டைக் கோயில் சுந்தரர் காலத்திற்குப் பின் தோன்றியது எனலாம்.

## கோட்டைக் கோயில்கள்

நொளம் பாதிராசர்கள் கட்டிய பல கோயில்களில் தருமபுரி கோட்டைக் கோயில்கள் குறிப்பிடத் தக்கு வையாகும். இன்றுவரை நொளம்பர் கட்டிட, சிற்பக்கலை நுட்பத்திற்குத் தமிழ் நாட்டைப் பொறுத்த வரை இக் கோயில்களையே குறிப்பிட்டாக வேண்டும்.[84] காலத்தை வென்று நிலைபெற்ற இக்கோயில்கள் கோட்டைக்குள் இருப்பதால் கோட்டைக் 'கோயில்கள்' என மக்கள் வழங்குகின்றனர்.

மல்லிகார்ச்சுனர் கோயில் என்றும் காமாட்சி அம்மன் கோயில் என்றும் இருகோவில்கள் கோட்டைக் கோயில் சுற்றுச் சுவரில் உள்ளன. நொளம்பர் கால கல்வெட்டுகள் கோட்டைக் கோயில் தூண்களிலும், மாரியம்மன் கோவில் எனப்படும் விருந்தாடி அம்மன் கோவில் அருகிலும் இருந்ததாகவும் அறிக்கைகள் கூறு கின்றன. தற்போது கோட்டைக் கோயிலில் நொளம்பர் கல்வெட்டு இல்லை. ஆயின், விருந்தாடி அம்மன் கோயில் அருகில் தூண்களில் உள்ளன. அவை கன்னடமாகும். மதி கோன் பாளையம் முத்துசாமி ஆச்சாரி தெருவில் உள்ள தூணில் கன்னடக் கல்வெட்டு உள்ளது. நுளம்ப மன்னர் காலத்தில் ஒரு வணிகரின் மக்கள் நிதியண்ணன், சண்டி யண்ணன் இருவர் சமணக் கோயில் கட்டுகின்றனர். மூலப் பள்ளியில் இக்கோயிலுக்குத் தானம் வழங்கப் படுகிறது. விஜய சேன சித்தாந்த படாரர் என்பவரின் சீடர், கனக சேன சித்தாந்த படாரர் என்பவரிடம் நிலம் ஒப்படைக்கிறார்[85] ஈண்டிருந்த கோவில் பின்னர் மல்லி கார்ச்சுனர் கோயிலாக மாறிற்று என சிலர் குறிப்பிடு வார்கள், மாரி அம்மன் கோயில் அருகில் உள்ள கல் வெட்டின் மூலம் பொன்னெற கொரவர் என்ற சமண முனிவனைப் பார்க்கிறோம்.

நொளம்பர் தூண் கல்வெட்டு சமணக் கோயிலுக்குத் தந்த தானத்தைக் குறிப்பிடுவதாலேயே கோட்டைக் கோயிலாகிய மல்லிகார்ச்சுனர் கோயில் மல்லிநாதர் கோயிலாக இருந்து பின்னர் இந்து கோயிலாக மாறியது என்பது ஏற்புடையதாகாது. நொளம்பர் சைவக் கோயிலுக்கும் சமணக்கோயிலுக்கும் ஒரே காலகட்டத்தில் தானம் செய்துள்ளதால் இரண்டும் சமகாலத்தில் தோன்றி இந்துக்களாலும் சமணர்களாலும் தத்தம் கோயில்கள் போற்றப்பட்டன என்பதே ஏற்புடையதாகும். நொளம்பர் காலத்திற்குப் பின் பல்லாண்டுகள் கழிந்து மூன்றாம் குலோத்துங்கன் காலத்தில் கோட்டைக் கோயில் என நாம் அழைக்கும் சிவன் கோயில்கள்' பாழ்பட்டுப் போற்றுவாரின்றி இருப்பதைக் கண்டு சைவத் துறவி ஒருவர் புதுப்பிக்கும்பணியில் ஈடுபடுகிறார். அதேபோல் சமணத் துறவி அல்லது யாரோயொருவர் பாழ்பட்டுக்கிடந்த சமணக் கோயிலைப் புதுப்பித்திருந்தால் கோட்டைக் கோயில் போல் சமணக் கோயிலும் இன்று இருந்திருக்கும். துரதிஷ்டவசமாக யாரும் பேணுவாரின்றிக் கோச் செங்கண்ணீஸ்வர முடைய நாயனார் கோவில் போல் சமணக் கோயிலும் அழிந்துபட்டிருக்க வேண்டும். கோட்டைக் கோயில்கள் உள்ள இடத்தில் உறுதியாக சமணக் கோயில் இருந்திருக்க வழியில்லை. இங்குள்ள இராமாயண சிற்பங்களும் தூண் சிற்பங்களும் இந்து சமயத் தோடு மட்டுமே தொடர்புடைய நொளம்பர்காலச் சிற்பங்களாகும்.[86] எனினும் விருந்தாடி அம்மன் கோயில் உள்ள இடத்தில் முன்பு சமணக் கோயில் இருந்திருக் கலாம். விருந்தாடி அம்மன் சிலை மிகவும் பிற்பட்ட காலத்தவையாகும்.

## கோட்டைக் கோயிலும் கலையழகும்

மல்லிகார்ச்சுனர் கோயிலும், காமாட்சிக்கோயிலும் நொளம்பர் கட்டிடக் கலைக்குச் சான்றாக உள்ளன.

மேலைக்கங்கர் கீழைச்சாளுக்கியர் ஆகியோரின் கலை யழகு சேர்ந்ததன்மையை இவற்றில் பார்க்கிறோம்.

சிவன்கோவில் திருவுண்ணாழி (கர்ப்பகிரகம்) அர்த்த மண்டபம். நவரங்கம் ஆகிய பகுதிகள் மட்டுமே நொளம்பர்காலம் எனலாம். முன்மண்டபம், மகா மண்டபம், விமானம், போன்றவை பிற்காலச்சோழர் காலத்தவை எனலாம்.

கருவறை நுழைவாயில் மேல் உள்ள கஜலட்சுமி உருவமும் நீர்த்தெளிக்கும் யானைகள் உருவமும் பூரண கலசமும், முழவும், சிங்க உருவங்களும், பதுமநிதி சங்க நிதி உருவங்களும், குறிப்பிடத்தக்கவை எனலாம். பொது வாக யானைகள் ஒரே நேரத்தில் நீர்த் தெளிப்பது போல வே கஜலட்சுமி சிற்பங்களைச் சிற்பங்களில் நாம் பார்க் கிறோம். ஆனால் இங்கு ஒன்று நீர் கொட்டவும், மற் றொன்று தம்முறைக்குக் காத்திருப்பதாகவும் கலைஞன் அற்புதமாகத் தீட்டியுள்ளான். பூரணகலசமும் மத்தள மும் நேர்த்தியாக உள்ளன அமர்ந்த சிங்கங்கள், பதுமநிதி சங்கநிதி குறிப்பிடத்தக்கன.

மேலும் இங்குள்ள தூண்கள் சித்திரத் தூண்கள் ஆகும். புல்லவர் காலத்தூண்கள் எவ்வாறு வரலாற் றாசிரியர்களால் போற்றப்படுகிறதோ அவ்வாறே இதுவும் போற்றம்படும் தன்மையில் உள்ளன. தூண்களில் நாட்டியக் காட்சிகளும்,மலர்களும் கண்ணுக்கு விருந்தாக அமைகின்றன. எல்லாவற்றிற்கும் மேலாக விதானத்தில் உள்ள **திக்குப்பாலகர்கள்** அல்லது திசைக் காவலர் உருவங்கள் சிறப்பாக அமைந்துள்ளன.

முதலில் இங்குள்ள தூண்களை கவனிப்போம்.

கலையழகு நிரம்பிய ஆறு தூண்கள் மண்டபத்தை அலங்கரிக்கின்றன. தூண்கள் கீழே சதுரமாகவும்

மேலே எண் பட்டை கொண்ட நீண்ட உருளையாகவும் பின் போதிகையுமாக உள்ளன. மேலும் விதானத்தைத் தொடுவதுபோலும் தூண்கள் உள்ளன. சுவாமிக்கு முன்னால் வடக்கிலும் தெற்கிலுமுள்ள இரு தூண்கள் கீழே சதுரமாகவும் பின் உருளையாகவும் பின் போதிகையுமாக உள்ளன. உருளை வடிவில் வழவழப்பாகக் காட்டி உள்ளனர். இவற்றின் வடக்குப் புறமுள்ள தூண் குறிப்பிடத்தக்கதாகும். தூணின் அடிப்பாகம் வடக்குத் திசையில் (சுவர் பார்த்த திசையில்) சிவலிங்கத்தை (தற்போதுள்ள மல்லிகாரச்சுனர் போன்ற லிங்க அமைப்பு) இடையில் உடைவாள் செருகிய ஓர் ஆடவன் பூசிக்கிறான். தோற்றத்தைப் பார்க்கிறபோது இது அரசனாக இருக்கவேண்டும்போல் தோன்றுகிறது. கோயிலை எழுப்பிய நொளம்ப மகேந்திரன் பூசிக்கிறான் போலும். பின் சுவற்றில் பல்வேறு நிலைகளில் நாட்டிய மகளிர் காட்சிகள் தத்ருபமாக உள்ளன.

மேற் கண்ட தூணிற்கு எதிரில் தென்திசையில் உள்ள தூணும் சிறப்பானது எனலாம். நரசிம்ம உருவம் இதில் பார்க்கிறோம்: பல்வேறு நிலைகளில் பார்க்கிறோம்.

வடதிசையில் நடுவில் உள்ள தூண் மிகச் சிறந்த சிற்பங்களைத் தன்னகத்தே கொண்டுள்ளது. சுகாசன மூர்த்தியின் கால்களை மாற்றி மாற்றி இரண்டிடத்தில் காட்டியுள்ளனர்.

கஜசம் ஹார மூர்த்தி இறைவன், யானையின் தோலை உரிக்கின்றான். அருகில் உமை; வளர்ந்த நிலையில் நிற்கும் முருகன் கையைப் பிடித்துக் கொண்டு வேகமாக ஓடுகிறாள். இச்சிற்பம் வேறெங்கு மில்லை எனலாம். மற்றொரு பக்கம் நடராசர். மற்றும் சுகாசன மூர்த்தி

கால்களை மாற்றி மாற்றிக் காட்டியுள்ளனர். இடது கால் அல்லது வலதுகால் தொங்கவிட்டபடி அல்லது மடித்தபடி இருக்கிறார். தூணின் ஒரு பக்கத்தில் (வடக்குத்திசை) சிவலிங்கம் அருகில் சூலம். கையெடுத்துக் கும்பிடும் அரசன்(?) இடையில் வாள் செருகி உள்ளான். இவன் எதிரில் மற்றொரு ஆடவர் வணங்கியபடி நிற்கிறார். இவர் அரசனின் மகனாக இருக்கலாம். அல்லது மகேந்திர வர்ம நொளம்பராஜனால் தானம் பெற்ற சைவ அடியாராக இருக்கலாம். தோற்றத்தைப் பார்க்கும் போது துறவிபோல் இல்லாததால் அரசனின் மகனாகவோ அன்றிக் கோயில் எடுப்பிப்பதில் துணையாயிருந்த ஒருவராகவோ இருக்க வேண்டும்.

மண்டபத்தின் வடக்குத் திசையில் முதல் தூண் கீழ்க் கண்ட சிற்பங்களைக் கொண்டுள்ளது.

ஓர் அம்மனை அடியார் அல்லது பூசை செய்பவர் வழிபடுகிறார். அம்மன் வலக் காலை மடக்கி இடக் காலைத் தொங்க விட்டுள்ளார். அம்மன் அருகில் நிற்பவர் தம் ஒருகையை இடுப்பில் வைத்துள்ளார்.

சிவலிங்கம் கமலப் பீடத்துடன் உள்ளது. ஓர் அடியார் அல்லது பூசை செய்பவர் வழிபடுகிறார். இவர் ஒருகை இடுப்பிலும் மற்றொரு கை சுவாமிக்கு நீர் ஊற்றுவதுபோலும் உள்ளன.

ஓர் அம்மனை (இக் கோயில் அம்மன் போலும்) அடியார் பூசை செய்கிறார். அம்மன் வலக் காலை மடக்கி இடக்காலைத் தொங்கவிட்ட நிலையில் உள்ளார் அம்மனுக்குக் கரண்ட மகுடம். இங்கும் அடியார் ஒருகை ஊரு ஹஸ்தத்தில் உள்ளது.

சிறியபையன் போன்ற தோற்றமுள்ள ஆடவன் பூசை செய்ய ஓர் அம்மன் வீற்றிருக்கிறார். இடக்

காலை மடக்கி வலக்காலைத் தொங்க விட்டபடி உள்ளார். தலையில் கிரீடமகுடம் உள்ளது.

அம்மன் தம்மிருகைகளைத் தொடைமீது வைத்துள்ளார். மேற்கண்ட இரண்டு சிற்பங்களும் சிறிய வடிவில் அழகாய் உள்ளன.

**போர்க்களக் காட்சி**- வாளுடன் கூடிய ஓர் ஆடவன் (மன்னன்?) கழுத்தில் ஒரேயொரு கழுத்தணி. உதரபந்தம் இடையாடையுடன் உள்ளார். இவர் ஒருவனை வாளால் வீழ்த்த அவன் குப்புற விழுகிறான். இதை மூன்று நிலைகளில் கலைஞன் சித்தரித்திருக்கிறான், மேற்கண்ட தூணின் மற்றொரு பக்கம் காமச் சிற்பங்கள் இரதி மன்மதச் சிற்பங்கள் பார்க்கிறோம். தவிர பூதங்கள் குழலூத ஆண் பெண் சிற்பங்களுமுள்ளன. மூன்றாம் பக்கம் குதிரை மீது வரும் ஆடவன்; மத்தளம் அடிக்கும் பெண் யானை மீது அரசன் அரசி; இவர்கள் எதிரில் ஓர் ஆடவன். யானைக்காலைத் தூக்கிய நிலையில் பிளிறுதல். யானையருகே ஓர் ஆடவர் ஆகியவற்றைப் பார்க்கிறோம் தவிர வீரரிருவர் போரிடுகின்றனர் நான்காம் பக்கத்தில் ஓர் ஆடவனும் ஒரு பெண்ணும் காட்டப்பட்டுள்ளனர் ஒருவர் நிற்க மற்றொருவர் அமர்ந்த நிலை. பின் இருவரும் நின்ற நிலை. பிறகு முனிவன் ஆடவன் போரிடுகின்றனர். முனிவன் ஒரு பெண்; மத்தியில் குழந்தை முனிவன் குழந்தையை வாங்குகிறான், அரசி அமர்ந்திருக்கிறார் சேடியர் கவரிவீசுகின்றனர்.

## தென் புறமுள்ள முதல் தூண்

யானை மீது பாகன். யானை மரத்தை முறிக்கிறது மரத்தின் மீது குரங்குகள் அமர்ந்துள்ளன.

தலைவன் அல்லது ஓர் ஆடவன் கத்தியுடன் நிற்கின்றான், ஒரு பெண் வணங்குகிறாள், அவள் மார்பில் கச்சில்லை.

திண்டு போன்ற கட்டிலின் மீது அமர்ந்த ஒருருவம், எதிரில் தரையில் அமர்ந்த உருவம். ஓர் ஆடவன் நிற்கும் கோலம். கருடன் மீது விஷ்ணு அமர்ந்துள்ள காட்சி; வீரர்கள் போரிடும் காட்சி ஆகியவை கண்ணுக்கு விருந்தளிக்கின்றன. அரசி அல்லது தலைவி படுத்திருக் கிறாள். சேடிப் பெண்கள் மூவர். இருவரை உதைப்பது போன்று சிற்பம் காணப்படுகிறது.

ஆடவனும் பெண்ணும் தோள் மீது கைக் கோத்த நிலை; அமர்ந்த நிலையில் பெண்; நின்ற நிலையில் வீரன்; சாத்தன் உருவம், விஷ்ணு துர்க்கை, சிங்கத்தின் மீது குடை காட்டப்பட்டுள்ளது. சங்கு, சக்கரம், அபயம், வரத முத்திரையுடன் விஷ்ணு; கருடன். அரியும் பிரம்மாவும் இருபுறமும் நிற்க நடுவில் சிவன் தாமரைப் பீடத்தில் அமர்ந்துள்ளான். இவருடைய ஒரு பாதம் முயலகன் தலை மீதுபடுகிறது. மற்றொரு கால் மடக்கியபடி உள்ளது. மான், மழு, அபய வரதம் என்ற நிலையில் சிவன் உள்ளார். பிரம்மாவும் விஷ்ணுவும் கூட நான்கு கைகளுடன் உள்ளனர்.

ஆடவன் பல்வேறு கோணங்களில் அமர்ந்து உள்ளான். அருகே பெண் காட்டப்பட்டுள்ளார். ஊடல் காட்சி? அமர்ந்த வீரன் அருகே மற்றொரு ஆடவர் சிவலிங் கத்தைக் காலில் மிதித்தபடி அமர்ந்த உருவம் குரு ஆசிரியர்; நாட்டியக் காட்சி ஆகியவை தூணின் மற்றொரு பக்கம் சிறப்பாகச் செதுக்கப்பட்டுள்ளது.

குருக்கள் சிவலிங்கத்தைப் பூசிக்க வருகிறார் சிறிது தூரத்தில் ஒரு மரம் உள்ளது.

கட்டிலில் ஒருகாலை மடக்கி ஒரு கால் குத்திட்டபடி ஒரு பெண் (தலைவி) அமர்ந்திருக்க எதிரில் ஆடவன் வருகிறான். தலைவனைத் தோழி அழைத்து வருகிறாள். சுற்றித் தோழிமார். இக்காட்சி தலைவியின் ஊடலைத் தீர்த்து வைக்கும் காட்சி போலும். கட்டிலில் ஓர் ஆடவனும் பெண்ணும் (தலைவி) அமர்ந்திருக்கின்றனர். ஒருபெண் தலைவிக்குப் பொட்டு வைக்கிறாள். திருமணம் போன்ற சடங்கை இது குறிக்கலாம். கட்டிலின்மீது அரசன், அரசி அல்லது தலைவன், தலைவி கொஞ்சும் காட்சி. பெண்விரக தாபத்தால் வேதனைப்படுகிற காட்சித் தத்ரூபமாக உள்ளது. அரசன் வேட்டைக்குப் புறப்படுகிறான். நாய் உடன் செல்கிறது. அரசனின் ஒரு கை நாய் மீதும், மற்றொருகை இடுப்பில் உள்ள கத்தி மீதும் உள்ளன. மேலே காந்தருவன் உருவம். காதல் என்ற இலக்கியங்கள், கூறும் வேட்டை மற்றும் காதலை இச்சிற்பங்கள் குறிப்பிடுகின்றன எனலாம்.[37]

மற்றொரு இடத்தில் ஆண், பெண்ணைத் தோள் மீது சுமத்தல், கோட்டை அல்லது கோயிலுக்கு வருதல் வணங்கும் ஒரு பெண்ணும் ஓர் ஆடவனும் அமர்ந்த நிலையில் உள்ளனர். மண்டபத்தின் தென்புறம் நடுவில் உள்ள தூணில் சிவனுடைய உருவங்கள் பல உள்ளன. தேவியுடன் சுகாசன மூர்த்தி இலிங்கத்தை வழிபடும் பூசாரி பிள்ளையார் — வலம்புரி விநாயகர்,

அமர்ந்த நிலையில் சிவன் (சண்டேஸ்வர அனுக்கிரகம்) சாத்தன் உரு போன்றவை இங்குப் பார்க்கிறோம்.

மற்றொருபுறம் அரசன் (சுத்தியுடன்?) சூரிய பகவானை வழிபடுகிறான் எதிரில் அரசியும் வழிபடுகிறாள். குதிரைமீது அமர்ந்த வீரன் (சேரமான் பெருமான்?) சங்கு, சக்கரம், அபயம், ஊரு எனும் நிலையில் விஷ்ணுவையும் இதே தோற்றத்தில் விஷ்ணுதுர்க்கையையும் பார்க்கிறோம். பிரம்மா, அமர்ந்த நிலையில் காட்சி தருகிறார் ஒன்றில் சூலம் உள்ளது. இலிங்கத்தைத்தழுவும் மார்க்கண்டன் காலாந்தகமூர்த்தி, சுகாசனமூர்த்தியும் உள்ளது. பிட்சாடனார் அவர் அருகில் குள்ளபூதம்; பக்கத்திலுள்ள தேவி குடையுடன் காட்டப்பட்டுள்ளார். சேடிப் பெண்கள் அருகில் உள்ளனர்.

## இலிங்கோத்பவர்

அடிமுடிகாணா அண்ணலான சிவன் இலிங்கத்தில் காட்சி தர பிரம்மாமேலேயும் விஷ்ணு கீழேயும் முறையே முடியையும் அடியையும் காணச் செல்கின்றனர். பூவராக மூர்த்தியுடன் திருமால் காட்டப்பட்டுள்ளார். திருமாலும் பூதேவியும் உள்ளனர். மேலே பிரம்மா வணங்குகிறார். ஆக இங்கு ஆறு தூண்களும், கலையழகில் ஒன்றையொன்று மிஞ்சும்படி உள்ளன. தூண்களில் ஒன்று அந்தரத்தில் தொங்குவதுபோல் (குறிப்பிட்ட இடத்தில் நூலை ஒரு பக்கம் நுழைத்து மறுபக்கம் கொண்டு வர முடியும்) நேர்த்தியாக உள்ளது.

## திசைக் காவலர்கள்

மண்டபத்தின் விதானத்தில் திசைக் காவலர்கள் காட்டப்பட்டுள்ளனர்.

இங்கு ஒன்பது சிறுபகுதிகளாகப் பிரிக்கப்பட்டு நடுவில் எட்டுக் கைகளுடன் நாட்டியக் கோலத்தில் நடராசர் காட்டப்பட்டு உள்ளார். முயலகன் மீது கால்வைத்தபடி கைகளில் உடுக்கைக் ஏந்திய நிலையில் கணங்கள் நாட்டிய மாட நிற்கிறார். சுற்றி 8 திசைக் காவலர்கள் தங்கள் தங்கள் வாகனங்களுடன் உள்ளனர். இந்திரன் மட்டும் இந்திராணியுடன் காட்டப்பட்டுள்ளான். மகிழ்ச்சி' ததும் பும் முகத்துடன் சிற்பம் படைக்கப்பட்டுள்ளது. வருணன் நீங்கலாக எல்லா திசைக்காவலர்களும் இந்திராணியும் இடதுகைகளை விஸ்மய முத்திரையில் காட்டப் பட்டுள் ளனர்.

சிவனுடைய தோற்றங்களில், நடராசரே எக்காலத் திலும் யாவராலும் பெரிதும் போற்றப்படும் மூர்த்த மாகும். இங்கு 8 கைகளில் சூலம், உடுக்கை, அபயம், ஆகூயம், பாசம் ,நெருப்பு போன்ற வற்றிற்குப் பலதத்து வங்களை அறிஞர்கள் கூறுவார்கள் எட்டுதிசைக் காவல ரைக் காட்டிச் சிவனுக்கு எட்டுக்கைகள் காட்டிய சிற்பியை நாம் வியக்கவே வேண்டும். ஆடவல்லப் பெருமானின் நாட்டியத்தை எண்திசைக் காவலர்களும் காண்கிறார்கள் என்றால் பிரபஞ்சமே காணுவதாக நாம் பொருள் கொள்ள வேண்டும்.

காமாட்சி அம்மன் சன்னதியிலும் திசைக் காவலர் சிற்பங்கள் விதானத்தில் உள்ளன. அவை அபூர்வமான சிற்பங்களாகும். ஆந்திராவில் துங்க பத்திரை ஆற்றங் கரையில் உள்ள ஆலம்பூரில் திசைக் காவலர் காட்டப் பட்டிருப்பினும், இங்குள்ள அழகு குறிப்பிட்டதக்க தாகும்.[88] இந்திரன் மட்டும் தேவியுடன் காட்டப்படுவது திசைக் காவலர்களில் அவனுடைய முக்கியத் தன்மையைக் காட்டுகிறது. திசைபாலர்கள் அனைவரும் கிரீடத்துடன் இரண்டு கைகள் மட்டுமே கொண்டுள்ளமையும் குறிப் பிட வேண்டும். விதானத்தில் உள்ள இச்சிற்பம் கோட்டைக் கோயில் அழகுக்கு அழகு எனலாம்.

காமாட்சி அம்மன் கோவிலும் மல்லிகார்ச்சுனர் கோயில் கட்டிய சமகாலமே எனலாம். அதிஷ்டானம் சிறிது உயரமாக உள்ளதால் சிவன் கோவிலைவிட இது சிறிது உயரத்தில் உள்ளது. கருவறை, அர்த்த மண்டபம், நவரங்கம் என்ற முறையிலேயே தான் இதுவும் உள்ளது. அதிஷ்டானத்தில் பத்மம், குமுதம், கண்டம், கபோதம், பட்டிகை, உபானம் முதலியவை வேலைப் பாடுகளுடன் உள்ளன. கோயிலை யானைகள் தாங்குவது போல் அமைப்புள்ளது. சுற்றி இராமாயணக் காட்சிகள் சிற்பமாகச் செதுக்கப்பட்டுள்ளன. வால்மீகியின் இராமா யணக் காட்சிகள் இங்கு பார்க்கிறோம். தஞ்சை மாவட்டம் புள்ளமங்கை போன்ற ஊர்களில் அதிஷ் டானத்தைச் சுற்றிலும் வரிசையாகச் சிற்பங்கள் உள்ளதைப் பார்க்கிறோம். அவை, ஆதித்த சோழன் காலத்தவையாகும். இந்தத் தருமபுரிச் சிற்பங்களும் அதன் சமகாலமெனலாம்.

காமாட்சியம்மன் சிலை, நொளம்பர் கால கலை அம்சமோ பிற்காலச் சோழர் காலக் கலை அம்சமோயின்றி விஜய நகர அரசர் காலத்துக் கலை அம்சத்தைக் கொண் டுள்ளது. இவ்வம்மனுக்கு மாறாக, துர்க்கை அல்லது நிசும்ப சூதனி நொளம்பர் காலக் கலை அழகைக் கொண் டுள்ளது[80] துர்க்கை சதுர்புஜங்கத்துடன் மகிஷனைக் கொல்லும் தோற்றத்தில் உள்ளார். மேல்கைகள் சங்கு, சக்கரம்(?) வைத்துள்ளாள் (மழுபோன்றும் உள்ளது) கீழ்க்கைகளில் ஒன்றில் சூலம் ஏந்தி மகிஷனைக் குத்து கிறாள். கேடயம், கத்தி ஏந்திய நிலையில் மகிஷன் சாய்ந்த நிலையில் உள்ளான். கொம்பை (எருமைக் கொம்பை) பிடித்தபடி அம்மையின் ஒருகை உள்ளது. ஒருகால் மகிஷன் மீதும் மற்றொரு கால் நீட்டியும் ஆக்ரோஷமாக உள்

ளன. மேற்கண்ட மகிஷாசுரமர்த்தினி பல ஆண்டுகளுக்கு முன் பூமியிலிருந்து தோண்டி எடுத்துள்ளனர். இங்குள்ள மண்டபத்தில் தனியாக மேடைகட்டி அதை வைத்துள் ளனர். காமாட்சி அம்மன் மண்டபத்தில் தூண்கள் ஈஸ்வ ரன் கோயில் தூண்களைப் போலவே இருப்பினும் சிற்பங் கள் சற்றே பெரியவையாக உள்ளன.

## வடக்கில் முதல் தூண்

**சோமாஸ் கந்தமூர்த்தி** அம்மனிடமிருந்து குமரன் சுவா மியை நோக்கித் தாவும் காட்சி அழகாக உள்ளது. நாட்டியப் பெண், குள்ள பூதங்கள் போன்றவையும் உள்ளன. இத்தூணின் மறறொரு புறம், சிவன் 4 கை களுடன் அம்மையின் காலைப் பிடிக்கும் அற்புதச் சிற்பம். மற்றொரு பக்கம் கஜசம்ஹாரமூர்த்தி. அம்மன் நாணத் துடன் பார்க்கிறார். தஞ்சைக் கலைக் கூடத்தில் உள்ள கஜசம்ஹாரமூர்த்தி உதிரிச் சிற்பம் போல் இது உள்ளது. தென்புறத்தில் நாட்டிய மகளிர் மத்தளம் அடிப்பவர் ஆகி யோர் காட்டப்பட்டுள்ளனர்.

இரண்டாவது தூணில் நர்த்தன கிருஷ்ணரும் ரிஷபவா கனரும் காட்சி தருகின்றனர். மூன்றாவதாக உள்ள தூணில் வாலி சுக்ரீவன் வதம். நிசும்பசூதனி 4கைகள். படுத்துக் கிடக்கும் நிலையில் அசுரன். நாட்டிய மாடு வது போல் துர்க்கை காட்டப்பட்டுள்ளாள். மார்பில் கச்சு உள்ளது. மற்றொரு தூணில் கஜசம்ஹாரமூர்த்தி. இங்குக் குழந்தையை (முருகனை) இடுப்பில் ஏந்தியபடி அம்மன் நாணத்துடன் பார்க்கிறார். சிவன் - மன்மதன் - ரதி - காம தகனத்தைக் காட்டும் சிற்பம்.

தட்சிணா மூர்த்தி சிற்பம் - நான்கு முனிவருக்கும் பதில் இரண்டு முனிவர்களுடன் உள்ள சிற்பம் ஒரு தூணில் பார்கிறோம். காலசம்ஹாரமூர்த்தி ஒரு தூணில் பார்க்கிறோம். மார்க்கண்டேயன் இலிங்கத்தை ஆலிங் கணம் செய்கிறார். கீழே சிவன் உதைக்க காலன் விழுந்த நிலை சூலத்தை இறைவன் வைத்துள்ளார். பிட்சாட னார்சிற்பம் ஒன்றில் பார்க்கிறோம். ஒரு தூணில் சூலத்தேவர். குடமுழா போன்ற இசைக் கருவியை ஒருவர் வாசிக்கும் நிலை ஆகியவை பார்க்கிறோம். அம்மன் ஊடலில் ஓட, அமர்ந்துள்ள சிவன் உருவம். அருச்சுனன் வணங்கி நிற்கும் காட்சியை பின்பு பார்க் கிறோம். மற்றொரு தூணில் சிவன் பன்றி வேட்டை யாட நாயுடன் வருகிறார். தவத்தில் இருந்த அர்ச்சுனன் இறைவன் மீது 3அம்புகள் எய்திருக்கிறான். இராமர், அனுமன், ஈஸ்வரனைப் பூசிக்கின்றனர். சிவன், அர்ச் சுனன் காட்டப்படுகின்றனர்.

ஓரிடத்தில் பலாப்பழம் இருபுறமும் வைத்துக்கொண் டுள்ள பிள்ளையார் சிற்பம் உள்ளது. உமாசகிதமூர்த்தி சேடிப் பெண்களுடன் உள்ளார். பிட்சாடனார்சிற்பம், எதிரில் குடையில்லாமல் அம்மன் சிவனிடம் ஏதோ தருவது போல் காட்சி; கீழே குள்ளப்பூதம். தட்சிணா மூர்த்தி - கட்டிலில் அமர்ந்திருக்க இரு முனிவர் மட்டும் அருகில் உள்ளனர். கஜசம்ஹாரமூர்த்தி அம்மன் நாணத்துடன் நிற்கிறார். கஜேந்திர மோட்சம் மற்றும் மயில்ராவணன் சிற்பங்கள் ஒரு தூணில் பார்க் கிறோம். இங்கும் ஒரு தூண் அந்தரத்தில் தொங்குவது போல் உள்ளது.

காமாட்சி அம்மன் கோயில் மகா மண்டபத்தின் விதானத்திலும் மல்லிகார்ச்சுனர் கோயிலில் இருப்பது போல் திசைக் காவலர்கள் உள்ளனர். இவர்களுக்கு நடுவில் நடராசருக்குப் பதில் உமாசகித மூர்த்தியாக இறைவன் வீற்றிருக்கிறார். திசைக்காவலர்கள் எண்மரும் மல்லிகார்ச்சுனர் கோயில் விதானத்தில் இருப்பதுபோலவே உள்ளனர். மல்லிகார்ச்சுனர் கோயில் தூண்களில் உள்ள சிற்பங்கள் மிகுதியாகவும் சிறியவை யாகவும் உள்ளன. ஆயின், இங்குள்ள சிற்பங்கள் பெரி தாகக் குறைவாக உள்ளன. இம்மண்டபத்தின் தென் கிழக்கில் நிலவறை இருக்க வாய்ப்பிருப்பதாகக் கோவில் குருக்கள் குறிப்பிடுகிறார். இங்கிருந்து அதியமான் கோட்டைக்குச் சுருங்கை வழி இருப்பதாகச் சிலர் குறிப் பிடுவது ஏற்புடையதாக இல்லை. கோட்டைக் கோயி லுடன் தொடர்புடைய நொளம்பர் காலத் தூண்கள் வெளியில் பல இடங்களில் உள்ளன. தருமபுரி அரசு அருங்காட்சியகம் மற்றும் மசூதி ஒன்றின் உட்புறம் தரையில் மேற்படி தூண்கள் உள்ளன. கட்டிட அமைப் பிலேயே சிவன் கோயிலும், காமாட்சி அம்மன் கோயி லும் வேறுபடுகின்றன. குறிப்பாக அம்மன்கோவில் உபானம் அதிஷ்டானத்தில் ஒரே தன்மை இன்றி பல அமைப்புகளுடன் உள்ளன. பொதுவாகப் பாதம், குமுதம், பட்டிகை, கபோதம் சிறப்பாக உள்ளன. அதிஷ்டானத்தைச் சுற்றி 18 யானைகள் கோயிலைத் தாங்குவதுபோல் அமைத்துள்ளனர். சிங்கமும் காட்டப் பட்டுள்ளது. கருவறையின் தென்புற அதிஷ்டானத் திலும் கிழக்கிலும் சோழர் காலக் கல்வெட்டுகள், உள்ளன. அதேபோல் சிவன் கோயில் முன்புறம் நந்தி மண்டபத்தைச் சுற்றிக் கீழே கல்வெட்டு உள்ளது. பிற் காலத்தவர் நந்தி மண்டபம் புதிதாகக் கட்டும்போது கல்வெட்டுள்ள கற்களையும் சேர்த்துப் பயன்படுத்தி உள்ளனர்.

மாரி அம்மன்கோவிலுள்ள துவார பாலகர் சிலை, கல்வெட்டுள்ள கல், மல்லிகார்ச்சுனர் கோயிலுக்குரியவை யாகும். இங்குள்ள கல்வெட்டின் மூலம் (கன்னடம்) சைவ ஆசாரியாருக்கு மருதன் ஏரியில் நிலம் விட்டமை ஏற்கனவே பார்த்தோம். மாரியம்மன் கோயிலில் உள்ள பைரவர் சிலையும் மல்லிகார்ச்சுனர் கோயிலுக்குச் சொந்தமானவையேயாகும். இனி இராமாயணச் சிற்பங் களைக் காண்போம்.

காமாட்சிஅம்மன் கோவில் அதிஷ்டானத்தைச் சுற்றி வால்மீகி இராமயணக் காட்சிகள் சிற்பமாகச் செதுக்கப் பட்டுள்ளன. தென் மேற்கில் சிற்பம் ஆரம்பமாகிறது. ஒவ்வொரு காட்சியும் தத்ரூபமாக உள்ளது. அச்சிற்பங் களின் தன்மையை ஈண்டு மனக்கண்ணில் காண்போம்,

முதலில் காவலன் — அல்லது கட்டியக்காரன். அவனை யடுத்து மூன்று தேவியர் வருகின்றனர், புத்திர காமேஷ்டி ரிஷ்யச்சிருங்கர். யாகம் குண்டத்தில் யஷன். அவியில் வருவது மூவருக்கும் (கோசலை, கைகேயி, சுமித்திரை) தருதல். தேவியருக்கருகில் நான்கு சேடி மார்கள். சாமரம் வீசும் பணிப் பெண்கள், தசரதன் ஆகியோரை இங்குப் பார்க்கிறோம். மூன்று தேவியர் கருப்பநிலை. மேற்கண்ட காட்சிகள் மேற்கில் குறிப்பாகத் தென்மேற்கு மூலையில் பார்க்கிறோம். பின் தென்திசை அதிஷ்டானத்தில் சிற்பங்கள் தொடர்கின்றன.

கோசலை — குழந்தை இராமன்,

கைகேயி — குழந்தை பரதன், கைகேயின் திரைக்குப் பின்புறம் இரண்டு சேடியர் நிற்கின்றனர். சுமத்திரை— அவளுடைய — இரட்டைக் குழந்தைகள் இலக்குமணன், சத்ருக்கன். சுமத்திரை திரைக்குப்பின் இரண்டு ஏவல் பெண்டிர். மேற் கண்ட மூன்று தேவியரும் படுத்தபடி தம் குழந்தைகளுக்குப் பால் ஊட்டுகின்றனர்.

### குருகுலவாசம் :

இரு குழந்தைகளைச் (பரதன் சத்ருக்கன்) சேடியர் அழைத்து வர ஏற்கனவே இராமர் இலக்குமணர் குருகுலத்தில் வசிஷ்டரிடம் பாடம் படித்துக்கொண்டிருக்கிறார். திரைக்குப் பின்புறம் சேடியர் காட்டப்படுகின்றனர்.

### போர்ப் பயிற்சி :

ஆசிரியர் இராமனைத் தழுவியபடி வில்வித்தை கற்பித்தல், இலக்குமணன் வில்வித்தை கற்றல், வில்லுடன் ஓர் ஆள் இவற்றை யடுத்து பார்க்கிறோம்.

### விசுவாமித்திரர் யாகத்திற்கு இராமனை அழைத்தல் :

மூன்று பிள்ளைகள் - தசரதன் அமர்ந்த நிலை ; விசுவாமித்திர முனிவர் சடாமுடியுடன் குடையுடன் காட்சி தருகிறார். இராமனை அழைத்துப்போக முனிவர் விரும்புகிறார். தசரதன் துயரப்படுகிறார் வசிஷ்டர் இராமரை முனிவருடன் அனுப்பும்படிக் கூறுகிறார். சேடிப் பெண்கள் கவரி வீசுகின்றனர். இலக்குமணன் தசரதனை அணைத்துத் தானும் இராமனுடன்போவேன் என்கிறான். இராமன், பக்கத்தில் நிற்கிறான். பிரியும் முன் இராம இலக்குமணர் இருவரையும் மன்னன் ஆலிங்கணம் செய்கிறான் விசுவாமித்திரர், இராம இலக்குமணரை அழைத்துப் போதல், சேடிப் பெண்

ஒருத்தியும் உடன் செல்லல் ஆகிய சிற்பங்கள் பின்பு பார்க்கிறோம்.

## தாடகை வதை

தாடகை, சூலம் ஏந்திவருதல். இராமர் அம்பு எய்யத் தாடகை விழுதல் பழைய உருதாடகை பெறுதல். விசுவாமித்திரர், நீர்வார்த்தெடுத்தல் மந்திர உபதேசம் பலா அதிபலா - இலக்குமணன் கைக்கட்டி நிற்றல்; மூவரும் ஆஸ்ரமம் நோக்கிபோதல் இராமர்யாகம் காத்தல் ஆகிய காட்கிகள் அடுத்து பார்க்கிறோம்.

## மிதலைக் காட்சி

மிதலை செல்லல், வில்முரித்தல் விசுவாமித்திரர் ஜனகர் - வசிஷ்டர் ஆகியோர் நிற்றல் நான்கு பெண்கள் இராமரை வரவேற்றல் அரண்மனை - கோயில் போன்ற அமைப்பில் உள்ளது. உப்பரி கையில் சீதை ஊர்மிளை சேடியருடன் வீற்றிருக்கிறார்.

## திருமண நிகழ்ச்சி

இராமரும் இலக்குமணரும் ஜோடியாகவும் பரதனும் சத்ருக்கணும் இணையாகவும் நிற்றல். ஜனகர், மனைவி இருவரும் தம் மகளைத் தாரைவார்த்துத் தருகின்றனர். பரசுராமர், இராமரை ஆசிர்வதித்து அனுப்புகிறார்.

## கைகேயி வரம் பெறுதல்

கம்பராமாயணம் போன்ற இராம காதைகளில் மந்தரை சொற்கேட்டுத் தலைவிரி கோலமாய்த் தசரதனிடம் வரம் வாங்குவதாகப் பார்க்கிறோம். ஆனால் இங்குக் கைகேயி பயபக்தியுடன் சுமங்கலி கோலத்தில் வரத்தினைப் பெறுவதாக சிற்பத்தில் பார்க்கிறோம். முதலாவதாக இராம இலக்குமணர் கைகேயிடம் ஆசிபெறு

வருகின்றனர். கூனி கோள் மூட்ட கைகேயி அமர்ந்தபடி கேட்டுக் கொண்டிருக்கிறாள்· பின் கைகேயி அரசனிடம் பவ்யமாகக் கைக்கட்டி வாய்ப்பொத்தி. வரம்கேட்கிறாள் தசரதன் கால்மீது கால்போட்டு அமர்ந்து அபய அஸ்தத்துடன் வரம்தருகிறார். இராமரை அழைத்துவர காவலன் செல்லுதல்; இராம இலக்குமணரை அழைத்து காட்டிற்குச் செல்லுமாறு கைகேயி சொல்லுதல்; தசரதன் துன்பத்தில், தலைமீது கைவைத்து நிற்றல்; அருகில் இராமன் நிற்றல். ஆகிய காட்சிகள் தத்ரூபமாக செதுக்கப்பட்டுள்ளன.

## குகன் இராமனை வரவேற்றல்

இராமன், இலக்குமணன், சீதை மூவரும் காட்டிற்குச் செல்லுதல்- குகன்என்ற வேடன் கூப்பிய நிலையில் வரவேற்றல்- இராமர். இலக்குமணர், சீதை மூவரும் பஞ்சவடி நேக்கிப் போதல்- பஞ்சவடியில் இராமர் சீதை. இருத்தல் அடுத்த காட்சியாகக் காண்கிறோம்.

## சூர்ப்பனகை மானபங்கம்

சூர்ப்பனகை வருகிறாள் இலக்குமணன் சர்வ பங்கம் செய்கிறான். அவள் மூக்கை அரிய சூர்ப்பனகைக் கத்துகிறாள். மூக்கின்றி சூர்ப்பனகை காட்சி. இவன் கோலத்தைக் கண்டு இராமர் இலக்குமணர் சந்தோஷப் படுகின்றனர்.

## கரதூஷன் வதம் செய்தல்

கரன், துஷன் என்ற இரு அசுரர் இராமரால் கொல்லப்படுதல், மேற் கண்ட இருவரும் தலை கீழாக விழுதல்.

## சூர்ப்பனகையும் இராவணனும்

மான பங்கத்திற்கு ஆளான அரக்கி சூர்ப்பனகை மூக்கின்றி இலங்கை அரண்மனைக்குச் செல்லுதல், இராவணன் தங்கைக்கு அபயம் அளித்தல். பத்துத் தலையின்றி, இராவணன் ஒரு தலையுடன் காட்டப்பட்டுள்ளான்.
பின் படை வீரனைப் பார்க்கிறோம்.

இராவணன், மண்டோதரி, தாடியுடன் விபீடணன், கும்ப கருணன். ஆகிய சிற்பங்கள் அடுத்து உள்ளன. அன்னப் பறவை பூட்டிய இரதம். இரதத்தில் மூடு பல்லக்கு இது இராவணன் வாகனமாகும்.

## மாயமான்

இலங்கை மன்னன் இராவணன் ஆலோசனைப்படி மாயமானாக மாரீசன் சீதையருகே ஓடுதல். மான் ஓட சீதையின் விருப்பத்திற்கிணங்கி இராமன் பின் தொடர்தல். அம்பெய்தல். மான் வடிவில் இருந்த மாரீசன் சுய உருபெற்று தலை கீழாக கீழே விழுதல். ஆகிய காட்சிகள் கண்ணையும் கருத்தையும் கவரும் விதத்தில் செதுக்கப்பட்டுள்ளன. இலக்குமணன் இராமனைச் சந்திக்கிறான் இருவரும் சீதையைத் தேடி ஓடுகின்றனர்.

## இராமனும் சுக்ரீவனும்

மனைவியைப் பிரிந்த இராமன் தம்பியுடன் கிட்கிந்தாகானம் வருதல். சுக்ரீவனைச் சந்தித்தல். ஏழுமராமரங்களை ஓரம்பினால் துளைத்தல். அக்கினி சாட்சியாக, சுக்ரீவன், இராமன் இருவரும் நட்பு கொள்ளுதல் ஆகியவற்றை ஈண்டுப் பார்க்கிறோம். கிழக்குப் புற அதிஷ்டானத்தில் சிற்பக்காட்சிகள் குறைவாகும்.

## அனுமனின் செயல்கள்

வானரக் கூட்டத்திடையே அனுமானிடம் இராமர் கணையாழியைத் தருகிறார். கடல் நோக்கி அனுமான் செல்லுதல், கடல்தாவும் அனுமான் மூன்று அரக்கியருடன் போரிடுதல் - இறுதியாக இலங்கா வதனியை வதம் செய்தல், இலங்கை மாநகரின் கோட்டையடைதல், கோட்டை மாடத்தில் அயர்ந்து ஓய்வு எடுத்தல் ஆகிய அனுமனின் செயல்கள் பின் சிற்பமாகப் பார்க்கிறோம். இராவணன் சேனையுடன் (ஆறுபேர் காட்டப்பட்டுள்ளனர்.) அனுமார் யுத்தம் செய்கிறார்.

## இலங்கைப் போர்

இராமர், இலக்குமணர், சுக்ரீவன் ஆகியோர் இலங்கை நோக்கிப் பயணம் செய்கின்றனர். வானரச் சேனை கடலில் பாலம் அமைத்தல், தேவ தச்சனாகிய மயன் பாலம் அமைத்தல், அலை வீசும் தன்மையுடன் மீன்களைத் தன்னகத்தே கொண்டதாகச் சமுத்திரம் காட்டப்பட்டுள்ளது. இலக்குமணன், விபீடணன், அனுமான், இராமர் ஆகியோர் கலத்துரையாடுகின்றனர். விபீடணனும் அனுமானும் பேசுதல். இராமர் இலங்கை படைப் பிரிவை எதிர்த்தல். ஒருவன் வீழ்ந்துபட சிலர் ஓட்டம் பிடிக்கின்றனர்.

## அங்கதன் தூது

அன்னபட்சி வாகனத்தில் இராவணன் அமர்ந்திருக்க எதிரில் அங்கதன், கோட்டையின் வடிவம் ஆகியவை பார்க்கிறோம்.

## இந்திரசித்துவின் போர்

மேகமண்டலத்தில் மாயப் போர், அனுமார் தோள் மீது இலக்குமணன், போர்க்கள காட்சி, நாகேஸ்வர பிர

யோகம். இலக்குமணன் மயங்கி விழுதல். அனுமார் தாங்கும் நிலை. அனுமாரிடம் இராமர் பேசுதல். சஞ்சீவி கொண்டு வருமாறு இராமர் பணித்தல். அனுமார் சஞ்சீவிக்காக அந்தப் பருவதத்தையே தலைமீது தூக்கி வருதல். விழித்த இலக்குமணனும் இராமரும் கூடிய காட்சி. பெரிய உடம்புடன் கும்பகருணன் போர்க் களத்திற்கு வந்து யுத்தம் புரிகிறார். இலக்குமணன், அனுமன், விபீடணன் ஓரிடத்தில் நிற்கின்றனர். இராமர், இராவணன், போர்க் காட்சி. இராவணன் கோரப் பல் லுடன் பயங்கர நிலையில்; கதாயுதம். இராமரும் இலக்கு மணரும் கதாயுதம் வைத்திருக்கின்றனர். அனுமனும் விபீடணனும் அருகில் நிற்கின்றனர். இராவணாதிகள் சரணடைதல். சீதையை இராமர் சிறை மீட்கிறார். இராமர் சீதையிடம், விபீடணன் ஆசி கோருகிறார். விபீடணன் பட்டாபிஷேகம் நடைபெறுகிறது. அனுமன் இலக்குமணன், சுக்ரீவன், அருகில் நிற்கின்றனர். இராமர், சீதாராமனாகக் காட்சி தருகிறார். சீதையை மீட்ட பின் யாவரும் மகிழ்ச்சியடைகின்றனர். நாட்டியப் பெண், புல்லாங்குழல் வாசிப்பவர், மத்தளம், தாளம் ஆகியவை மீட்டுபவர் ஆகியோரைப் பார்க்கிறோம்.

நடனக் காட்சி சிறப்பாக உள்ளது. பின் சிற்பம் மேற்குத்திசையில் தொடர்கிறது. இராமர் சீதை இணை யாக இருக்கின்றனர். அருகில் சேடிப் பெண் இருக் கின்றாள். ஆணும் பெண்ணும் நாட்டிய மாடும் காட்சியும் உள்ளது.

## இராமர் சந்தேகம்

ஒரு பெண் குடத்துடன் நிற்கிறாள். மற்றொருத்தி அருகில் இருக்கிறாள். இராமர் வண்ணானையும் வண்ணாத்தியையும் அழைத்துப் பேசுகிறார். விசாரணை செய்கிறார். இறுதியாக இராமர் சீதை சேர்ந்து அணைத்தபடி நிற்க அருகில் இலக்குமணன் நிற்கிறான்.

இராமர் சீதை - பின் நாட்டியப் பெண் இருவர் நிற்கின்றனர். சீதா பிராட்டியைத் தங்கப் பிரதிமையில் பூசித்தல். லவகுசா இருவரும் வருதல். இத்துடன் இராமயணக் காட்சியும் முடிவடைகின்றது. அதிஷ்டானத்தைச் சுற்றிப் பதினெட்டு யானைகள் காட்டப்பட்டுக் கோயிலைச் சுமப்பதுபோல் அமைத்துள்ளனர். இராமாயணச் சிற்பங்களுக்குக் கீழும், வேறு சிற்ப வேலைப் பாடுகள் அதிஷ்டானத்தில் இருக்கும்போல் தெரிகிறது. கோயிலைச் சுற்றி மர்மத்தானத்தில் திறந்த வெளியில் பரப்பப்பட்டுள்ள கருங்கல் பலகைகளை அப்புறப் படுத்திப் பார்த்தால் இராமாயணச் சிற்பங்களுக்குக் கீழ் எப்படி உள்ளது என்பதைப் பார்க்கலாம்.

அம்மன் கோயில் எதிரில் நீராழி மண்டபம் இருக்கிறது. முற்காலத்தில் இங்கு குளம் இருந்திருக்கலாம். தற்போது கிழக்கிலும் தெற்கிலும் இருபுறமும் கோயில் வாசல் வழிகள் உள்ளன. சந்திரனும் சூரியனும் உடைந்த நிலையில் கிழக்கில் நட்டு வைத்துள்ளனர். தீபஸ்தம்பம், துவஜஸ்தம்பம், நந்தி பலிபீடம் ஆகியவை வழக்கம்போல உள்ளன. நந்தி பலி பீடத்தில் வடக்கில் கல்வெட்டு உள்ளது. 16 கால் மண்டபத்தில் நவக்கிரகக் கோயில், வீரபத்திர சுவாமி ஆகியவை உள்ளன. சுற்றுப் பிரகார கோஷ்டத்தில் நர்த்தன விநாயகர், தட்சணாமூர்த்தி, விஷ்ணு, பிரம்மா, துர்க்கை ஆகியோர் உள்ளனர். சண்டிகேஸ்வரர் தனிக் கோயிலும் உள்ளது. பைரவர் கோயில், விநாயகர் கோயில் சுப்பிரமணியர் கோயில் ஆகியவை சுற்றுப் பிரகாரத்தில் உள்ளன.

## செப்புத் திருமேனிகள்

மல்லிகார்ச்சுனர் கோயில் மகாமண்டபத்தின் வடக்கில் மேடை கட்டி உத்சவ மூர்த்திகளை வைத்

துள்ளனர். சிற்கண்ட செப்புச் சிலைகள் இக் கோயிலில் உள்ளன.

## சோமாஸ்கந்தர்

இறைவனும் அம்மையும் அமர்ந்துள்ளனர். இறைவனுக்கு மான், மழு, அபயம், வரதம் என்ற நிலையில் நான்கு கைகள் உள்ளன. கழுத்தில் மாலை சுகாசனத்தில் அமர்ந்த நிலை முருகர் தனியாக இங்கு உள்ளார். தனி அம்மன் இங்கு உள்ளார். நடராசர் அருகில் சிவகாமி மலர் ஏந்தியபடி உள்ளார். வள்ளி, தெய்வயானையுடன் முருகர். அஸ்தர தேவர் ஆகியோர் உள்ளனர்.

## கோட்டைக் கோயிலும் ஆராய்ச்சியும்

கோட்டைக் கோயிலுக்குச் சொந்தமாக இரண்டு குளங்கள் உள்ளன. ஒன்று, கோட்டைக் கோயில் அருகில் மீராசாகிப் குளம் என இன்று வழங்கப்படுகிறது. இங்குள்ள படிக்கட்டுகளில் சோழர் காலச் சிதைந்த கல்வெட்டுகள் உள்ளன. கோட்டைக் கோயில் சிவலிங்கம் தவிர 5 இலிங்கங்கள் தருமபுரியைச் சுற்றிப் பார்க்கிறோம். அவைகளுள் பழைய தருமபுரியில் உள்ள இலிங்கமும் தருமபுரி கடைத் தெருவிலிருந்து இராஜாப் பேட்டை செல்லும் பழைய பாதையில் உள்ள இலிங்கமும் குறிப்பிடத் தக்கவையாகும். சிவன் கோயில்களில் நடைபெறும் திருவிழாக்கள் கோட்டைக் கோயிலிலும் நடைபெறுகின்றன.

மேற்கண்ட இரண்டு கோயில்களும் நொளம்பர் காலத்தில் மல்லிகார்ச்சுனர் கோயில், காமாட்சி அம்மன் கோயில் என வழங்கப்பட்டிருக்க முடியாது. பிற்காலச் சோழர் கல்வெட்டுகள் வாயிலாக ஒரே திருச் சுற்றில் மூன்று கோயில்கள் இருந்ததைப் பார்க்கிறோம். சாணாயிர முடையார்; முழுமாயிர முடையார், (இவருக்குத் திருவேளாலீச்சுர முடையார் என்ற பெயரும் உண்டு) ஓரா

யிரீஸ்வர முடையார் கோயில் ஆகும். இம் மூன்றில் முழு மாயிர முடையார் என வழங்கப்பட்ட திரு வேளாலீச்சுரர் முடையார் பிரதான ஆலயம் எனலாம். இக் கோயிலின் தல விருக்ஷம் வேல மரமாகும்

மேற் குறிப்பிட்ட மூன்று கோயில்களில் சாணாயிர முடையார் கோயில், காமாட்சியம்மன் கோயிலுக் கருகில் உள்ள சிவன் கோயிலாக இருக்க வேண்டும். நொளம்பர் காலத்திற்குப் பின் யாரோ ஒருவர் கட்டிய கோயிலே ஓராயிர ஈஸ்வர முடையாராக இருக்க வேண்டும். இக் கோயில் முழமாயிர முடையார் அல்லது திரு வேளாலீச் சுரமுடையார் என வழங்கப்பட்ட கோயிலுக்கு அருகில் இருந்திருக்க வேண்டும். தற்போது காமாட்சி அம்மன் கோயில் அருகில் ஒரு சிவன் கோயில் உள்ளது. அதுவே **ஓராயிரீஸ்வர முடையார்** கோயில் போலும். முழ மாயிர முடையார் அல்லது திரு வேளாலீச்சுர முடையார் கோயில் இன்றுள்ள காமாட்சியம்மன் கோயிலேயாகும். இதில் வியப்பதற் கேதுமில்லை. கல்வெட்டு, சிற்பம், கட்டிட அமைப்பு, ஆகம முறை ஆகிய தன்மைகளின் அடிப்படையில் இக்கருத்தை நாம் உறுதி செய்யலாம். முதலாவதாக நொளம்பர் கல்வெட்டுச் சான்றின்படி சிவன் கோவிலும் சமணக் கோயிலும் மட்டுமே பார்க்கிறோம்.

இரண்டாவதாகப் பிற்காலச் சோழர் கல்வெட்டுகள் பாழ்பட்ட கோயில்களைக் குறிப்பிடும்போது யாண்டும் அம்மன் கோவில்களைக் குறிப்பிடவில்லை.

மூன்றாவதாக, பொதுவாகச் சோழர் காலத்திற்கு முன்பு அம்மனுக்கும் சுவாமிக்கும் சம அந்தஸ்தில் ஓரே இடத்தில் அடுத்தடுத்து கோயில் கட்டியதாகக் குறிப்பாகக் கட்டிடக் கோயில் கட்டியதாகச் சான்றில்லை. காஞ்சி காமாட்சியம்மன் போன்ற கோயில்கள் அம்மனுக்கு

மட்டுமே முக்கியத்துவம் தந்து கட்டப்பட்டு அங்கே சிவன் இரண்டாம் இடத்தைப் பெறுகிறான்.

நொளம்பர் கோயில் கட்டிய சமகாலத்தில் முற்காலச் சோழர்கள் கட்டிய நூற்றுக்கணக்கான சிவன் கோயில்களில், அம்மன் கோவில் சிவனுக்குச் சமமாக ஒரே இடத்தில் கட்டப்படவில்லை. மாறாக ஒரே இடத்தில் இரண்டு சிவன் கோயில்கள் ஏராளமாகக் கட்டப்பட்டுள்ளன. இரண்டு மட்டுமின்றி மூன்று கோவில்கள்கூட கட்டப்பட்டுள்ளன.[90] பொதுவாகக் குலோத்துங்க சோழனுக்கு முன்புவரை சிவன் கோயிலிலேயே ஒரு பகுதி (ஓரிடம்) அம்மனுக்கு வழங்கப்படும்.

அம்மனுக்குத் தனியாகச் சன்னதி எழுப்பும்போது சிவன் கிழக்கு முகமாகப் பார்த்தபடி இருக்கும்போது அம்மன் கோயில் வடக்கில் கட்டப்பட்டு, தெற்கு பார்த்த படிதான் அமைக்கப்படும். விதி விலக்காக, சிவன் மேற்குத் திசை பார்த்தபடி இருப்பதுண்டு. அம்மன் தெற்கு திசைப் பாராமல் வேறு திசை பார்ப்பதுபோல் இருப்பினும் பிரதான சிவன் கோயிலில் அம்மன் கோயில் சிவன் கோயிலை விட சிறப்பாக அமைப்பதில்லை. இங்கு சிவன் கோயிலை விடச் காமாட்சி அம்மன் கோவிலே கட்டிட அமைப்பில் சிற்ப அமைப்பில் சிறந்து விளங்குகிறது. இங்குள்ள தூண்களில் காணப்படும் சிற்பங்கள், அதிஷ்டானத்தில் காணப் படும் இராமாயணச் சிற்பக் காட்சிகள் ஆகியவற்றைக் காணும்போது இது அம்மன் கோவிலாக இருந்திருக்க முடியாது என்றே தோன்றுகிறது.

மூன்று சிவன் கோவில்களின் பெயர்களைக் குறிப்பிடும் இரண்டு சோழர் கல்வெட்டுகளும்கூட அம்மன் சன்னதி உள்நாழி அதிஷ்டானத்தில்தான் உள்ளது. வெவ்வேறு கலை அம்சம் கொண்ட சாணாயிரமுடையார் மற்றும் முழுமாயிரமுடையார் இரண்டு சிவன் கோயில்களே இன்றுள்ள மல்லிகார்ச்சுனர் கோயிலும் காமாட்சி

அம்மன் கோயிலுமாகும். கி.பி. 15ஆம் நூற்றாண்டளவில் ஆட்சிபுரிந்த விஜயநகரப் பேரரசன் மல்லிகார்ச்சுனர் பெயரில் சாணாயிரமுடையார் கோயிலானது மல்லிகார்ச்சுனர் கோயிலாக மாறியபோது முழமாயிரமுடையார் கோயில் காமாட்சி அம்மனாக மாற்றப்பட்டது போலும். அம்மனுக்கும் முக்கியத்துவம் தர வேண்டி சிவன் கோயில்களில் ஒன்று முழமாயிரமுடையார் அம்மன் கோயிலாக மாற்றப்பட்டிருக்க வேண்டும். இரண்டு சிவன் கோயில்களில் இருந்த அம்மன் கற்சிலைகள் ஒரே கோயிலில் அதாவது காமாட்சியம்மன் கோயிலில் வைத்து விட்டனர் போலும். இன்று காமாட்சியம்மன் கோயிலே சிறப்பிடம் பெறுகிறது.

மூன்றாம் குலோத்துங்கன் பத்தாம் ஆட்சியாண்டில் திருக்காளத்தியினின்று வந்த ஆண்டார் ஒருவர் வண்ணாவைக் கும்பிட்டார் என்ற பெயரையுடைய சிவநேயச் செல்வர் கோயில்கள் பாழ்பட்டுக் கிடப்பதைக் கண்டு வேதனைப்படுகிறார். மூன்றாம் குலோத்துங்கனின் கீழ் தகடூர் நாட்டையாண்ட அதிகைமானிடம் முறையிடுகிறார். சாணாயிரமுடையார், முழமாயிரமுடையார், ஓராயிரீஸ்வரமுடையார் ஆகிய மூன்று கோயில்களுக்கும் சிவப்பிராமணரை நியமிக்க ஆண்டார் வேண்டுகிறார். அதிகைமானார் சிவப்பிராமணரை அழைத்து வருமாறு அவரிடமே ஆணையிடுகிறார். ஆண்டாரும் சிவப்பிராமணரை அழைத்துவர அதியமான் அதிரோக தியாகி வாசலுக்குள்ளிருந்து சிவப்பிராமணற்கு நீர் வார்த்து மேற்படி கோயில் பூசாரிகளாக நியமிக்கிறான். அரசூருடையான் என்பவன் உத்தரவினில் கையெழுத்திடுகிறான். அரசூர் தருமபுரிமாவட்டத்தில் இன்றும் அதே பெயரில் உள்ளது.

குலோத்துங்கனின் பன்னிரண்டாம் ஆட்சியாண்டு கல்வெட்டு மேற்குறிப்பிட்ட மூன்று கோயில்களையும்

திருப்பிரதிஷ்டையும் திருப்புதுக்குச் சாந்து செய்ததையும் குறிப்பிடுகிறது. அதிகைமான் நல்வாழ்வுக்காக வேண்டி அதியமான் அடியான், பம்மாரக் கூத்தன் புலியூர்க்கிழவன் தம்பிரானான சோழன் மேற்கண்ட கோயில்கள் புதுப்பிக்கும் பணியில் ஈடுபடுகிறான். மேற்கண்ட இரு கல்வெட்டுகள் வருமாறு :

''ஸ்வஸ்ஸ்ரீ திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீகு
லோத்துங்க சோழ தேவற்குயாண்டு ப
ன்னிரண்டாவது நிகரிலி சோழமண்ட
லத்துக் கங்க நாட்டுத் தகடூர் நாட்டுத்
தகடூரில் முழமாயிரமென்று பேர்கூவ
ப்பட்ட இக்கோயில் திருவேளா லீச்
சுரம் உடையார் கோயிலில் திருப்பருதிட்டையும் திருப்புது
க்குச்சாந்தும் சேவித்தேன் அதியமானுக்கு நன்றா
க வென்று அதியமான் அடியேன் பம்மார கூ
த்தனேன் புலியூர் கிழவன் தம்பிரானானசோ
ழனேன்''[91]

''ஸ்வஸ்தஸ்ரீ
திரிபுவனச் சக்கரவர்த்தி
கள் ஸ்ரீ குலோத்துங்க
சோழதேவற்கு யாண்
டு பத்தாவது நிகரிலி சோழமண்டலத்துக் க
ங்க நாட்டுத் தகடூர் நாட்டுத் தகடூரில் சாணாயிர
முழமாயிர முட்பட்ட கோயில் உடையார்திரு
வேளாலீஸ்வர முடையாரும் உடையாரோ
ராயீஸ்வர முடையார் கோயிலும் இக்கோயி
ல்கள் இன்ன தனைகாலம் பாழ்பட்டுக்
கிடந்ததென்று அறிவாரில்லை திருக்காளத்
தியினின்றும் ஆண்டார் வண்ணானை
க் கும்பிட்டாரெழுந்தருளி இக்கோயில்கள் கிட

க்கிற அனுக்கிரத்தை
க்கண்டு அதியமா
னார் மாடலேன் வ
தேவரே சாணாயிரமு
ழ மாயிர முட்பட்ட
கோயில்கள் மூன்று
ம் சிவப்பிராமணர்
பூஜிக்க வேணுமென்
று ஆண்டார் அதிய
மானார்க்கு சொல்ல அவருமாண்டீ
ருமக்கு ஆவானொரு சிவப்பிராம
ணனைக் கொடுவாருமென்ன ஆண்டாரும்
அட...த்தில் காண உடை
ய சிவப்பிராமன்...........
யன் தேவருலகத்தே கொ
டுவந்து காட்ட சாணாயிர முழமாயிர முட்பட்ட
கோயில்கள் உன
க்கே காணியாக தந்தோம்என்று அதிரோகதியாகி
வாசலுக் கு
ள்ளே இருந்து திருக்கையாலே நீர்வார்த்து அப்போதே
காணி பிரம்மா
ணமாக எழுதி தி...றுக்கோகுடுத்தோமென்று திருவெ
ழுத்துமிட்டு இதுக்கு அரசுருடையானெழுத்துமிட்டு
தகடுர்த''[92]

# நரசிம்மப் பெருமாள் கோயிலைக் குறிக்கும் கல்வெட்டு

.....................

... தநார் திம்மைய நாய்க்கர் வாளுக்கும் தோளுக்கு நன்றாக தகடை னாட்டு நாயகம் செய்வார் ஆரோதைர், இராம நாயினார் பொன்னக் கூத்தரும் மற்றுமுள்ள நாட்டவரும்

... பண்ணிக் குடுத்து ஆரோத ரெழுத்து மிட்டுக் குடுத்தோம். உதையப் பெருமாளுக்கு இத் திருக் கோபுரம் இறன்து போனதும் புதுக்கி என்னுடை யார் [98]

தகடூரில் உள்ள உதைய பெருமாள் கோபுரம் சிதைவுற்றதால் தகடூர் நாட்டை ஆளும் இராம நாயனார் பொன்னக் கூத்தரும் நாட்டவரும் (சபை) புதுப்பிக்க கி. பி. 15 ஆம் நூற்றாண்டில் ஏற்பாடு செய்வதை காண் சாகிப் குளக்கரைக் கல்வெட்டொன்றுக் குறிப்பிடுகிறது. உதைய பெருமாள் கோபுரம் பழைய தருமபுரியில் உள்ள நரசிம்மப் பெருமாள் கோயிலாக இருக்கலாம். கோட்டைக் கோயில் அருகில் பரவாசுதேவர் என்ற கோயில் இருப்ப தால் கல்வெட்டு இக் கோயிலையும் குறிப்பிடலாம்.

குளத்தின் கரையில் உள்ள மற்றொரு கல்வெட்டு கி.பி. 15ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது. முழுமையில்லை. இரண்டுவரி மட்டும் உள்ளது.[94]

... விட்ட நிலம் முக்கண்ட....
... லையும் மேனோக்கி ம ...

மற்றொரு சிதைந்த கல் வெட்டு குளக் கரையில் உள்ளது. ஒருவரி மட்டுமே இன்றுள்ளது.[95] காலம் கி. பி. 14 ஆம் நூற்றாண்டு.

ம் பூசையு நடத்து கையில் யிவற்கு.

மேற் கண்ட கல் வெட்டுகள் எக் கோயிலைச் சுட்டு கின்றன எனத் தெரியவில்லை.

தருமபுரி இராமக்கா ஏரிக் கரையிலுள்ள பிள்ளையார் கோவில் மேடையில் வைத்துக் கட்டப்பட்டுள்ள துண்டுக் கல்வெட்டு கி. பி. 11-12 ஆம் நூற்றாண்டு எழுத்தமைதியைக்கொண்டுள்ளது. இறைவனுக்குக் கொடுக்கப் பட்ட திருவாபரணம் முதலியவற்றைக் குறிக்கிறது.[96] இது எந்தக் கோயில் கல் வெட்டு என்று தெரியவில்லை. கோட்டைக் கோயில்களில் ஒன்றாக இருக்கலாம்.

..................

ரமுடையார்க்கு தொண்டை நாட்டு...

திருவாபரணம் பட்டம் இரு கழஞ்சு உத்தரியம் எ...

முழமாயிரமுடையார் கோயிலாகவும் இது கொள்ளலாம்.

## அரிஹர நாதர் கோயில்

தருமபுரி நகரில் தொன்மையான கோயில்களுள் ஒன்று அரிஹர நாதர் கோயிலாகும். கோயில் கட்டிடக் கலை, சிற்பக்கலை இவற்றில் விசேஷமில்லை. ஆயின் பல பழைய தமிழ்க் கல்வெட்டுகளையும் சில தெலுங்குக் கல்வெட்டுகளையும் இக் கோயிலில் பார்க்கிறோம். இக்கோயில் அம்மன் சன்னதியின் உண்ணாழி வாயிற்படி

யில் உள்ள கல்வெட்டு வேறொரு கோயிலுக் குரியதாகும். கல்வெட்டு வருமாறு:

> ஸ்வஸ்தஸ்ரீ ராஜாதி ராஜ தேவற்கு யாண்டு 32
> ஆவது ஜயங் கொண்ட
> தகடூர் கோச் செங்கணீஸ்வரமுடைய
> மகாதேவற்கு வைய்த்த திருநொந்தா விளக்கு.[97]

அரிஹர நாதர் கோயில், முற்காலத்தில் இராஜராஜீஸ்வரமுடையார் என வழங்கப்பட்டுள்ளதைக் கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன. இங்குள்ள கல்வெட்டுகளை இனி ஆய்வு செய்வோம்.

> ஸ்வஸ்தஸ்ரீ ராஜ ராஜதேவற்கு யாண்டு எட்டாவது
> விடுகாதழ
> கிய நல்லூர் ராஜராஜீஸ் வரமுடைய னாயனார்
> திருமண்டபம் விடு
> காதழகிய பெருமாள் தந்மம் இத்தன்மத்துக்கு புறக்
> கரை ஏரி கீழ் நீர் நிலம்
> இருபதின் கண்டகமும் சந்திராதித்ய வரை செல்லக்
> கடவது இத் தன்மத்தை மாற்றினா ருண்டாகிற்
> கெங்கை
> க் கரையிற் குராற் பசுவைக் கொன்றாந் பாவங்
> கொள்வார் வல்லவரையன் சத்தியம்.[98]

கோயிலின் முன்புறமுள்ள மண்டபமே இங்குச் குறிக்கப்படும் மண்டப மெனலாம். புறக்கரையில் ஏரி நிலம் விடப்படுகிறது. இருபது கண்டகம் விதை விதைக்கக்கூடிய நிலம் இன்றைய கணக்கில் 80 ஏக்கர் எனலாம். மூன்றாம் இராஜ ராஜன் காலத்தில் இக்கோயில் கட்டப்பட்டிருக்க வேண்டும்.

கி. பி.1253இல் சோமேஸ்வர மன்னனாகிய போசள மன்னன் நலனுக்காக குமார கண்டர் சோமய

தண்ணாக்கர் மகன் சிங்கய தண்ணாக்கர், இராஜ ராஜீஸ் வரமுடைய நாயனார் பூசைக்கும் திருப்பணிக்குமாக மேலேரியைச் சேர்ந்த நஞ்சை, புஞ்சை நிலங்களும் ஊரும் வரிவகைகளும் தானமாகத் தருகிறார். அக் கல் வெட்டு வருமாறு:

ஸ்வஸ்தஸ்ரீ சோமீஸ்வர தேவற்கு யாண்டு இரு
பதாவது ஸ்வஸ்தஸ்ரீ ம
ஹுமகா பிரதாணி குமார கண்டர் கோச் சோமய
தண்ணாக்கர் மக
னார் சிங்கய தண்ணாக்கர் ஸ்வஸ்தஸ்ரீ கடைக்
கோட்டூரான னானாதேசிப்பட்ட
னத்து உடையார் ராஜராஜீஸ்வரமுடைய நாய
னாற்கு மேலேரி நஞ்செய்
புஞ்செய் நாற்பால் எல்லையும் ஏரியும் ஊரும்
இவ்வாண்டு முதல் சோ
மீசுர தேவர் வாளுக்கும் தோளுக்கு நன்றாக
பூசைக்குந் திருப்பணிக்
குமாக உடலாக விட்டது. இதுக்கு நாட்டு வரவு
கற்பூரம் காணிக்
கை சில்லந்த ராயங்கள் அனைத் தாயங்களு மகப்
பட்ட நாயனாற்கு
முன்பு தேவதானம் திருவிடையாட்டம் பட்ட
விருத்திகளும் ராஜஸா
தனமுள்ள நீக்கி அல்லாதடங்கலும், மற்று மெப்
பேர் பட்டதுவும்
உதக பூர்வமாக இன்னாயனாற்கு விட்டேன்
சிங்கய தண்ணாக்கரேன்
இத்தன் மத்துக்கு இலங்கணம் பண்ணினாருண்
டாகிற் கங்கையி
டை குமரியிடை கோப்பிராமணனை வதித்த பிரம
தேயம் கொள்வார் இ
துக்கு ஸ்ரீமாகேஸ்வரரும் நாடும் நகரமும் ரக்ஷை.[99]

கல்வெட்டில் வரும் மேலேரி, இராமக்கா ஏரியாக இருந்திருக்கலாம். கோயில் பூசைக்கு உடலாக (முதல்) நிலம் வைக்கப்படுகிறது. தானத்தைச் சிங்கய தண்ணாக்கர் வழங்குகிறார். மாஹேஸ்வரரும், நகரத்தாரும், நாட்டாரும் தருமத்தைத் தொடர்ந்து செய்துவர உறுதி செய்கின்றனர்.

மற்றொரு கல்வெட்டு வீர தேவராயர் காலத்தில் வெட்டியதாகும். இதுவும் பொம்மைய நாய்க்கர் மகனார் திம்மைய நாய்க்கர் வாளுக்கும் தோளுக்கும் நன்றாக நாட்டவரும் இராம நாயினார் பொன்னக் கூத்தரும், இராஜ ராஜீஸ்வர முடையார்க்கு தானம் செய்ததைப் பார்க்கிறோம். இக் கல்வெட்டிலும் மேலேரி வருகிறது. முதல் என்ற பொருளில் உடல் வருகிறது. இனிக் கல்வெட்டைக் காண்போம்.

ஸ்வஸ்தஸ்ரீ மன் மகா மண்டலேஸ்வரன் ஹரிஹர ராயவிபா
டன் பாஷைக்குத் தப்புவராய கண்டன் மூவராயக
ண்டன் கண்ட நாடுகொண்டு கொண்டநாடு குடாதான் பூர்வ
தஷிண பச்சிமோத்தர சதுசமுத்திராதிபதி இராஜாதி ராஜன் இராஜபரமே
ஸ்வரன் ஸ்ரீ வீர தேவராயர் மகாராயர் பிருதிவி ராஜ்யம் பண்ணி அருளாநின்ற சகா
ப்தம் 1343 இவர் பிரதாணி முள்வாய் அன்னதான உடையார்க்குச் செல்ல
ா நின்ற காலத்து இதன் மேற்செல்லாநின்ற பிலவ ஸம்வத்ஸரத்து கற்கடக
நாயிற்று அபர பக்ஷத்து ப்ரம்மதேயம் வியாழக் கிழமையும் பெற்ற பூசத்து ந
ாள் நிகரிலி சோழமண்டலத்துக் கங்கை நாட்டுத் தகடை நாட்டுக் கடைக்

கட்டூர் ருடத்த கோப நிகளங்கமல்ல பண்டாபாவ
பா நாரி சகோதர் ஸ்ரீம

ன் பொம்மய நாய்க்கர் மகனார் திம்மய நாயக்கர்
வாளுக்கும் தோளுக்கு நன்றா

க இந்நாட்டு நாட்டவரும் நாட்டு நாயகம்செய்
இராசா இராம

நாயினார் பொன்னக்கூத்தர் ஸ்வஸ்திஸ்ரீ ராஜராஜீஸ்
வரமுடைய நாயினா

ற்குப் பூசைக்கும் திருப்பணிக்கும் உடலாக விட்டது
கடைக்கோட்டூரா

ந மேலேரி நஞ்செய் புஞ்செய் நாற்பாற்கெல்லையும்
ஏரியும் ஊரும்

மேல் னோக்கிய மரமும் கீழ்னோக்கிய கிணறும்
இவ்வாண்டு முதலாக விட்டது

இதுக்கு நாட்டு வரி...ங் காணிக்கை சில்...யங்கள்
அனைத்தா

யங்களுமற்றும் எப்பேற்பட்ட...முட்பட உதகபூர்வ
மாக(வி)

ட்டேன் இந்த னாயினாற்கு ஆரோதர் இராமி
நாயினார் பொன்னக் கூத்தர்த

ன்மம் இத்தன்மம் சந்திராதித்தவரை செல்லக்கடவது
இந்த தம்மத்துக்

கு இலங்கணம் பண்ணினாருண் டாகிற்கங்கையிடை
குமரியிடை

கோப் பிராமணனை வதித்த பிரமத்தே கொள்வான்
இதுக்கு ஸ்ரீமா

ஹேஸ்வரரும் நாடும் நகரமும் ரஷை.[100]

பொன்னக்கூத்தர் என்ற இராம நாயனார், மன்னன் நலம் வேண்டி கோயிலுக்குத் தானம் புரிந்ததை இக் கல்லெழுத்தில் பார்க்கிறோம்.[101] இராஜராஜீஸ்வர முடையார் என்ற பெயர் அரிஹர நாதர் என இன்று வழங்கப்படுகிறது.

கல்வெட்டு இல்லாமலும் பழமையான சிற்ப - கலை வேலைப்பாடுகள் இல்லாமலும் பல கோயில்கள் தருமபுரியில் உள்ளன. சாலை விநாயகர், அன்னசாகரம் சுப்பிரமணியர், குமாரசாமிப் பேட்டை சுப்பிரமணியர் கோயில்கள், விழா எடுப்பதிலும் மக்கள் மிகுதியாகக் கூடுவதிலும் சிறப்பிடம் வகிக்கின்றன.

தருமபுரியில் எண்ணற்றக் கோயில்கள் இருப்பினும் கோட்டைக் கோயிலும் அரிஹர நாதர் கோயிலும் தொன்மையான கோயில்கள் எனலாம்.

# அடிக் குறிப்புகள்

1. இலக்கியங்களிலும் கல்வெட்டுகளிலும் தகடூர் என்ற பெயரே பயின்று வந்துள்ளது. சோழநாடு, சேரநாடு, பாண்டிய நாடு, என்பது போல் அதியமான் நாடு என்றோ சத்திய புத்திரர் நாடு என்றோ வழங்கப்பட வில்லை. பிற நாடுகளில் தலைநகரம் வெவ்வேறு காலத்தில் வெவ்வேறாக மாறியது போல் இன்றித் தகடூர் தலைநகரின் சிறப்பை இழக்கவே இல்லை எனலாம். கி. பி. 8ஆம் நூற்றாண்டளவில் அதிய மான்கள் நாமக்கல்லில் கோட்டைக் கட்டிக்கொண்டு ஆட்சி புரிந்தாலும் அப்போதும் கங்கர் அல்லது மாவலி வாணராயர் தகடூரில் இருந்து ஆண்டுள்ளனர். பல்வேறு போர்களைத் தகடூர் சந்தித்திருப்பினும் தலைநகர் என்ற பெருமையை இன்றுவரை இழக்கவே இல்லை. காஞ்சி, மதுரை போல என்றும் தனிச் சிறப்பைப் பெற்று வருகிறது. புகார், உறையூர், வஞ்சி, கங்கை கொண்ட சோழபுரம், பழையாறை போன்ற ஊர்கள் ஒரு காலத்தில் புகழின் உச்சியில் இருந்தாலும் இன்று சிற்றூராகவோ அன்றி வேறொரு நகரின் ஒரு பகுதியாகவோதாம் இருந்து வருகின்றன. ஆயின் தலைநகர் அல்லது துணைத் தலைநகர் என்ற நிலையி லேயே தருமபுரி இருந்தது; இருந்து வருகிறது.

2. வடுகுநாடு என்பதை ஆந்திர மாநிலமாகவும் எருமை நாடு என்பதை கருநாடக மாநிலமாகவும் இன்றைய நிலையில் குறிப்பிடலாம்.

3. நுளம்பபாடி — ஆந்திரா, கருநாடகாவில் சில பகுதிகளுடன் தகடூர் நாடும் சேர்ந்ததாகும்.

4. முதலாம் இராஜராஜன் பட்டப் பெயர்களில் நிகரிலிச் சோழன் என்பது ஒன்றாகும். ஆகவே நிகரிலிச் சோழ மண்டலம் என்ற பெயரில் நுளம்பபாடி அழைக்கப் பட்டது. எனினும் தகடூர் நாட்டுத் தகடூர் என்றே வழங்கப்பட்டது.

5. விஜயநகரப் பேரரசர் காலத்தில் சந்திரகிரி ராஜ்ஜியத்தின் ஒருபகுதியாகத் தகடூர் இருந்தாலும் தகடூர்நாடு, கங்கநாட்டுத் தகடூர் நாட்டுத் தகடூர் என்றே வழங்கப் பட்டு வந்தது. பின்னரே தருமபுரி என்ற பெயர் தோன்றுகிறது. ஆந்திர மாநிலத்தில் உள்ள தருமபுரியின் பெயரையொட்டியோ அன்றி, தருமராசன் என்ற பெயரையொட்டியோ தருமபுரி ஏற்பட்டிருக்க வேண்டும். அவ்வாறே தகடூர் என்ற பெயரில் கருநாடகாவில் ஓர் ஊர் உள்ளது.

6. புறநானூறு — 99

7. அதியமான் என்ற பெயர் வடமொழியில் சதியபுதோ அல்லது சத்திய புத்திரர் என வழங்கப்படும். மகன் என்ற சொல் மான் என வழங்கப்பட்டது. மகன் வடமொழியில் புத்திரன் ஆயிற்று. சேரமான் கேரள புத்திரர் ஆனதுபோல் என்க. சேஷ ஐயங்காரும் கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியும் சத்திய புத்திரர் என்பது அதியமான்களையே குறிக்கும் என்றனர். மேலும் 'தென்னிந்திய வரலாறு'—நீலகண்ட சாஸ்திரியின் நூல் பார்க்க.

8. தகடூர் - தொல் பொருள் ஆய்வுத்துறை வெளியீடு.

9. அதியமான் மரபு சங்க காலம்—செ. இராசு, 'கொங்கு ஆய்வு' - தருமபுரி கருத்தரங்கு.

10. மேலும் விரிவுக்கு 'சங்க காலம் - வரலாறு'- தமிழ் நாட்டுப் பாட நூல் நிறுவனம் பார்க்க.

11. காரிமங்கலம் வரலாறு —ச. கிருஷ்ணமூர்த்தி, தொல் பொருள் தொழில் நுட்பப் பணியாளர்க் கழக வெளியீடு - மதுரை.

12. அடிக்குறிப்பு 11 காண்க.

13. புற நானூறு 99

13அ. ''ஸதியபுதோ அதியமான் நெடுமான் அஞ்சி ஈத்த பாளி'' என்று கல்வெட்டு பொறிக்கப்பட்டுள்ளது. கல்வெட்டைத் திரு செல்வராஜ் என்ற மாணவர் கண்டு பிடித்தார். இக் கல்வெட்டில் வரும் மன்னன் சங்க கால அதியமான் என்று உறுதியாகக் குறிப் பிடலாம். எனினும் திரு. இரா. மதிவாணன் 'சொல் லாய்வுக் கட்டுரைகள்' என்ற நூலில், ''அதியமான் சத்திய புத்திரனா?'' என்ற கட்டுரையில் மறுக் கிறார். கி.பி. 4ஆம் நூற்றாண்டு முதல் 10ஆம் நூற்றாண்டுவரை ஆண்ட ஒரு மன்னனாக இவர் கருதுகிறார். ஆயின் எழுத்தமைதியை நோக்க இக் கல்வெட்டு சங்க காலமே என்று உறுதியாகக் கூறலாம்.

14. நற்றிணை - 320, அகம் - 206, புகளூர் பிராம்மி கல்வெட்டும், கரூரில் கிடைத்த கொல்லிப்புறையன் காசும் சேரனின் வரலாற்றிற்குத் துணைபுரிகின்றன.

15. சேர்வராயன்மலை சேலம் மாவட்டத்தில் உள்ளது.

16. புறநானூறு — 231

17. பொகுட்டெழினியையும் ஔவையார் போற்றி உள்ளார். அதியமானை எழினி என்றும் அவன்

மகனைப் பொகுட்டெழினி என்றும் நாம் குறிப்பிடலாம். தருமபுரி மாவட்டத்தில் எளினி என்ற பெயரில் பலர் இன்று மிருப்பதாக இரா. மதிவாணன் தம் 'சொல்லாய்வுக் கட்டுரைகள்' (சேகர் பதிப்பகம், சென்னை) நூலில் கூறுகிறார்.

18. தகடூர் நாட்டைக் கங்கர், பாணர், கட்டி மரபினர், நுளம்பர் ஆகியோர் ஆண்டமையை வரலாற்றில் பார்க்கிறோம்.

19. தருமபுரி மாவட்டக் கல்வெட்டுகள் முதல் தொகுதி, த. நா. தொ. பொ. ஆ. துறை வெளியீடு; மற்றும் 'நாமக்கல் குகைகள்' என்ற (ஆங்கில நூல்) மேற்படி வெளியீடு.

20. கொங்கு நாட்டுக் கவுண்டர்கள், வீ. இராமமூர்த்தி.

21. கொங்கர்கள் குறித்து, கொங்குநாட்டுக் கவுண்டர்கள் என்ற நூலில் விரிவாகக் காணலாம்.

22 "அந்தையும் தந்தையும்" என்ற கட்டுரை வாயிலாக (தினமணி 29.10.87) அஞ்சி அத்தை என்பது ஆண் என்று திரு ஐ. மகாதேவன் கூறும் கருத்து ஏற்புடையதாக உள்ளது.

23. கொங்கு ஆய்வு நிறுவனத் தருமபுரி கருத்தரங்கு மலர் 'தமிழ் இலக்கியத்தில் அதியமான்' கட்டுரை. 1983.

24. செங்குட்டுவனின் படைத் தலைவனாகப் பிட்டன் கொற்றனைப் பார்க்கிறோம். சங்க காலப் புலவர்களால் பாடப்பட்டவன் பிட்டன் கொற்றன். பிராமி கல்வெட்டுகளிலும் பிட்டன் வருகிறான். தருமபுரியில் உள்ள பிடமனேரி, இந்தப் பிட்டன் பெயரில் தோன்றியதாகக் கருதலாம்.

25. கோச் செங் கண்ணீஸ்வர முடையார் என்ற பெயரில் தருமபுரியில் கோயில் இருந்ததால் இக் கருத்து தோன்றுகிறது.

26. 'கங்க நாடாண்ட கட்டி மன்னர்' என்ற கட்டுரை 18.9.88- தாரமங்கல கட்டி முதலிகள் கருத்தரங்கில் வாசித்த கட்டுரை. —ச. கிருஷ்ணமூர்த்தி.

27. தருமபுரி மாவட்டக் கல்வெட்டுகள்—முதல் தொகுதி. தொ. பொ. ஆ. துறை வெளியீடு, சென்னை.

28. பல்லவர்களுடைய எண்ணற்ற நடுகற்கள் தருமபுரி மாவட்டத்தில் உள்ளன.

29. வீர காவியங்களின் விளை நிலம்—ச. கிருஷ்ணமூர்த்தி. தீபாவளி சிறப்பிதழ் -1987. மாலைமுரசு- சேலம் பதிப்பு.

30. கட்டி மன்னன் பெயரில் கூடிய இரண்டு மன்னர் களும் சிவமாறன் ஒருவனுமாக மூன்று அரசர்களைக் கல்வெட்டுகளில் பார்க்கிறோம். பல்லவர்களைப் போல் பேரரசராகக் கட்டிமன்னர் தகடூர் நாட்டை ஆண்டுள்ளனர். இவர்ளுக்குக்கீழ் பாணர், கங்கர் அகியோர் அரசாண்டுள்ளனர். மேலும் விரிவுக்கு 'கங்க நாடாண்ட கட்டிமன்னர்' கட்டுரையில் காண லாம். கட்டிமுதலிகள் கருந்தரங்கு மலர்.

31. கங்கர்கள் நீண்ட நெடுங்காலம் தருமபுரியில் இருந் துள்ளனர். அவர்கள் பெயரால் தகடூர் நாடு, கங்க நாடு என வழங்கப்பட்டது. கங்கர்களுக்கு விருத்த ராஜர், முத்தரையர் என்ற பெயர்களுமுண்டு என டாக்டர் இரா. நாகசாமி கருதுகிறார். 'தினமணி' 28.10.88

32. வாணாதிராயர் கல்வெட்டு தருமபுரி அருங்காட்சி யகத்தில் காட்சிப் பொருளாக வைக்கப்பட்டுள்ளது. மாவலிவாணருடன் பெரும்பாணர் என்ற பிரிவை யும் பார்க்கிறோம். வாணகோப் பாடி இவர் களுடைய தலை நகரமாகும். அனந்தபூர் பகுதியில்

இருந்து தருமபுரி போன்ற ஊர்களுக்குக் கி.பி. 5ஆம் நூற்றாண்டில் இவர்கள் குடியேறினார்கள் எனலாம். இவர்களும் தமிழகத்தில் பல்வேறு இடங்களில் நீண்ட நெடுங் காலம் அரசாண்டுள்ளனர் எனலாம்.

33. காரிமங்கலம் வரலாறு - ச. கிருஷ்ணமூர்த்தி, தொல் பொருள் தொழில் நுட்பப் பணியாளர்க் கழக வெளியீடு. (மதுரை).

34. கல்வெட்டியல், தொ. பொ. ஆ. துறை வெளியீடு

34அ. தகடூர், தொ. பொ. ஆ. துறை வெளியீடு

35. தருமபுரி மாவட்டக் கல்வெட்டுகள் இரண்டாம் தொகுதி, தொ. பொ ஆ. துறை

36. தருமபுரி மாவட்டக் கல்வெட்டுகள்—முதல் தொகுதி, தொ. பொ.ஆ. துறை, சென்னை 28.

37. தருமபுரி மாவட்ட மலர். வெளியீடு : தகடூர் மாவட்ட வரலாற்றுப் பேரவை.

38. சங்க காலத்தில் பீடும் பெருமையும் விளங்க வீற்றிருந்த அதியமான்கள் பிற்காலத்தில் குறுநிலத் தலைவர்களாக மாறியதைப் பார்க்கிறோம். வடக்கிருந்த கங்கரும் பாணரும் தெற்குப் போந்து பேரரசர்களாக மாறியமையையும் பார்க்கிறோம். அதியமான்கள் தகடூரில் மட்டுமின்றி நாலாப் புறங்களிலும் பிற்காலத்தில் சிதறியுள்ளனர். ஒரு பிரிவு நாமக்கல்லில் இருந்துள்ளது. மற்றொரு பிரிவு கொள்ளேகாலம் வட்டத்தில் தகடூரைத் தலை நகரமாகக் கொண்டு அரசாண்டனர். அதியமானை அதியமரச எனக் கன்னடக் கல்வெட்டு குறிப்பிடுகிறது. அதியனை அடக்கும் கன்னட அரசர் அதியமனயம (அதியனுக்கு எமன்) அதியம நிவாரண, அதியம

மத நிவாரண (அதியமானின் செருக்கடக்குபவன்) என்றெல்லாம் கன்னடக் கல்வெட்டுகள் குறிப்பிடுவதாக இரா. மதிவாணன் தம் ''சொல்லாய்வுக் கட்டுரைகள்'' என்ற நூலில் குறிப்பிடுகிறார்.

39. தருமபுரி மாவட்டக் கல்வெட்டுகள் — முதல் தொகுதி, தொ. பொ. ஆ. துறை வெளியீடு.

40.

41. கங்கர் பெயரில் கங்க நாடு என்று தகடூர் நாடு வழங்கப்பட்டிருப்பினும் கங்கர் கட்டிய கோயில் எதுவும் தருமபுரி மாவட்டத்தில் இல்லை. மாறாக நுளம்பர் கட்டிட, சிற்பக் கலைக்குச் சான்றாகக் கோட்டைக் கோயில்கள் இன்றுமுள்ளன.

42. ''அதியமான் கோட்டையின் பெருமை மிகு வரலாறு'' — கட்டுரை, மாலை முரசு, நாள் 31.7.88 சேலம் பதிப்பு.

43. சேலம் மாவட்ட விவர நூல் — திரு லெபானு.

44. தினமணி - மதுரைப் பதிப்பு 16.12.1984.

45. நாமக்கல்லில் உள்ள கோயில் அதியேந்திர விஷ்ணுக் கிரகம் என வழங்கப்பட்டது. இக் கோயில் குறித்து விரிவாகக் காண 'நாமக்கல் குகைக்கோயில்கள்' என்ற (ஆங்கில நூலில்) காண்க. தொ. பொ. ஆ. துறை வெளியீடு.

46. படித்தவர், படிக்காதவர் என்ற இருதிறத்தாருக்கும் ஏற்ற வகையில் 'மைல்கல்' வெட்டப்பட்டுள்ளது. ஒரு காதம் 10 கல் (மைல்) என்ற கருத்தை மாற்றி $4\frac{1}{2}$ கல் என்பதை இம் மைல்கல் மூலம் நாம் அறிகிறோம். ஒரு கல் குள்ளனூரிலும் (29-ஆம் காதக் கல்) மற்றொரு கல் கெங்கு சட்டிப்பட்டியிலும் (27ஆம் காதக் கல்) உள்ளது.

அதியமான் கோட்டையிலிருந்து நாவல் என்ற ஊர் வரை 30 காதங்களுக்கு நெடுஞ்சாலை முன்பு இருந்துள்ளது. இதே போல் ஆறகழூரிலிருந்து காஞ்சிபுரம் வரை மகத தேசப் பெருவழி இருந்ததை ஆறகழூர் மைல்கல் குறிப்பிடுகிறது.

47. தருமபுரி மாவட்டக் கல்வெட்டுகள் முதல் தொகுதி- தொ. பொ. ஆ. துறை வெளியீடு.
48. ,,
49. ,,
50. கொங்கு ஆய்வு மலர், தருமபுரி.
51. தருமபுரி மாவட்டக் கல்வெட்டுகள் - முதல் தொகுதி. தொ. பொ. ஆ. துறை வெளியீடு.
52. ,,
53. மேல் எண் 50 பார்க்க.
54. ,,
55. 51 பார்க்க.
56. தொல்லியல் ஆய்வுத் தொகுதி, தொ. பொ. தொ. நுட்பப் பண்பாட்டுக் கழக வெளியீடு-மதுரை.
57. 51 பார்க்க
58. ,,
59. 50 பார்க்க
60. 51 பார்க்க
61. 50 அடிக் குறிப்பு காண்க
62. வரலாற்றில் குந்தாணி — துரைசாமி, கொங்கு ஆய்வு மலர் — தருமபுரி.
63. தருமபுரி மாவட்டக் கல்வெட்டுகள் — இரண்டாம் தொகுதி. தொ. பொ ஆ. துறை வெளியீடு.
64. ,,
65. ,,
66. ,,
67. ,,

68. மல்லிகார்ச்சுனர் கோயில் ஆரம்பத்தில் சமணக் கோயிலாக இருந்து பின்னர் சைவக் கோயிலாக மாறியது எனச்சிலர் குறிப்பிடுவர். அதற்குச் சான்றில்லை. மல்லிதேவனை மல்லிகார்ச்சுனருடன் தொடர்பு படுத்தியதால் மேற்கண்ட கருத்தை அவர்கள் குறிப்பிட்டார்கள்.

69. சேலம் மாவட்ட விவர நூல், திரு. லெபானு.

70. தென்னிந்திய வரலாறு — கே. ஏ. நீலகண்ட சாஸ்திரி

71. சேலம் மாவட்ட விவர நூல் — திரு. லெபானு

72. தரும நல்லூர், தருமபுரியுடனும் வருணமாபுரி — நானாதேசிப்பட்டினத்துடனும் தொடர்புடையதாக உள்ளது.

73. தினமணி, மதுரைப் பதிப்பு - 20. 5. 86. மற்றும் தருமபுரி வாணிய வைசியர் வெளியிட்ட செய்தி மடல் — 1986

74. சேலம் மாவட்ட விவர நூல்.

75. ,,

76. ,,

77. சேலம் மாவட்ட விவர நூல் — இராமசாமி - 1965

78. தீர்த்தகிரி முதலியார் பெயரில் தருமபுரியில் தீர்த்தகிரி சதுக்கம் உள்ளது. மேலும் அவருடைய உருவச்சிலையும் நெசவாளர் காலனியில் உள்ளது.

79. தினமணி — மதுரைப் பதிப்பு. 9. 6. 86

80. தருமபுரி மாவட்டக் கல்வெட்டுகள், இரண்டாம் தொகுதி, தொ. பொ. ஆ. துறை.

81. ,,

82. ஒரு கண்டக விதை சுமார் 4 ஏக்கர் அளவுக்கு விதைக்கலாம். சேலம் மாவட்டத்தில் எருமைப் பட்டி ஊர் கல்வெட்டில் கையல் என்ற அளவு குறிக்கப்படுகிறது. ஒரு கையல் என்பது சுமார் 5 வேலியைக் குறிக்கும். ''எருமைபப்பட்டியின் வரலாறு'' கட்டுரை - ச. கிருஷ்ணமூர்த்தி, 'சேலம் மாவட்டம் - சில ஆய்வுகள்' நூலில் காண்க.

83. சுந்தரமூர்த்தி தேவாரம் — பொது, திருநாட்டுத் தொகை-தகடூர்-தகட்டூர் என்றும் பாடமுண்டு. திருப்பனந்தாள் மடம் வெளியீடு.

84. தகடூர் தொ. பொ ஆ. துறை வெளியீடு.

85. சேலம் மாவட்ட விவர நூல்—ரிச்சர்ட்ஸ்.

86. தருமபுரியில் நொளம்பர்கலை—கொங்கு ஆய்வுமலர். தருமபுரி கருத்தரங்கு 1983.

87. 'சுந்தர் காதல்' என்ற அச்சிடப்படாத சுவடியில் முருகர் வேட்டைக்குச் செல்லும் காட்சி அருமையாக வருணிக்கப்படுகிறது. இச் சுவடி தருமபுரி அருங் காட்சியகத்தில் உள்ளது.

88. ஆலம்பூர் மற்றும் ஆந்திராவில் உள்ள புராதன ஊர்கள் குறித்துத் திரு ரமேஷ் விரிவாக ஆய்வு செய்துள்ளார்.

89. தேன்கனிக் கோட்டை வட்டம், அந்தேவனப் பள்ளியிலிருந்து கொண்டு வந்து தருமபுரி அருங் காட்சியகத்தில் வைத்துள்ள துர்க்கையும் நுளம்பர் கலைப் படைப்பு எனலாம்.

90. திருவையாறில் மூன்று கோயில்கள் உள்ளன. திருச்சி மாவட்டத்திலுள்ள பழுவூரிலும் இரண்டு கோயில்கள் உள்ளன.

91. தருமபுரி மாவட்டக் கல்வெட்டுகள் — இரண்டாம் தொகுதி, த. நா. தொ. பொ. ஆ. துறை.

92. ,,

93. ,,

94. ,,

95. ,,

96. ,,

97. ,,

98. ,,

99. ,,

100. ,,

101. இராமநாயனார் போல இராமண்ணன் என்ற அரசனும் தருமபுரி மாவட்டத்தில் கி.பி. 16ஆம் நூற்றாண்டில் இருந்துள்ளான். வீர வல்லாள னுடைய ஆட்சியின்கீழ் இந்த இராமண்ணன் இருந் துள்ளான். இவனுடைய கல்வெட்டு ஹோசூர் அருகில் கொத்தூரில் உள்ளது. இவன் வெளியிட்ட ஒரு செப்புக் காசு குறித்து, திரு நடன. காசிநாதன் கட்டுரை ஒன்று எழுதியுள்ளார். 'தமிழ்க் காசுகள்' என்ற நூலில் அனுபந்தமாக இக்கட்டுரை இணைக்கப் பட்டுள்ளது. தருமபுரி கல்வெட்டில் வரும் இராம நாயனார் மற்றொருவராவார். கி.பி. 1164இல் கங்க நாட்டில் தகடூர் நாட்டைச் சேர்ந்த பெரும்பேர் என் னுமிடத்தில் தகடூர்கிழவன் என்பான் தானம் செய்த கல்வெட்டுகள் ஏ.ஆர்.218-1900, ஏ.ஆர்.207-1901இல் இருப்பதாகத் திரு மதிவாணன் தம் சொல்லாய்வுக் கட்டுரையில் குறிப்பிடுகிறார்.



# அதியமான்களுடன் தொடர்புடைய சங்கப் பாடல்கள்

தருமபுரி நகரின் வரலாற்றையும் தருமபுரியில் உள்ள கோயில்களின் சிறப்பையும் இதுகாறும் ஓரளவு ஆராய்ந் தோம். ஆய்வாளர்களுக்கும் தருமபுரி மக்களுக்கும் பயன் படும் என்ற நோக்கில் அதியமான்களுடன் தொடர் புடைய சங்கப் பாடல்கள் பலவும் இங்கு இணைக்கப் படுகின்றன. முதலில் 'தகடூர் யாத்திரை' என்ற நூலினைப் பார்ப்போம்.

## தகடூர் யாத்திரை

மயிலை சீனி.வேங்கடசாமி அவர்கள் 'மறைந்துபோன தமிழ் நூல்கள்' என்ற நூலில் தகடூர் யாத்திரையையும் குறிப்பிடுகிறார். கிடைத்த சில பாடல்களை வைத்து 'தகடூர் யாத்திரை' நூலாக அச்சிடப்பட்டிருப்பினும் பொதுவாக அப் பாடல்கள் தகடூரில் வாழும் பெரு மக்களுக்குப் பயன்படவேண்டும் என்ற எண்ணத்தில் இங்கு சேர்க்கப்படுகிறது. கி.பி. 19ஆம் நூற்றாண்டு வரை ஓலைச் சுவடியாக இருந்துள்ள தகடூர் யாத்திரை நமக்கு முழுவதும் கிடைக்காதது நம் அவப் பேறேயாகும்.

தகடூர் யாத்திரை, ஒருவரே பாடாமல் பலர் பாடி யிருக்கும் தொடர் நிலைச் செய்யுளாகும். புலவர்

அரிசில்கிழார், பதிற்றுப்பத்தில் ஒருபத்து பாடியவர். அவ்வாறே பொன்முடியார் புறநானூற்றில் சில பாடல்கள் பாடி உள்ளார். இவர் பெண்பாற் புலவர் எனச் சிலர் குறிப்பிடுவர். ஆயின் உறுதியாக கூற முடியாது. இன்றுள்ள பொம்மிடி என்ற ஊர் பொன் முடியார் பெயருடன் பெயர் ஒற்றுமை கொண்டுள்ளது. இந்நூல் குறித்துப் பேராசிரியர் கருத்தாவது:''பாட்டிடை வைத்த குறிப்பினாலும் என்பது ஒருபாட்டு இடையிடை கொண்டு நிற்கும் கருத்தினான் வருவன எனப்படும். என்னை? பாட்டு வருவது சிறுபான்மை யாகலின் அவை தகடூர் யாத்திரை போல்வன'' தொல்—பொருளதிகாரம் செய்யுளியல்.

'தொன்மை' என்பது உரைவிராய் பழமையவாகிய கதைப் பொருளாகச் செய்யப்படுவது என்றவாறு. அவை பெருந்தேவனாரால் பாடப்பட்ட பாரதமும் தகடூர் யாத்திரையும் போல்வன' என நச்சினார்க்கினியர் பொருள் அதிகாரம் செய்யுளியலில் குறிப்பிடுகிறார்.

''யானை நிலைக்கும் குதிரை நிலைக்கும் துறைப் பகுதியாய் வருவனவும் கொள்க. அஃது அரசர்மேலும் படைத்தலைவர் மேலும், ஏனையோர் மேலும், யானை சேறலும், களிற்றின்மேலும் தேரின் மேலும், குதிரை சேறலும் தன்மேலிருந்து பட்டோர் உடலை மோந்து நிற்றலும் பிறவுமாம். இவை தனித்து வாராது தொடர் நிலைச் செய்யுட்கண் வரும். அவை தகடூர் யாத்திரையினும் பாரதத்தினும் காண்க'' தொல் - பொருள் - புறம்.

தக்கயாகப் பரணி உரையாசிரியர் பேய்களைப் பாடியது 12ஆம் தாழிசை 'மிதி துரந்துவர மொழிந்த' தாழிசைக்கு உரை எழுதி, இது தர்க்கவாதம்; இது தமிழில் தகடூர் யாத்திரையிலும் உண்டு, என்கிறார்.

தகடூர் யாத்திரையிலிருந்து 44 செய்யுட்களைப் புறத்திரட்டு என்றநூலில் பார்க்கலாம். இதில் இல்லாத ஒரு பாடல் தக்கயாகப்பரணி உரையாசிரியரும் வேறு மூன்று பாடல்களை நச்சினார்க்கினியரும் குறிப்பிடுகின்றனர். 'தகடூர் மாலை' என்னும் பெயரும் இந்நூலுக்குண்டு. 'சேரமான் பெருஞ்சேரல் இரும்பொறை' தகடூர் அதியமான் நெடுமான் அஞ்சியிடம் போரிட்டு வென்ற செய்தியை இந்நூல் கூறுகிறது. பதிற்றுப்பத்தில் எட்டாம் பத்து இப் போரைக் குறிப்பிடும்.

சேரமானும் அதியமானும் தமையன் தம்பி உறவு முறை ஆவர். (பாடல் 7) சேரன் படையெடுத்து வந்து கோட்டையை முற்றுகையிடுகிறவரையிலும் கோட்டைக் குள்ளே அதியமான் இருந்தான்.

''ஒருவன் மேற் சென்றுழிஒருவன் எதிர் செல்லாது மதில்புறத்து வருந்துணையும் இருப்பின் அஃது உழிஞை யின் அடங்கும். சேரமான் செல்வுழித் தகடூரிடை அதிகை மான் இருந்ததாம்.''

சேரன் சோழன், பாண்டியன், அதிகைமான் எழினி, காரி, பெரும் பாக்கன், நெடுங்கோ ளாதன் ஆகியோர் போரில் பங்கு கொண்டனர். பொன்முடியார், அரிசில் கிழார் ஆகியோர் பாடி உள்ளனர். இந்நூல் கி.பி. 2ஆம் நூற்றாண்டினதாம். ஆயின் திரு எஸ். வையாபுரிப் பிள்ளை பிற்காலமென்பார்.

# தகடூர் யாத்திரை

வியத்தக்க காணுங்கால் வெண்மையிற் றீர்ந்தார்
வியத்தக்க தாக வியப்ப — வியத்தக்க
அல்ல வெனினும் அறியாதார் தாம்போல
எல்லாம் வியப்ப ரினிது. 1

கிழிந்த சிதாஅ ருடுத்தும் இழிந்தார்போல்
ஏற்றிரந் துண்டும் பெருக்கத்து நூற்றிதழ்த்
தாமரை யன்ன சிறப்பினர் தாமுண்ணீர்
தீயூட்டி யுண்ணும் படிவத்தர் தீயவை
ஆற்றுழி யாற்றிக் கழுவுபு தோற்றம்
அவிர்முருக்க தோலுரித்த கோலரி துவர்மன்னும்
ஆடையர் பாடின் அருமறையின் நீடின்
உருவம் தமக்குத்தா மாய
இருபிறப் பாளர்க் கொருஉகமா தீதே. 2

நூற்றுவரிற் றோன்றுந் தறுகண்ணர் ஆயிரவ
ராற்றுளித் தொக்க வையத்து மாற்றமொன்
றாற்றக் கொடுக்கு மகன்தோன்றும் தேற்றப்
பரப்புநீர் வையகம் தேரினும் இல்லை
இரப்பாரை யெள்ளா மகன். 3

இறப்பப் பெருகி யிசைபடுவ தல்லாத்
சிறப்பிற் சிறுகுவ துண்டோ அறக்கோலால்

ஆர்வமும் செற்றமும் நீங்கிமற்றி யார்க்கண்ணும்
இன்னாத வேண்டா விகல்வேல் மறமன்னர்
ஒன்னார்க் குயர்த்த குடை. 4

அறம்புரிந் தன்றம்ம வாசிற் பிறத்தல்
துறந்த தொடர்பொடு துண்ணிய கேண்மை
சிறந்தார்க்கும் பாடு செயலியார் தத்தம்
பிறந்தவேல் வென்றி பொருட்டு. 5

சொல்லுங்காற் சொல்லின் பயன்காணும் தான்பிறர்
சொல்லிய சொல்லை வெலச்சொல்லும் — பல்லார்
பழித்தசொற் றீண்டாமற் சொல்லும் விழுத்தக்க
கேட்டார்க் கினியவாய் ச்சொல்லானேல்—பூக்குழலாய்
நல்வய லூரன் நறுஞ்சாந் தணியகலம்
புல்லலின் ஊடல் இனிது. 6

கால வெகுளிப் பொறையகேள் நும்பியைச்
சாலுந் துணையும் கழறச் சிறியதோர்
கோல்கொண்டு மேற்சேறல் வேண்டா வதுகண்டாய்
நூல்கண்டார் கண்ட நெறி. 7

ஒளிவிடு பசும்பொன் னோடை சூட்டிய
வெளிறில் வெண்கோட்ட களிறுகெழு வேந்தே
வினவுதி யாயிற் கேண்மதி சினவா
தொருகுடர்ப் படுதா வோரிறை தூற்றும்
இருதலைப் புள்ளின் ஓருயிர் போல
அழிதரு வெகுளி தாங்காய் வழிகெடக்
கண்ணுறு பொழுதிற் கைபோ லெய்தி
நும்மூர்க்கு
நீதுணை யாகலு முனையே நோதக
முன்னை வருஉங் காலை நம்மு
னுமக்குத் துணை யாகலு முரிய னதனாற்
தொடங்க வுரிய வினைபெரி தாயினும்

அடங்கல் வேண்டுமதி யத்தை யடங்கான்
துணையிலன் றமியன் மன்னும் புணையிலன்
பேர்யா றெதிர்நீந்து மொருவ னத்தனைத்
தாழ்த லன்றோ வரிதே தலைப்படுதல்
வேண்டிற் பொருந்திய
வினையி னடங்கல் வேண்டும்
அனைய மாகின் டறிந்தசி னோர்த்தே. 8

மொய்வேற் கையர் முரசெறிந் தொய்யென
வையக மறிய வலிதலைக் கொண்ட
திவ்வழி யென்றி யியனாற் மார்ப
எவ்வழி யாயினு மவ்வழித் தோன்றித்
திண்கூ ரெஃகின் வயவற் காணிற்
புண்கூர் மெய்யி னூராஅய்ப் பகைவர்
பைந்தலை யெறிந்த மைந்துமலி தடக்கை
யாண்டகை மறவர் மலிந்துபிறர்
தீண்டற் காகாது வேந்துடை யரணே. 9

தகடூரின் தன்மையைப் பொன்முடியார் இவ்வாறு கூறுகிறார்.

பெருநீரால் வாரி சிறக்க விருநிலத்
திட்டவித் தெஞ்சாமை நாறுக நாறார்
மூட்டாது வந்து மழைபெய்க பெய்தபி
னொட்டாது வந்து கிளைபயில்க வக்கிளை
பால்வார் பிறைஞ்சிக் கதிரின வக்கதிர்
ஏர்கெழு செல்வர் களைநிறைக வக்களத்து
போரெலாங் காவாது வைகுக போரின்
உருகெழு மோதை வெரீஇப் பெடையொடு
நாரை யிரியும் விளைவயல்
யாணர்த் தாக வகன்தலை நாடே. 10

அரும்பொனன் னார்கோட்டி யார்வுற்றக் கண்ணுங்
கரும்புதின் பார்முன்னர் நாய்போற் — கரும்புலவர்
கொண்டொழிப வொன்றோ துயில்மடிப

வல்லக்கால்

விண்டுரைப்பர் வேறா விருந்து. 11

நாளும் புள்ளும் கேளா வூக்கமொ
டெங்கோ னேயின் னாதலின் யாமத்துச்
செங்கால் வெட்சியுந் தினையுந் தூஉய்
மறிக்குரற் குறுதி மன்றுதுக னவிப்ப
விரிச்சி யோர்த்தல் வேண்டா
எயிற்புறந் தருதும்யாம் பகைப்புல நிரையே. 12

இது விருச்சி விலக்கிய வீரக் குறிப்பு.

இருநில மருங்கி னெப்பிறப் பாயினும்
மருவின் மாலையோ வினிதே யரவின்
ஆகோள் மள்ளரு மளவாக் கானத்து
நாட்புறத் திறுத்தனெ மாகத் தாந்தங்
கன்றுகுரல் கேட்டன போல
நின்றுசெவி யேற்றன சென்றுபடு நிரையே. 13

இது மறவர் கூற்று.

வேத்தமர் செய்தற்கு மேற்செல்வான் மீண்டுவந்
தேத்தினார்க் கீத்துமென் றெண்ணுமோ — பாத்திப்
புடைக்கல மான்றே ருடனீத்தா னீத்த
படைக்கலத்திற் சாலப் பல. 14

உண்டியின் முந்தானு டனுண்டான் தண்டேறல்
மண்டி வழங்கி வழீஇயதற்கோ — கொண்டி
மறவர் மறலிக் குயிர்நேர்ந்தார் மன்னர்க்
குறவிலர் கண்ணோடா ரோர்ந்து. 15

குழிபல் வாயினும் சாஸ்பா னாதே
முளைபடு முதுமரம் போலெவ் வாயும்
மடைநுழைந் தறுத்த விடனுடை விழுப்புண்
தெய்யிடை நிற்ற லானாது பையென
மெழுகுசெய் பாவையிற் கிழிபல கொண்டு
முழுவதும் பொதியல் வேண்டும் பழித்தீர்
கொடைக்கட னாற்றிய வேந்தற்குப்
படைக்கட னாற்றிய புகழோன் புண்ணே. 16

செவ்விக்க டாஅக் களிற்றின் செம்மத் தகத்தெறிந்த
கௌவை நெடுவேல் கொணரேனேல் — எவ்வை
சுடிபட்ட வில்லகத்து கைபார்த் திருப்பின்
விடிலளவிற் சென்று விரைந்து. 17

அலிமா னோயே கலிமா னோயே
நாகத் தன்ன நன்னெடுந் தடக்கை
காய்சின யானை கலிமா னோயே
வெள்ளத் தானைநும் வேந்தொப் பான்முன்
உள்ளத்து புகே னாயி னுள்ள
திரப்போ னின்மை கண்டும்
கரப்போன் சிறுமை யானுற கவ்வே. 18

கூற்றுறழ் முன்பினி றைதலை வைத்தபின்
ஆற்றி ய்வனை யடுத லடாக்காலை
ஏற்றுக் களத்தே விளிதல் விளியாக்கால்
மாற்ற மழைக்கொ டுப்பவோ சான்றோர்தந்
தோற்றமு தேசு மிழந்து. 19

தற்கொள் பெருவிறல் வேந்துவப்பத் தானவர்
கொற்கத் துதலிலா னாகுமாற் — பிற்பிற்
பலரேத்தும் செம்ம லுடைத்தாற் பலர்தொழ
வானுறை வாழ்க்கை யியையுமா லன்னதோர்
மேன்மை யிழப்பப் பழிவருப செய்பவோ
தாமேயும் போகு முயிர்க்கு. 20

நகையுள்ளு நல்லவை செய்தார் பகைதவிய
.............................
வேற்றுக் களத்தி லொருவர்த மாறாகச்
சென்றா லொருவர் மேற்
புண்ணும் படுக்கலான் றான்படான் போத்தார்க்
கண்ணும் படுங்கொல் கவன்று. 21

வேற்றானை வெள்ளை நெரிதர யாற்றுக்
கடும்புனற் கற்சிலைபோல் நடுங்காது
நிற்பவர் கல்லா லெளியவோ — பொற்பாற்
முறியிலைக் கண்ணி முழவுதோள் மன்னர்
அறியுந ரென்னும் செருக்கு. 22

பிறந்த பொழுதேயும் பெய்தண்டார் மன்னர்க்
குடம்பு கொடுத்தாரே மூத்தார் — உடம்பொடு
முற்றுழிக் கண்ணு மினையவரே தங்கோமாற்
குற்றுழிக் காவா தவர். 23

பரவைவேற் றானைப் பகலஞ்சு வேனா
இரவே யெறியென்றா யென்னை — வரைவிரைந்து
வேந்தினி யாயின யன்றிப் புகுவதோ
போந்தென்னைச் சொல்லிய நா. 24

வான்வணக்கி யன்ன வலிதரு நீள்தடக்கை
யானைக்கி தென்கையி லெஃகமால் — தானும்
விலங்கா லொருகைத்தால் வெல்கைநன் றென்னும்
நலங்காணே னாணுத் தகும். 25

காலாளாய்க் காலா ளெறியான் களிற்றெருத்தின்
மேலா ளேறியான் மிகநாணக் — காளை
கருத்தினதே யென்று களிறெறியானம்ம
தருக்கினனே சான்றோர் மகன். 26

பல்சான் றீரே பல்சான் றீரே
வீழ்ந்த புரிசைச் சேர்ந்த ஞாயிற்
கணையிற் றூர்ந்த கன்றுமேய் கிடங்கின்
மல்லன் மூதூர் பல்சான் றீரே
பலநாள் வருந்தி யிளையரு முதியரும்
நன்னுதல் மகளிரு மின்னுங்கண் டுவப்ப
யாமங் கொள்பவரு மொழிய மேனாட்
கொல்படை மொய்த்த குன்றுயர் விழுப்புண்
நெய்யிடைப் பஞ்சு சேர்த்திப் பையெனக்
கருங்குரல் நொச்சி மிலைந்த
திருந்துவேல் விடலை காம்பமைந் தனனே. 27

இவனே
பொறிவரி யன்ன பொங்குளை வயமான்
மேலோன் யாரென வினவிற் றோலா
உரனுடை யுள்ளத் தொன்னா ருட்குஞ்
சுரையமை நெடுவேற் சுடர்ப்பூ ணோனே
அவனே யெம்மறை யீதவன் மாவே
கறுவுகொள் நெஞ்சங் கதுவவந் தனனே
யாவருங்
குறுக லோம்புமின் குறைநாண் மறவீர்
நெருந லெல்லி நரைவரு கருந்திறல்
பருமத யானை பதைப்ப நூறி
யடுகளத் தொழிந்தோன் றம்பி தொடுகழல்
நொச்சித் தெரியல் நெடுந்தொகை
அச்ச மறியா யாரணங் கினனே. 28

கார்த்தரும் புல்லணற் கண்ணஞ்சாக் காளைதன்
தார்ப்பற்றி யேர்தருந் தோணோக்கித் தார்ப்பின்னை
தாட்பினுள் யானைக் கணநோக்கி யானைப்பின்
தேர்க்குழாம் நோக்கித்தன் மாநோக்கிக் — கூர்த்த
கணைவரவு நோக்கித்தன் வேணோக்கிப் பின்னைக்
கிணைவனை நோக்கி நகும். 29

இகழ்த லோம்புமின் புகழ்சான் மறவர்
கண்ணிமைப் பளவிற் கணைசெல் கடுவிசைப்
பண்ணமை புரவிப் பண்புபா ராட்டி
எல்லிடை படர்தந் தோனே கல்லென
வேந்தூர யானைக் கல்ல
தேந்துவன் வேலான்தன் னிலங்கிலை வேலே. 30

அதிரா தற்ற நோக்குழ ஞாயிலுட்
கதிர்விடு சுடரின் விளங்கும் வெள்வேல்
எதிரிய திருவி னிளையோ னின்றுந்தன்
குதிரை தோன்ற வந்துநின் றனனே
அவன்கை யொண்படை யிகழ்த லோம்புமின்
விழுச்சீர் விண்பொரு நெடுங்குடை வேந்தன்
கண்படை பெறாஅன் வைகின னிவன்னகத்
திண்கூ ரெஃகந் திறந்த
புண்கூர் யானை நவில்குரல் கேட்டே. 31

கட்டியன்ன காரி மேலோன்
தொட்டது கழலே கையது வேலே
சுட்டி யதுவுங் களிறே யொட்டிய
தானை முழுதுடன் விடுத்துநம்
யானை காமினவன் பிறிதெறி யலனே.
அஞ்சுதக் கனளே யஞ்சுதக் கனளே
யறுகா வலாபந்த ரென்ன
வறுந்தலை முதியாள் அஞ்சுதக் கனளே
வெஞ்சமத்
தென்செய் கென்னும் வேந்தர்க்
கஞ்ச லென்பதோர் களிறீன் றனளே. 32

வில்லோன் செய்த வகையமை வனப்பிற்
கொல்வினை முடியக் கருதி கூரிலை
வெல்வேல் கைவல னேந்திக் கொள்ளெனக்
கொள்ளும் காலு மாவேன் டானே. 33

மேலோன்,
அறிவொடு புணர்ந்த நெறியிற் புரவிக்
கழற்கா விளையோ னழற்றிகழ் வெகுளி
இகழ்த லோம்புமின் புகழ்சால் மன்னீர்
தொல்லை ஞான்றைச் செருவினு ளிவன்கை
வேல்வாய் வீழ்ந்தோர் பெண்டிர் கைம்மையின்
அறுத்த கூந்தல் பிறக்கஞ் சகடம்
பொறுத்தல் செல்லா பலமுறிந் தனவே
அதனால்
வல்லோர் பூழை நிலமன் கல்லென
வெஞ்சமர்க் குரைப்ப கூந்தலின்
அஞ்சுதக வுடைத்திவ் வாற்றலோ னிலையே. 34

உண்டது
கள்ளு மன்று கனிப்பட் டனனே
ஊர்ந்தது
புள்ளுமன்று பறந்தியங் கும்மே
மேலோர்
தெய்வ மல்லன் மகனே நொய்தாங்குத்
தெரியல ரெடுத்த பாசிலைக் கண்ணி
வெருவத் தக்க வேலி னோன்வேல்
பைய நிமிர்ந்து பருந்தி னோடிக்
கழிந்தார்த் தன்றவ னெறிந்ததை கழறொட்
டேந்துவரை யிவரும் புலிபோல்
வேந்தர்வந் தூரும் வெஞ்சினக் களிறே. 35

நிலையமை நெடுந்திணை யேறி நல்லோரி
னிலையொலி புதுப்பூண் கணவனோ டூடிச்
சிந்தி யன்ன செருபடு வனப்பிற்
புள்ளிக் காரி மேலோன் தெள்ளிதின்
உள்ளினும் பணிக்கு மொருவே லோனே
குண்டுநீர்க் கிடங்கிற் கெண்டை பார்க்கும்
மணிநிறச் சிறுசிரல் போலநம்
அணிநல் யானைக் கூறளக் கும்மே. 36

வருகவருக தாங்கன்மின் தாங்கன்மின்
உருவக் குதிரை யொருவே லோனே
இருகை மாக்களை யானஞ் சலனே
நாற்கை மாக்களின் நாட்பகத் தில்லை
அவனும்
தாரொடு துயல்வரும் தயங்குமணி கொடும்பூண்
மார்புடைக் கருந்தலை யெற்குறித் தனனே
யானும்
கடிகம ழுவகைக் கைவல் காட்சியென்
றுடியவற் கவனரை யறுவை யீந்தனனே
அதனால்
என்னெறிந்து பெயர்த லவர்க்குமாங் கரிதே
அவனெறிந்து பெயர்த லெமக்குமாங் கரிதே
அதனால்
என்ன தாகிலு மாக முந்நீர்
நீர்கொள் பெருங்குளந் தயங்க நாளை
நோய்பொதி நெஞ்சங் குளிப்ப விவன்றாய்
மூழ்குவ ளொன்றோ வன்றே லென்யாய்
மூழ்குவ ளொன்றோ வன்றியவன்
றாயும் யாயும் முடன்மூழ் குபவே. 37

அடுதிறன் முன்பின் னாற்ற முருக்கிப்
படுதலை பாறணை நூறி- வடியிலைவேல்
வீசிப் பெயர்பவ னூர்ந்தமாத் தீதின்றி
நாண்மகிழ் தூங்குந் துடியன் துடிகொட்டும்
பாணியிற் கொட்டுங் குளம்பு. 38

தருமமு மீதேயாந் தானமுந் தீதேயாங்
கருமமுங் காணுங்கா லீதாஞ் — செருமுனையிற்
கோள்வாள் மறவர் தலைதுமிய வென்மகன்
வாள்வாய் முயங்கப் பெறின். 39

இன்ப முடம்புகொண் டெய்துவீர் காண்மினோ
அன்பி னுயிர்மறக்கு மாரணங்கு — தன்கணவன்
அல்லாமை யுட்கொள்ளு மச்சம் பயந்ததே
புல்லார்வேல் மெய்சிதைத்த புண். 40

கடைசி அடிக்கு நச்சினார்க்கினியர் (புறம்) பாட பேதமும் காட்டுகிறார். வேலிற் பெயர்ந்த மனைவி என்று பாடமோதி அவ் வேலான் உயிரைப் போக்கின மனைவி என்று பொருள் கொள்வாரு முளர் என்பார்

எற்கண் டறிகோ வெற்கண் டறிகோ
என்மக னாத லெற்கண் டறிகோ
கண்ணேண் கணைமூழ் கினவே தலையே
வண்ண மாலை வாள்விடக் குறைந்தன
வாயே
பொருநுனைப் பகழி மூழ்கலிற் புலால்வழிந்
தாவ நாழிகை யம்புசெறிந் தற்றே
நெஞ்சே வெஞ்சரங் கடந்தன குறங்கே
நிறங்கரந்து பல்சர நிறைந்தன வதனால்
அவிழ்பூ வம்பணைக் கிடந்த காளை
கவிழ்பூங் களிற்றின் காய்போன் றனனே. 41

துறக்கத்துப் பெயர்ந்த நெடுங்கோளாதன் தாய் இறந்துபட்ட தலைப் பெயனிலை என நச்சினார்க்கினியர் உரை தருகிறார்.

வாதுவல் வயிறே. வாதுவல் வயிறே
நோலா வதனகத் துன்னீன் றனனே
பொருந்தா மன்ன ரருஞ்சம முருக்கி
அக்களத் தொழிதல் செல்லாய் மிக்க
புகர்முகக் குஞ்சர மெறிந்த வெஃகம்
அதன்முகத் தொழிய நீபோந் தனையே
எம்மில் செய்யா வரும்பழி செய்த
கல்லாக் காளைநின் னீன்ற வயிறே. 42

கரியிடை வேலொயப் போந்த தற்குத்
தாய்தப வந்த தலைப்பெய னிலை...
இரவலர் வம்மி னெனவிசைத்த லின்றிப்
புரவலன் மாய்ந்துழியும் பொங்கும் — உரையங்க
வேற்கண் ணியரமுத வெம்பூசல் கேட்டடங்கா
தோற்கண்ண போலுந் துடி. 43

இழுமென முழங்கு முரசமொடு குழுமிய
ஒன்னார் மன்னர்த் தந்த முன்னூர்ச்
சிறையில் விலங்கிச் செவ்வே லேந்தி
யாண்டுபட் டனனே நெடுந்தகை
ஈண்டுநின் றம்ம வணியில் பெரும்புகழே. 44

கனவே போலவு நனவே போலவு
முன்னிய தன்றியென் னுளைக நடுக்குறக்
கருநிறக் காக்கையும் வெண்ணிறக் கூகையும்
இருவகை யுயர்திணைக் கேந்திய கொடியொடும்
வெருவந்த தோற்றத்தா லுருவின பலகூளிக்
கணங்கள் குருதி மண்டைசுமந் தாடவும்
பறையன்ன விழித்தகண்ணார் பிறையன்ன
பேரெயிற்றாள்
குவடன்ன பெருமுலையா ளிடைகாந்த பெரு
மோட்டான்
இடியன்ன பெருங்குரலாள் தடிவாயாற்
றசைப்புறத்தாள்
கடலன்ன பெருமேனியாள் காண்பின்னா
கமழ்கோதையாள்
சிலையன்ன புருவத்தாள் சென்றேந்திய அகல்
அல்குலான்

மழையு மஞ்சும் வளியும் போலுஞ்
செலவினா ளொருபெண் டாட்டி
தலைவி ரித்துத் தடக்கை நாற்றி
மறனெ றிந்து மாறுகொண் டறியா

வறிவுக்கிம் முறைநா ணில்வள வன்றே
பூவிரல் காட்டி நீறுபொங் கத்தன்
கைகள னீலனடித் தூரரை யிடம்செய்து
காடுபுகுதல் கண்டே னென்னுங்
கவலை நெஞ்சமோ டவல நீங்கினான்
அன்றது மன்றவ் வதிகமான் தாய்க்கு. 45

இது தக்கையாகப் பரணி உரையாசிரியர் தந்த பாடல்.

மெய்ம்மலி மனத்தி னம்மெதிர்[1] நின்றோ
னடர்வினைப் பொலிந்த சுடர்விடு பாண்டிற்
கையிகந் தமரும் தையணற் புரவித்
தளையவிழ் கண்ணி யிளையேன் சீறின்
விண்ணுயர் நெடுவரை வீழ்புயல் கடுப்பத்
தண்ணறுங் கடாஅ முமிழ்ந்த வெண்கோட்
டண்ணல் யானை யெறிதலொன்றோ
மெய்ம்மலி யுவகைய னம்மருங்கு வருதல்
கடியமை கள்ளுண் கைவல் காட்டத்
துடிய நுண்க ணோக்கிச் சிறிய
கொலைமொழி மின்னுச் சிதர்ந் தனையதன்
வேறிரித் திட்டு நகுதலு நகுமே. 46

அதியமானார், சிறப்பெய்திய பெரும்பாக்களை மதியாது சேரமான் முனைப்படை நின்றானைக் கண்டு அரிசிற்கிழார் கூறியது.

மறனுடை மறவர்க் கேறவிட னின்றி
நெய்யோ டையவி யப்பி யெவ்வாயும்
எத்திறப் பறவை யியற்றின திரீஇக்

கல்லும் கவணும் கடுவிசைப் பொறியும்
வில்லும் கணையும் பலபடப் பரப்பிப்
பந்தும் பாவையும் பசிவரிப் புட்டிலும்
என்றிவை பலவுஞ் சென்றுசென் றெறியு
முந்தை மகளிரை யியற்றிப் பின்றை
யெப்பெரும் புகழி வாயிற் றூக்கிச்
சுட்டல் போயின் றாயினும் வட்டத்
தீப்பாய் மகளிர் திகழ்நலம் பேர
நோக்குநர் நோக்குநர் நொந்துகை விதிர்க்கும்
தாக்கருந் தானை யிரும்பொறை
பூக்கோட் டண்ணுமை கேட்டோனுங் கலுழ்ந்தே. 47

இதுபொன் முடியார் பாட்டு.

கலையெனப் பாய்ந்த மாவு மலையென
மயங்கமருழந்த யானையு மியப்படச்
சிலையலைத் துய்ந்த வயவரு மென்றிவை
பலபுறங் கண்டோர் முன்னான் இனியே
யமர்புறங் கண்ட பசும்புண் வேந்தே
மாக்களி றுதைத்த கணைசேர் பைந்தலை
முக்கறு நுங்கிற் றூற்றயற் கிடப்பக்
கணையாக் கழற்காற் கருங்கண் ஆடவர்
உருகெழு வெகுளியர் செறுத்த னார்ப்ப
மிளையே யின்று நாளை நாமே
யுருமிசை கொண்ட மயிர்க்கட்
டிருமுர சிரங்க வூர்கொள் குவவே. 48

இது சேரமான் பொன்முடியாரையும் அரிசிற் கிழாரையும் நோக்கித் தன் படை பட்ட தன்மை கூறக் கேட்டோற்கு அவர் கூறியது.

மொய்வேற் கையர் முரண்சிறந் தொய்யென
வையக மறிய வலிதலைக் கொண்ட
தெவ்வழி யென்றி வியன்தார் மார்ப
வெவ்வழி யாயினு மவ்வழித் தோன்றித்
திண்கூ ரெஃகின் வயவர்க் காணின்
புண்கூர் மெய்யி னூராஅய் பகைவர்
வைந்தலை யுதைத்த மைந்துமலிதடக்கை
யாண்டகை மறவர் மலிந்துபிறர்
தீண்டற காது வெந்துறை யானே. 49

இது பொன்முடியார் தகடூரின் தன்மை கூறியது.

## புறநானூறு

களம்புக லோம்புமின் றெவ்விர் போரெதிர்ந்
தெம்முழு முளனொரு பொருநன் வைகல்
எண்டேர் செய்யுந் தச்சன்
திங்கள் வலித்த காலன் னோனே. 87

திணை — தும்பை, துறை — தானை மறம்

யாவி ராயினுங் கூழை தார்கொண்
டியாம்பொருது மென்ற லோம்புமி னோங்குதிறல்
ஒளிறிலங்கு நெடுவேல் மழவர் பெருமகன்
கதிர்விடு நுண்பூ ணம்பகட்டு மார்பின்
விழவுமேம் பட்ட நற்போர்
முழவுத்தோ ளென்னையைக் காணா வூங்கே. 88

இழையணிப் பொலிந்த வேந்துகோட் டல்குல்
மடவர லுண்கண் வாணுதல் விறலி
பொருநரு முளரோநும் மகன்றலை நாட்டென
வினவ லானாப் பொருபடை வேந்தே
எறிகோ லஞ்சா வரவி னன்ன
சிறுவன் மள்ளரு முளரே யதாஅன்று
பொதுவிற் றூங்கும் விசியுறு தண்ணுமை
வளிபொரு தெண்கண் கேட்பின்
அதுபோ ரென்று மென்னையு முளனே. 89

திணையும் துறையுமவை.

உடைவளை கடுப்ப மலர்ந்த காந்தள்
அடைமல்கு குளவியொடு கமழும் சாரல்
மறப்புலி யுடலின் மான்கணம் முளவோ
மருளின விசும்பின் மாதிரத் தீண்டிய
இருளு முண்டோ ஞாயிறு சினவின்
அச்சொடு தாக்கிப் பாருற் றியங்கிய
பண்டச் சாகாட் டாழ்ச்சி சொலிய
வரிமணன் ஞெமரக் கற்பக நடக்கும்
பெருமிதப் பகட்டுக்குத் துறையு முண்டோ
எழுமரம் கடுக்கும் தாடோய் தடக்கை
வழுவில் வன்கை மழவர் பெரும
இருநில மண்கொண்டு சிலைக்கும்
பொருநரு முளரோ நீகளம் புகினே. 90

திணையும் — துறையு மவை

வலம்படு வாய்வா ளேந்தி யொன்னார்
களம்படக் கடந்த கழறொடித் தடக்கை
ஆர்கலி நறவி னதியர் கோமான்
போரடு திருவிற் பொலந்தா ரஞ்சி
பால்புரை பிறைநுதற் பொலிந்த சென்னி
நீல மணிமிடற் றொருவன் போல
மன்னுக பெரும நீயே தொன்னிலைப்
பெருமலை விடரகத் தருமிசைக் கொண்ட
சிறியிலை நெல்லித் தீங்கனி குறியா
தாத னின்னகத் தடக்கிச்
சாத னீங்க வெமக்கீத் தனையே. 91

திணை பாடாண்திணை, துறை — வாழ்த்தியல்

அவனை அவர் நெல்லிப்பழம் பெற்றுப் பாடியது.

யாமொடுங் கொள்ளா பொழுதொடும் புணரா
பொருளறி வாரா வாயினுந் தந்தையர்க்

கருள்வந் தனைவாற் புதல்வர்தம் மழலை
என்வாய்ச் சொல்லு மன்ன வொன்னார்
கடிமதி லரண்பல கடந்த
நெடுமா னஞ்சிநீ யருளன் மாறே. 92

இளம்புதல்வர் மழலை பொருள் விளங்காவராயினும் தந்தைக்கு இன்பம் தருவதுபோல் என் சொற்களும் நினக்கு இன்பம் தருமென அவ்வையார் தம்மை மகவாகக் கருதி யன்னனைப் புகழ்கிறார்.

திண்பிணி முரச மிழுமென முழங்கச்
சென்றமர் கடத்தல் யாவது வந்தோர்
தார்தாங் குதலு மாற்றார் வெடிபட்
டோடன் மரீஇய பீடின் மன்னர்
நோய்ப்பால் விளிந்த யாக்கை தழீஇக்
காதன் மறந்தவர் தீதுமருங் கறுமார்
அறம்புரி கொள்கை நான்மறை முதல்வர்
திறம்புரி பசும்புற் பரப்பினர் கிடப்பி
மறங்கந் தாக நல்லமர் வீழ்ந்த
நீள்கழன் மறவர் செல்வுழிச் செல்கென
வாள்போழ்ந் தடக்கலு முய்ந்தனர் மாதோ
வரிஞிமி றார்க்கும் வாய்புகு கடாஅத்
தண்ணல் யானை யடுகளத் தொழிய
அருஞ்சமந் ததைய நூறிநீ
பெருந்தகை விழுப்புண் பட்டமாறே. 93

திணை — வாகை, துறை — அரச வாகை.

அவன் பொருது புண்பட்டு நின்றானை அவர் பாடியது.

மன்னா, நீ அருஞ் சமம் ததைய நூறி விழுப்புண் பட்டவாற்றால் நின்னோடு எதிர்த்து வந்தோர், தார்ப் படைக்கும் ஆற்றார். நோயின் காரணமாக இறந்து தருப்பையிற் கிடத்தி வாளாற் போழ்ந்து அடக்கிய வகை யுமன்றி இருந்தனர் என்க.

ஊர்க்குறு மாக்கள் வெண்கோடு கழாஅலின்
நீர்த்துறை படியும் பெருங்களிறு போல
இனியை பெரும வெமக்கே மற்றதன்
துன்னருங் கடாஅம் போல
இன்னாய் பெருமநின் னொன்னா தோர்க்கே. 94

திணையும் துறையுமவை.

இவ்வே, பீலியணிந்து மாலை சூட்டிக்
கண்டிர ணோன்காழ் திருத்திநெய் யணிந்து
கடியுடை வியனக ரவ்வே 'யவ்வே
பகைவர்க் குத்திக் கோடுநுதி சிதைந்து
கொற்றுறைக் குற்றில மாதோ வென்றும்
உண்டாயிற் பதங்கொடுத்
தில்லாயி னுடனுண்ணும்
இல்லோ ரொக்கற் றலைவன்
அண்ணலெங் கோமான் வைந்நுதி வேலே. 95

திணை : பாடாண்திணை. துறை : வான்மங்கலம்

அவன் தூதுவிடத் தொண்டைமானுழைச் சென்ற அவ்வைக்கு 'அவன் படைக்கலக் கொட்டில் காட்ட அவர் பாடியது. அதியமான் படைக்கலங்கள் பகைவரைக் குத்துதலால் கங்கும் நுனியும் முரிந்து கொல்லனது உலைக் களத்தில் உள்ளன. எந்நாளும் செல்வமுண்டாயின் உணவு (பதம்) கொடுத்து இல்லையாயின் உள்ளதனைப் பலரோடுகூட உண்ணும் வறியோருடைய சுற்றத்திற்குத் தலைவனாகிய எம் தலைவன் என்கிறார்.

அலர்பூந் தும்பை யம்பகட்டு மார்பின்
திரண்டுநீடு தடக்கை யென்னை யிளையோற்கு
இரண்டெழுந் தனவாற் பகையே யொன்றே

பூப்போ லுண்கண் பசந்ததோ ணுணுகி
நோக்கிய மகளிர்ப் பிணித்தன் றொன்றோ
விழவின் றாயினும் படுபதம் பிழையாது
மையூன் மொசித்த வொக்கலொடு துறைநீர்க்
கைமான் கொள்ளு மோவென
உறையுண் முனியுமவன் செல்லு மூரே. 96

திணை : அது. துறை : இயன் மொழி.

அவன் மகன் பொகுட்டெழினியை— அவர் பாடியது. பொகுட்டெழினியின் இன்பச் சிறப்பையும் வென்றிச் சிறப்பையும் பகையாக இப் பாடலில் பார்க்கிறோம்.

போர்க்குரைஇப் புகன்று கழித்தவாள்
உடன்றவர்காப்புடை மதிலழித்தலின்
ஊனுற மூழ்கி யுருவிழந்தனவே
வேலே, குறும்படைந்த வரண்கடந்தவர்
நறுங்கள்ளி னாடுநைந்தலிற்
சுரைதழீஇய விருங்காழொடு
மடைகலங்கி நிலைதிரிந்தனவே
களிறே, எழுஉத்தாங்கிய கதவுமலைத்தவர்
குழூஉக்களிற்றுக் குறும்புடைத்தலிற்
பரூஉப்பிணிய தொடிகழிந்தனவே
மாவே, பரந்தொருங்கு மலைந்த மறவர்
பொலம்பைந்தார் கெடப்பரிதலிற்
களனுழந் தசைஇய மறுக்குளம் பினவே
அவன் றானும், நிலந்திரைக்குங் கடற்றானைப்
பொலந்தும்பைக் கழற்பாண்டிற்
கணைபொருத துளைத்தோ லன்னே
ஆயிடை, உடன்றோ ருய்தல்யாவது தடந்தாட்
பிணிக்கதிர் நெல்லின் செம்மண் மூதூர்
நுமக்குரித் தாகல் வேண்டிற் சென்றவற்
கிறுக்கல் வேண்டுந் திறையே மறுப்பின்
ஒல்வா னல்லன் வெல்போ ரானெனச்

சொல்லவுந் தேறீ ராயின் மெல்லியற்
கழற்கனி வகுத்த துளைச்சில் லோதிக்
குறுந் தொடி மகளிர் தோள்விடல்
இறும்பூ தன்றஃ தறிந்தா டுமினே. **97**

**திணையும் துறையும் அவை**

*அதியமான் நெடுமான்அஞ்சியை அவர் பாடியது.*

அதியமான் வாள், பகைவர் காப்புடை மதிலழித்த லின் உருலழிந்தன. வேல், பகைவரது குறும்பர் சேர்ந்த அரண்களை வென்று பகை நாட்டையழித்து ஆணிகலங்கி நிலைகெட்டன. களிறு, கணைய மரத்தால் தடுக்கப்பட்ட கதவைப் பொருது பரிய பிணித்தலை உடையவாகிய கிம் புரிகள் கழன்றன.

குதிரை, போர்க்களத்தில் பொருது வருந்திய குருதி யான் மறுப்பட்ட குளம்பையுடையவாயின. அதியமா னும் கழல் வடிவாகவும் கிண்ணி வடிவாகவும் செய்து செறிக்கப்பட்டு அம்புபடுதலால் துளைப்பட்ட பரிசை யுடையவன். அவனால் வெகுளப்பட்டோர் பிழைப்பது அரிது. அவனுக்குத் திறை செலுத்தினால் வாழமுடியும். இல்லையென்னின் குறுந்தொடி மகளிரைப் பிரிய வேண்டியதுதான் என்கிறார்.

முனைத்தெவ்வர் முரணவியப்
பொரக்குறுகிய நுதிமருப்பின்
இனக்களிறு செலக்கண்டவர்
மதிற்கதவ மெழுச்செல்லவும்
பிணனழுங்கக் களனுழக்கிச்
செலவசைஇய மறுக்குளப்பினின்
இனநன்மாச் செலக்கண்டவர்
கவைமுள்ளிற் புழையடைப்பவும்
மார்புறச் சேர்ந்தொல்காத்

தோல்செறிப்பினின் வேல்கண்டவர்
தோல்கழியொடு பிடிசெறிப்பவும்
வாள்வாய்த்த வடுப்பரந்தநின்
மறமைந்தர் மைந்துகண்டவர்
புண்படுகுருதி யம்பொடுக்கவும்
நீயே, ஐயவி புகைப்பவுந் தாங்கா தொய்யென
உறுமுறை மரபிற் புறநின் றுய்க்கும்
கூற்றத் தனையை யாகலிற் போற்றார்
இரங்க விளிவது கொல்லோ வரம்பனைந்
திறங்குகதி ரலம்வரு கழனிப்
பெரும்புனற் படப்பையவ ரகன்றலை நாடே. 98

திணை : வாகை; துறை : அரச வாகை; திணை வஞ்சியும் துறை கொற்ற வள்ளையுமாம். அவனை அவர் பாடியது. அதியமான் போராற்றலைக் கூற்றுடன் ஒப்பிடுகிறார்.

அமரர்ப் பேணியு மாவுதி யருத்தியும்
அரும்பெறன் மரபிற் கரும்பிவட் டந்தும்
நீரக விருக்கை யாழி சூட்டிய
தொன்னிலை மரபினின் முன்னோர் போல
ஈகையங் கழற்கா லிரும்பனம் புடையற்
பூவார் காவிற் புனிற்றுப்புலா னெடுவேல்
எழுபொறி நாட்டத் தெழாஅத் தாயம்
வழுவின் றெய்தியு மமையாய் செருவேட்
டிமிழ்குரன் முரசி னெழுவரொடு முரணிச்
சென்றமர் கடந்துநின் னாற்ற றோற்றிய
அன்றும் பாடுநர்க் கரியை யின்றும்
பரணன் பாடினன் மற்கொன் மற்றுநீ
முரண்மிகு கோவலூர் நூறிநின்
அரணடு திகிரி யேந்திய தோளே. 99

**திணையும் துறையும் அவை.**

அவன் கோவலூ ரெறிந்தானை அவர் பாடியது. இப் பாடலில் அதியமான் முன்னோர் கரும்பு கொண்டு வந்ததும், புலவரால் பாடுதற்கும் அரிய சிறப்பினையுடைமையும், பரணராலே பாடப்பட்ட பெற்றியும், திருக் கோவலூரரை வென்ற சிறப்பும் சுட்டப்படுகிறது.

கையது வேலே காலன புனைகழல்
மெய்யது வியரே மிடற்றது பசும்புண்
வட்கர் போகிய வளரிளம் போந்தை
உச்சிக் கொண்ட வூசி வெண்டோடு
வெட்சி மாமலர் வேங்கையொடு விரைஇச்
சுரியிரும் பித்தை பொலியச் சூடி
வரிவயம் பொருத வயக்களிறு போல
இன்னு மாறாது சினனே யன்னோ
உய்ந்தன ரல்லரிவ னுடற்றி யோரே
செறுவர் நோக்கிய கண்டன்
சிறுவனை நோக்கியுஞ் சிவப்பா னாவே. 100

திணையும் துறையும் அவை.

அதியமான் தவமகன் பிறந்தவனைக் கண்டானை அவர் பாடியது.

அதியமான், தன் சிறுவனைப் பார்த்தும் பகைவர் மீது கொண்ட சினத்தை மறந்தானல்லன்.

ஒருநாட் செல்லல மிருநாட் செல்லலம்
பலநாள் பயின்று பலரொடு செல்லினும்
தலைநாள் போன்ற விருப்பினன் மாதோ
அணிபூ ணணிந்த யானை யியறேர்
அதியமான் பரிசில் பெறூஉங் காலம்
நீட்டினும் நீட்டா தாயினும் யானைதன்
கோட்டிடை வைத்த கவளம் போலக்

கையகத் ததுவது பொய்யா காதே
அருந்தே மாந்த நெஞ்சம்
வருந்த வேண்டா வாழ்கவன் றாளே. **101**

**திணை : பாடாண்டிணை. துறை : பரிசில் கடாநிலை.**

அவனை அவர் பாடியது.

அதியமானிடம் பல நாள் சென்றாலும் தலை நாள்போல் உபசரிப்பான். யானை கோட்டிடை வைத்த உணவு எப்படி பொய்யாகாதோ அவ்வாறே அதிய மானிடம் சென்றவரும் பரிசில் பெறாமல் திரும்ப மாட் டார் என்க.

எருதே யிளைய நுகமுண ராவே
சகடம் பண்டம் பெரிதுபெய் தன்றே
அவலிழியினு மிசையேறினும்
அவண தறியுநர் யாரென வுமணர்
கீழ்மரத் தியாத்த சேமவச் சன்ன
இசைவிளங்கு கவிகை நெடியோய் திங்கள்
நாணிறை மதியத் தனையையிருள்
யாவண தோநின் னிழல்வாழ் வோர்க்கே. **102**

**திணை : அதே. துறை : இயன்மொழி.**

அவன் மகன் பொகுட்டெழினியை அவர் பாடியது.

ஒருதலைப் பதலை தூங்க வொருதலைத்
தூம்பகச் சிறுமுழாத் தூங்க தூங்கிக்
கவிழ்ந்த மண்டை மலர்க்குநர் யாரெனச்
சுரன்முத லிருந்த சில்வளை விறலி
செல்லை யாயிற் சேணோ னல்லன்
முனைசுட வெழுந்த மங்குன் மாப்புகை
மலைசூழ் மஞ்சின் மழகளி றணியும்
பகைப்புலத் தோனே பல்வே லஞ்சி

'பொழுதிடைப் படாஅப் புலரா மண்டை
மெழுகுமெல் லடையிற் கொழுநிணம் பெருப்ப
அலத்தற் காலை யாயினும்
புலத்தல் வல்லன் வாழ்கவன் றாளே. **103**

**திணை : அது. துறை : விறலியாற்றுப்படை.**

*அதியமான் நெடுமானஞ்சியை அவர் பாடியது.*

பகைவர்பால் திறை கொண்ட பொருளுடையவனா தலின் புலவர் வேண்டியதெல்லாம் தருதல் அதிய மானுக்கு எளிது என இதில் பார்க்கிறோம். உலகமே வறுமையுற்றாலும் அதியமான் புலவரை ஆதரிப்பதை விட மாட்டான் என்கிறார்.

போற்றுமின் மறவீர் சாற்றுது நும்மை
ஊர்க்குறு மாக்க ளாடக் கலக்கும்
தாட்படு சின்னீர்க் களிறட்டு வீழ்க்கும்
ஈர்ப்புடைக் கராஅத் தன்ன வென்னை
நுண்பல் கரும நினையா
திளையனென் றிகழிற் பெறலரி தாடே. **104**

**திணை : வாகை. துறை : அரச வாகை.**

*அவனை அவர் பாடியது.*

அதியமான், அவ்வைக்குத் தலைவன் என்றும், அவன் நீரில் இருக்கும் முதலை யானையையும் கொல்லுவது போல் வலிமையுடையவன் என்றும் கூறுகிறார்.

அதியன் இளையனாயினும் இடத்தாலும் மெய்வலி யாலும், வினை வலியாலும் பெரியனாகலின் பகைவர் வெல்லுதல் அரிது என்கிறார்.

குமணனைப் பாடும் பெருஞ்சித்திரனார் கடையேழு வள்ளல்களையும் போற்றும்போது 'ஊரா தேந்திய குதிரைக் கூர்வேற் கூவிளங் கண்ணிக் கொடும் பூண் எழினி' என்கிறார்.

சிறியகள் பெறினே யெமக்கீயு மன்னே
பெரியகள் பெறினே
யாம்பாடத் தான்மகிழ்ந் துண்ணு மன்னே
சிறுசோற்றானு நனிபல கலத்தன் மன்னே
பெருஞ்சோற் றானு நனிபல கலத்தன் மன்னே
என்பொடு தடிபடு வழியெல்லா மெமக்கீயு மன்னே
அம்பொடு வேனுழை வழியெல்லாந் தானிற்கு
மன்னே
நரந்த நாறுந் தன்கையாற்
புலவு நாறு மென்றலை ந்தைவரு மன்னே
அருந்தலை யிரும்பாண ரகன்மண்டைத் துளையுரீ
இரப்போர்க் கையுளும் போகிப்
புரப்போர் புண்கண் பாவைசோர
அஞ்சொனுண் டேச்சிப் புலவர் நாவிற்
சென்று வீழ்ந் தன்றவன்
அருநிறத் தியங்கிய வேலே
ஆசா கெந்தை யாண்டுளன் கொல்லோ
இனிப் பாடுநரு மில்லைப் பாடுநருக்கொன் றீகுநரு
மில்லை
பனித்துறைப் பகன்றை நறைக்கொள் மாமலர்
சூடாது வைகி யாங்குப் பிறர்க்கொன்று
ஈயாது வீயு முயிர்தவப் பலவே. 235

திணை : பொதுவியல். துறை : கையறுநிலை.

அதியமான் விருந்தோம்பும் பண்பும் ஈகைக்குணமும் இப் பாடலில் விதந்தோதப்படுகிறது.

இல்லா கியரோ காலை மாலை
அல்லா கியர்யான் வாழு நாளே
நடுகற் பீலி சூட்டி நாரரி
சிறுகலத் துகுப்பவுங் கொள்வன் கொல்லோ
கோடுயர் பிறங்குமலை கெழீஇய
நாடுடன் கொடுப்பவுங் கொள்ளா தோனே. 231

திணை : பொதுவியல். துறை : கையறுநிலை.

கன்றம ராயங் கானத் தல்கவும்
வெங்கால் வம்பலர் வேண்டுபுலத் துறையவும்
களமலி குப்பை காப்பில வைகவும்
விலங்குபகை கடிந்த கலங்காச் செங்கோல்
வையகம் புகழ்ந்த வயங்குவினை யொள்வாட்
பொய்யா வெழினி பொருதுகளஞ் சேர
ஈன்றோ ணீத்த குழவி போலத்
தன்னமர் சுற்றந் தலைத்தலை இனையக்
கடும்பசி கலக்கிய விடும்பைகூர் நெஞ்சமொடு
நோயுழந்து வைகிய வுலகினு மிகநனி
நீயிழந் தனையே அறனில் கூற்றம்
வாழ்தலின் வரூஉம் வயல்வள னறியான்
வீழ்குடி உழவன் வித்துண் டாஅங்
கொருவ னாருயிர் பருகி
ஆர்குவை மன்னோவவ னமரடு களத்தே. 230

திணை : அது. துறை : கையறுநிலை.

அதியமான் தகடூர் பொருது வீழ்ந்த எழினியை அரிசில்கிழார் பாடியது.

எறிபுனக் குறவன் குறைய லன்ன
கரிபுற விறகி னீம வொள்ளழற்
குறுகினுங் குறுகுக குறுகாது சென்று
விசும்புற நீளினு நீள்க பசுங்கதிர்த்
திங்க ளன்ன வெண்குடை
ஒண்ஞாயி றன்னோன் புகழ்மா யலவே. 232

திணையும் துறையும் அவை

அதியமான் நெடுமான்அஞ்சியை அவ்வையார் பாடியது.

வாயி லோயே வாயி லோயே
வள்ளியோர் செவிமுதல் வயங்குமொழி வித்தித்தாம்
உள்ளியது முடிக்கு முரனுடை யுள்ளத்து
வரிசைக்கு வருந்துமிப் பரிசில் வாழ்க்கைப்
பரிசிலர்க் கடையா வாயி லோயே
கடுமான் றோன்ற நெடுமான் அஞ்சி
தன்னறியலன்கொ லென்னறி யலன்கொல்
அறிவும் புகழு முடையோர் மாய்ந்தென
வறுந்தலை யுலகமு மன்றே யதனாற்
காவினெங் கலனே சுருக்கினெங் கலப்பை
மாரங்கொஃ றச்சன் கைவல் சிறாஅர்
மழுவுடைக் காட்டகத் தற்றே
எத்திசைச் செலினு மத்திசைச் சோறே. 206

திணையும் துறையும் அவை.

அதியமான் நெடுமான் அஞ்சி பரிசில் நீட்டித்தானை அவ்வையார் பாடியது.

குன்று மலையும் பலபின் னொழிய
வந்தனென் பரிசில் கொண்டனென் செலற்கென
நின்ற வென்னயந் தருளி யீதுகொண்
டீங்கனஞ் செல்க தானென வென்னை
யாங்கறிந் தனனோ தாங்கருங் காவலன்
காணா தீத்த விப்பொருட் கியானோர்
வாணிகப் பரிசில னல்லேன் பேணித்
தினையனைத் தாயினு மினிதவர்
துணையன வறிந்து நல்கினர் விடினே. 208

திணையும் துறையும் அவை.

அதியமான் நெடுமான் அஞ்சியுழைச் சென்ற பெருஞ்சித்திரனாரைக் காணாது 'இது கொண்டு செல்க' என்று அவன் பரிசில் கொடுப்பக் கொள்ளாது அவர் சொல்லியது.

உடைய னாயி னுண்ணவும் வல்லன்
கடவர் மீது மிரப்போர்க் கீயும்
மடவர் மகிழ்துணை நெடுமா னஞ்சி
இல்லிரைச் செரீஇய ஞெலிகோல் போலத்
தோன்றா திருக்கவும் வல்லன் மற்றதன்
கான்றுபடு கனையெறி போலத்
தோன்றவும் வல்லன்தான் தோன்றுங்காலே. 315

திணையும் துறையும் அவை.

அதியமான் நெடுமான் அஞ்சியை அவ்வையார் பாடியது.

பால்கொண்டு மடுப்பவு முண்ணா னாகலிற்
செறாஅ தோச்சிய சிறுகோ லஞ்சியொ
டுயவொடு வருந்து மனனே யினியே
புகர்நிறங் கொண்ட களிறட் டானான்
முன்னாள் வீழ்ந்த வுரவோர் மகனே
உன்னில னென்னும் புண்ணொன் றம்பு
மானுளை யன்ன குடுமித்
தோன்மிசை கிடந்த புல்லண லோனே. 310

இப் பாடல் பொன்முடியார் பாடியது.

அறவை நெஞ்சத் தாயர் வளரும்
மறவை நெஞ்சத் தாயி வாளர்
அரும்பலர் செருந்தி நெடுங்கான் மலர்கமழ்
விழவணி வியன்கள மன்ன முற்றத்
தார்வலர் குறுகி னல்லது காவலர்
கனவினுங் குறுகாக் கடியுடை வியனகர்
மலைக்கணத் தன்ன மாடஞ் சிலம்பவென்
அரிக்குரற் றடாரி யிரிய வொற்றிப்
பாடி நின்ற பன்னா ளன்றியும்
சென்ற ஞான்றைச் சென்றுபட ரிரவின்
வந்ததற் கொண்டு நெடுங்கடை நின்ற

புன்றலைப் பொருந னளியன் றானெனத்
தன்னுழைக் குறுகல் வேண்டி யென்னரை
முதுநீர்ப் பாசி யன்ன வுடைகளைந்து
திருமல ரன்ன புதுமடிக் கொளீஇ
மகிழ்தரன் மரபின் மட்டே யன்றியும்
அமிழ்தன மரபி னூன்றுவை யடிசில்
வெள்ளி வெண்கலத் தூட்ட லன்றி
முன்னூர்ப் பொதியிற் சேர்ந்த மென்னடை
இருப்பே ரொக்கல் பெரும்புலம் பகற்ற
அகடுநனை வேங்கை வீகண் டன்ன
பகடுதரு செந்நெல் போரொடு நல்கிக்
கொண்டி பெறுகென் றோனே யுண்டுறை
மலையல ரணியும் தலைநீர் நாடன்
கண்டாற் கொண்டுமனை திருந்தடி வாழ்த்தி
வானறி யலவென் பாடுபசி போக்கல்
அண்ணல் யானை வேந்தர்
உண்மையோ வறியல் காண்பறி யலரே. 390

அதியமான் நெடுமான் அஞ்சியை அவ்வையார் பாடியது.

மதியேர் வெண்குடை யதியர் கோமான்
கொடும்பூ ணெழினி நெடுங்கடை நின்றியான்
பசலை நிலவின் பனிபடு விடியற்
பொருகளிற் றடிவழி யன்ன வென்கை
ஒருகண் மாக்கிணை யொற்றுபு கொடாஅ
உருகெழு மன்ன ராரெயில் கடந்து
நிணம்படு குருதிப் பெரும்பாட் டீரத்
தணங்குடை மரபி னிருங்களந்தோறும்
வெள்வாய்க் கழுதைப் புல்லினம் பூட்டி
வெள்ளை வரகுங் கொள்ளும் வித்தும்
வைக லுழவ வாழிய பெரிதெனச்
சென்றியா னின்றனெ னாக வன்றே

ஊருண் கேணிப் பகட்டிலைப் பாசி
வேர்புரை சிதாஅர் நீக்கி நேர்கரை
நுண்ணூற் கலிங்க முடீஇ யுண்மெனத்
தேட்கடுப் பன்ன நாட்படு தேறல்
கோண்மீ னன்ன பொலங்கலத் தளைஇ
ஊண்முறை யீத்த லன்றியும் கோள்முறை
விருந்திறை நல்கி யோனே யந்தரத்
தரும் பெற லமிழ்த மன்ன
கரும்பிடவட் டந்தோன் பெரும்பிறங் கடையே. 392

அதியமான் மகன் பொகுட்டெழினியை ஔவை யார் பாடியது.

## சிறுபாணாற்றுப்படை

ஆர்வ நன்மொழி ஆயும் மால்வரைக்
கமழ்பூஞ் சாரற் கவினிய நெல்லி
அமிழ்துவிளை தீங்கனி ஔவைக் கீந்த
உரவுச் சினங்கனலும் ஒளிதிகழ் நெடுவேல்
அரவக்கடல் தானை அதிகனும் கரவாது.

## நற்றிணை

அருந்துயர் உழத்தலின் உண்மை சான்மெனப்
பெரும்பிறிது இன்மையின் இலேனும் அல்லேன்
கரைபொருது இழிதரும் கான்யாற்று இகுகரை
வேர்கிளர் மாஅத்து அந்தளிர் போல
நடுங்கல் ஆனா நெஞ்சமொடு இடும்பை
யாங்கனந் தாங்குவென் மற்றே ஓங்குசெலல்
கடும்பகட்டு யானை நெடுமான் அஞ்சி

ஈர நெஞ்சம் ஓடிச்சேண் விளங்கத்
தேர்வீசு இருக்கை போல
மாரி இரீஇ மான்றன்றால் மழையே. 381

திணை : முல்லை. துறை : பிரிவிடை யாற்றாளாகிய தலைமகள் பருவ வரவின்கண் சொல்லியது.

தலையெடுத்து நடக்கும் உயர்ந்த விரைந்த நடையை உடைய களிற்றுயானைப் படையும் விரைந்து செல்லும் குதிரைப்படையுமுடைய அஞ்சி யென்பான், குளிர்ந்த உள்ளத்தால் ஆராய்ந்து நீண்ட காலம் தன் பெயர் விளங்கி நிற்குமாறு இரவலர்களுக்குத் தேர்களைப் பரிசு கொடுக்க இருக்கின்ற நாளோலக்கம் போல மாரி மழை பெய்யத் தொடங்கி மாறாது ஒரு தன்மையாய்ப் பெய்யா நின்றது.

## குறுந்தொகை

கூந்தல் ஆம்பல் முழுநெறி அடைச்சிப்
பெரும்புனல் வந்த இருந்துறை விரும்பி
யாமஃ தயர்கம் சேறும் தானஃது
அஞ்சுவ துடையள் ஆயின் வெம்போர்
நுகப்படக் கடக்கும் பல்வேல் எழினி
முனையான் பெருநிரை போலக்
கிளையொடுங் காக்கதன் கொழுநன் மார்பே. 80

பரத்தை கூற்று

அவ்வையார் பாடியது.

துறை : தலைமகட்குப் பாங்காயினார் கேட்பப் பரத்தை சொல்லியது. அதாவது தலைவி தன்னைப் புறங் கூறினாள் எனக் கேட்ட பரத்தை அது பொறாது அத் தலைமகட்குப் பாங்காயினார் கேட்பத் தலைமகளைப்

பழித்தது. வெவ்விய போரின்கண் நடுநிலை யுண்டாகக் வெல்லும் பலவாகிய வேற்படையை உடைய எழினி என்பானுடைய போர்முனைக்கட்பட்ட பசுக் கூட்டங் களின் பெரியதிரள் பாதுகாக்கப் படுமாறுபோல தன்பாங் காயினாரோடும் பாதுகாத்துக் கொள்வாளாகத் தன் கணவனுடைய மார்பினை எனப் பரத்தை கூறுகிறாள்.

அரிற்பவர் பிரம்பின் வரிப்புற விளைகனி
குண்டுநீ ரிலஞ்சிக் கெண்டை கதூஉம்
தண்டுறை ஊரன் பெண்டினை யாயிற்
பலவா குகநின் னெஞ்சிற் படரே
ஓவா தீயு மாரி வண்கைக்
கடும்பகட் டியானை நெடுந்தே ரஞ்சி
கொன்முனை இரவூர் போலச்
சிலவா குகநீ துஞ்சு நாளே. 91

அவ்வையார் பாடியது. தலைவி கூற்று.

**துறை :** பரத்தையர் மாட்டுப் பிரிந்த தலைமகன் வாயில் வேண்டிப் புக்கவழித் தன் வரைத்தன்றி அவன் வரைத்த தாகித் தன் நெஞ்சு நெகிழ்ந்துழித் தலைமகள் அதனை நெருக்கிச் சொல்லியது. பரத்தையிற் பிரிந்து வந்தவழி வேறுபட்ட கிழத்தியைத் தோழி கூறிய தூஉமாம்.

இதுவும் குறுந்தொகையாகும்.

ஒழிவின்றி, ஈதல் தொழிலைச் செய்யாநின்ற மழை போன்ற வண்மையுடைய கையினையும் கடிய களிற்று யானைகளையும் நெடிய தேரினையும் உடைய அஞ்சி என்பானுடைய அச்சத்தைச் செய்யும் போர்க் களத்தின் கண் உள்ள இரவினை யுடைய ஊரிலுள்ளாரைப் போன்று நின்னுடைய (தலைவி) நெஞ்சின்கண் துன்பம் பலவாகுக.

மயங்குமலர்க் கோதை குழைய மகிழ்நன்
முயங்கிய நாடவச் சிலவே அலரே
கூகைக் கோழி வாகைப் பறந்தலைப்
பசும்பூண் பாண்டியன் வினைவல் அதிகன்
களிறொடு பட்ட ஞான்றை
ஒளிறுவாட் கொங்கர் ஆர்ப்பினும் பெரிதே. 393

தோழிகூற்று. பரணர் பாடியது. துறை: தலைமகன் சிறைப்புறமாகத் தோழி அலர்மலிவுரைத்து வரைவு கடாயது.

கோட்டானாகிய கோழிகளையுடைய வாகை என்னு மிடத்துள்ள போர்க் களத்தின்கண்ணே பசிய பூணை அணிந்த பாண்டியனது ஏவலிலே வல்ல அதிகன் என் பான் தன் யானையோடே இறந்துபட்ட காலத்தே ஒளிறு வாள் கொங்கர் எடுத்த ஆர்ப்பினும் பெரிது தலைவி மீது ஊரார் கூறும் அலர் என தோழி கூறுகிறாள்.

இதுவும் குறுந்தொகையாகும்.

## அகநானூறு

பகுவாய் வராஅற் பல்வரி இரும்போத்துக்
கொடுவாய் இரும்பின் கோள்இரை துற்றி
ஆம்பல் மெல்லடை கிழிய குவளைக்
கூம்புவிடு பல்மலர் சிதையப்பாய்ந் தெழுந்து
அரில்படு வள்ளை ஆய்கொடி மயக்கி
தூண்டில் வேட்டுவன் வாங்க வாராது
கயிறிடு கதச்சேப் போல மதமிக்கு
நாள்கயம் உழக்கும் பூக்கே ழூர
வருபுனல் வையை வார்மணல் அகன்றுறை
திருமருது ஓங்கிய விரிமலர்க் காவில்
நறும்பல் கூந்தற் குறுந்தொடி மடந்தையொடு

வதுவை அயர்ந்தனை என்ப அவரே
கொய்சுவல் புரவிக் கொடித்தேர்ச் செழியன்
ஆலங்கானத்து அகன்தலை சிவப்ப
சேரல் செம்பியன் சினங்கெழு திதியன்
போர்வல் யானைப் பொலம்பூண் எழினி
நார்அரி நறவின் எருமை யூரன்
தேங்கமழ் அகலத்துப் புலர்ந்த சாந்தின்
இருங்கோ வேண்மான் இயல்தேர்ப்பொருநன் என்று
எழுவர் நல்வலம் அடங்க ஒருபகல்
முரைசொடு வெண்குடை அகப்படுத் துரைசெல
கொன்று களம்வேட்ட ஞான்றை
வென்றுகொள் வீரர் ஆர்ப்பினும் பெரிதே. 36

இது தலைமகள் பரத்தையிற் பிரிந்து வந்த தலைமகனொடு புலந்து சொல்லியது. மதுரை நக்கீரர் பாடியது. பாண்டியன் தோற்கடித்த எழுவரில் எழினியும் இடம் பெறுகிறான் என்கிறார்.

அருந்தெறல் மரபின் கடவுள் காப்ப
பெருந்தேன் தூங்கும் நாடுகாண் நனந்தலை
அணங்குடை வரைப்பின், பாழி ஆங்கண்
வேள்முது மாக்கள் வியன்நகர்க் கரந்த
அருங்கல வெறுக்கையின் அரியோள் பண்புநினைத்து
வருந்தினம் மாதோ எனினும் அஃது ஒல்லாய்
இரும்பணைத் தொடுத்த பலர்ஆடு ஊசல்
ஊர்ந்து இழிகயிற்றி செலவர வருந்தி
நெடுநெறிக் குதிரை கூர்வேல் அஞ்சி
கடுமுனை அலைத்த கொடுவில் ஆடவர்
ஆடுகொள் பூசலின் பாடுசிறந் தெறியும்
பெருந்துடி வள்பின் வீங்குழ நெகிழா
மெய்மணி இழந்த பாம்பின் நீநனி
தேம்பினை வாழி என்நெஞ்சே வேந்தர்
கோண்தணி எயிலின் காப்புச் சிறந்து
ஈண்டு அருங் குறையள் நம்அணங்கி யோளே. 372

அல்ல குறிப்பட்டுப் போகா நின்ற தலைமகள் தன் நெஞ்சிற்குச் சொல்லியது. பரணர் பாடியது. குதிரையில் வரும் அஞ்சியை இங்கு பார்க்கிறோம்.

அகலறை மலர்ந்த அரும்புமுதிர் வேங்கை
ஒள்ளிலைத் தொடலை தைஇ மெல்லென
நல்வரை நாடன் தற்பா ராட்ட
யாங்கு வல்லுநள்கொல் தானே தேம்பெய்து
மணிசெய் மண்டைத் தீம்பா லேந்தி
ஈனாத் தாயர் மடுப்பவும் உண்ணாள்
நிழற்கயத் தன்ன நீணகர் வரைப்பின்
எம்முடைச் செல்வமு முள்ளாள் பொய்ம் மருண்டு
பந்து புடைப்பன்ன பாணி பல்லடிச்
சில்பரிக் குதிரை பல்வேல் எழினி
கெடலருந் துப்பின் விடுதொழில் முடிமார்
கனைஎரி நடந்த கல்காய் கானத்து
வினைவல் அம்பின் விழுத்தொடை மறவர்
தேம்பிழி நறுங்கள் மகிழின் முனைகடந்து
வீங்குமென் சுரைய ஏற்றினம் தரூஉம்
முகைதலை திறந்த வேனிற்
பகைதலை மணந்த பல்லதர்ச் செலவே. 105

மகட் போக்கிய தாய் சொல்லியது. தாயங் கண்ணனார் பாடியது. எழினியின் போர்த் திறன் இதில் சுட்டப் படுகிறது.

அழியா விழவின் அஞ்சுவரு மூதூர்
பழியிலர் ஆயினும் பலர்புறங் கூறும்
அம்ப லொழுக்கமும் ஆகியர் வெஞ்சொல்
சேரிஅம் பெண்டிர் எள்ளினும் எள்ளுக
நுண்பூண் எருமை குடநாட் டன்னஎன்
ஆய்நலம் தொலையினும் தொலைக என்றும்
நோயில ராக நம்காதலர் வாய்வாள்

எவ்வி வீழ்ந்த செருவிற் பாணர்
கைதொழு மரபின் முன்பரித்து இடூஉப் பழிச்சிய
வள்ளுயிற் வணர்மருப் பன்ன ஒள்ளிணர்ச்
சுடர்பூங் கொன்றை ஊழுறு விளைநெற்று
அறைமிசைத் தாஅம் அத்த நீளிடை
பிறைமருள் வாள்கோட்டு அண்ணல் யானை
சினமிகு முன்பின் வாமான் அஞ்சி
இனங்கொண் டொளிக்கும் அஞ்சுவரு கவலை
நன்னர் ஆய்கவின் தொலைய சேய்நாட்டு
நம்நீத்து உறையும் பொருட்பிணிக்
கூடா மையின் நீடி யோரே. 115

பிரிவிடை வற்புறுக்கும் தோழிக்குத் தலைமகள் சொல்லியது. மாமூலனார் பாடியது. இதில் அஞ்சியின் போர் முறைமை வெளிப்படுகிறது.

இலமலர் அன்ன அஞ்செந் நாவின்
புலமீக் கூறும் புரையோர் ஏத்த
பலர்மேந் தோன்றிய கவிகை வள்ளல்
நிறையருந் தானை வெல்போர் மாந்தரம்
பொறையன் கடுங்கோப் பாடி சென்ற
குறையோர் கொள்கலம் போல நன்றும்
உவவினி வாழிய நெஞ்சே காதலி
முறையின் வழாஅது ஆற்றிப் பெற்ற
கறையடி யானை நன்னன் பாழி
ஊட்டரு மரபின் அஞ்சு வருபேய்க்
கூட்டெதிர் கொண்ட வாய்மொழி மிஞிலி
புள்ளிற்கு ஏம மாகிய பெரும்பெயர்
வெள்ளத் தானை அதிகற் கொன்றுவந்து
ஒள்வாள் அமலை ஆடிய ஞாட்பின்
பலரறி வுறுத லஞ்சி பைப்பய
நீர்திரள் கடுக்கும் மாசில் வெள்ளிச்
சூர்ப்புறு கோல்வளை செறித்த முன்கை

துறைஅறல் அன்ன இரும்பல் கூந்தல்
இடனில் சிறுபுறத்து இழையொடு துயல்வர
கடல்மீன் துஞ்சும் நள்ளென் யாமத்து
உருவுகிளர் ஓவினைப் பொலிந்த பாவை
இயல்கற் றன்ன ஒதுக்கினள் வந்து
பெயலலைக் கலங்கிய மலைப்பூங் கோதை
இயலெறி பொன்னின் கொங்குசோர்பு உறைப்ப
தொடிக்கண் வடுக்கொள முயங்கினள்
வடிப்புறு நரம்பின் தீவிய மொழிந்தே. **142**

இரவுக்குறி வந்து நீங்கும் தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது. பரணர் பாடியது. அதிகன் கொன்ற செய்தி இதில் வருகிறது.

கேளாய் எல்ல தோழி வாலிய
சுதைவிரிந் தன்ன பல்பூ மராஅம்
பறைகண் டன்ன பாவடி நோன்தாள்
திண்நிலை மருப்பின் வயக்களிறு உரிஞுதொறும்
தண்மழை ஆலியின் தாஅய் உழவர்
வெண்ணெல் வித்தின் அறைமிசை உணங்கும்
பனிபடு சோலை வேங்கடத் தும்பர்
மொழிபெயர்த் தேயத்த ராயினும் நல்குவர்
குழியிடைக் கொண்ட கன்றுடைப் பெருநிரை
பிடிபடு பூசலின் எய்தாது ஒழிய
கடுஞ்சின வேந்தன் ஏவலின் எய்தி
நெடுஞ்சேண் நாட்டில் தலைத்தார்ப் பட்ட
கல்லா எழினி பல்லெறிந்து அழுத்திய
வன்கண் கதவின் வெண்மணி வாயில்
மத்தி நாட்டிய கல்கெழு பனித்துறை
நீர்ஒலித் தன்ன பேஎர்
அலர்நமக் கொழிய அழப்பிரிந் தோரே. **211**

பிரிவின்கண் வேறுபட்ட தலைமகளது வேறுபாடு கண்டு தோழி சொல்லியது. எழினியின் வீரம் குறிக்கப் படுகிறது. இது மாமூலனார் பாடியது.

நாண்கொள் நுண்கோலின் மின்கொள் பராண்மகள்
தான்புனல் அடைகரைப் படுத்த வராஅல்
நார்அரி நறவுண்டு யிருந்த தந்தைக்கு
வஞ்சி விறகின் சுட்டுவா யறுக்கும்
தண்துறை ஊரன் பெண்டிர் எம்மைப்
பெட்டாங்கு மொழிப என்ப அவ்வலர்ப்
பட்டன மாயின் இனியெவன் ஆகியர்
கடலாடு மகளிர் கொய்த ஞாழலும்
கழனி உழவர் குற்ற குவளையும்
கடிமிளைப் புறவின் பூத்த முல்லையொடு
பல்லிளங் கோசர் கண்ணி அயரும்
மல்லல் யாணர்ச் செல்லிக் கோமான்
எறிவிடத் துலையாச் செறிசுரை வெள்வேல்
ஆதன் எழினி அருநிறத் தழுத்திய
பெருங்களிற் றெவ்வம் போல
வருந்துப மாதவர் சேரியாம் செலினே. 216

தலைமகட்குப் பாங்காயினார் கேட்ப தனக்குப் பாங்காயினார்க்குப் பரத்தை சொல்லியது. ஐயூர் முடவனார் பாடியது. இப் பாடலிலும் எழினியின் வீரம் போற்றப்படுகிறது.

கோளக்குறை படாஅக் கோடுவளர் குட்டத்து
அளப்பரிது ஆகிய குவையிருந் தோன்றல்
கடல்கண் டன்ன மாக விசும்பின்
அழற்கொடி அன்ன மின்னு வசிபு நுடங்க
கடிதிடி உருமொடு கதழுறை சிதறி
விளிவுடன் அறியா வானுமிழ் நடுநாள்
அருங்கடிக் காவலர் இகழ்பதம் நோக்கி
பனிமயங்கு அசைவளி அலைப்ப தந்தை
நெடுநகர் ஒருசிறை நின்றனென் ஆக
அறலென அவிர்வரும் கூந்தல் மலரென
வாள்முகத் தலமரும் மாயிதழ் மழைக்கண்

முகைநிறைத் தன்ன மாவீழ் வெண்பல்
நகைமாண்டு இலங்கும் நலங்கெழு துவர்வாய்
கோலமை விழுத்தொடி விளங்க வீசி
காலுறு தளிரின் நடுங்கி ஆனாது
நோய்அசா வீட முயங்கினள் — வாய்மொழி
நல்லிசை தருஉம் இரவலர்க் குள்ளி
நசைபிழைப் பறியாக் கழல்தொடி அதிகன்
கோளரவு அறியாப் பயங்கெழு பலவின்
வேங்கை சேர்ந்த வெற்பகம் பொலிய
வில்கெழு தானைப் பசும்பூண் பாண்டியன்
களிறணி வெல்கொடி கடுப்ப காண்வர
ஒளிறுவன இழிதரும் உயர்ந்து தோன்றருவி
நேர்கொள நெடுவரைக் கவாஅன்
சூரர மகளிரின் பெறற்கரி யோளே. **162**

இரவுக் குறிக்கண் தலைமகளைக் கண்ணுற்று நீங்கிய தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது. பரணர் பாடியது. அதிகனின் ஈகைக் குறிக்கப்படுகிறது.

அம்ம வாழி தோழி காதலர்
வெண்மணல் நிவந்த பொலங்கடை நெடுநகர்
நளியிருங் கங்குல் புணர்குறி வாய்த்த
கனவும் கைம்மிக அலந்தன் றன்னையும்
உட்கொண் டோவாள் காக்கும் பின்பெரியது
இவண்உறைபு எவனோ அளியன் என்றருளி
ஆடுநடைப் பொலிந்த புகற்சியின் நாடுகோள்
அன்னைப் பணித்த அதியன் பின்றை
வள்ளுயிர் மாச்சினை கண்அவிந் தாங்கு
மலைகவின் அழிந்த கனைகடற் றருஞ்சுரம்
வெய்ய மன்றநின் வையெயிறு உணீஇய
தண்மழை ஒருநாள் தலையுக ஒண்ணுதல்
ஒல்கியல் அரிவை நின்னொடு செல்கம்
சில்நாள் அன்றனை யாகஎன பல்நாள்
உலைவில் உள்ளமொடு வினைவலி உறீஇ

எல்லாம் பெரும்பிறி தாக வடாஅது
நல்வேற் பாணன் நல்நாட்டு உள்ளதை
வாள்கண் வானத்து என்றூழ் நீளிடை
ஆள்கொல் யானை அதர்பார்த் தல்கும்
சோலை அத்தம் மாலைப் போகி,
ஒழியச் சென்றோர் மன்ற
பழிஎவன் ஆம்கொல் நோய்தரு பாலே. 325

கொண்டு நீங்கக் கருதி ஒழிந்த தலைமகன் பிரிவின்கண் தலைமகள் தோழிக்குச் சொல்லியது. மாமூலனார் பாடல். இதில் அதிகனின் வீரம் போற்றப்படுகிறது.

முடவுமுதிர் பலவின் குடமருள் பெரும்பழம்
பல்கிளைத் தலைவன் கல்லாக் கடுவன்
பாடிமிழ் அருவிப் பாறை மருங்கின்
ஆடுமயில் முன்ன தாக கோடியர்
விழவுகொள் மூதூர் விறலி பின்றை
முழவன் போல அகப்படத் தழீஇ
இன்துணைப் பயிரும் குன்ற நாடன்
குடிநன் குடையன் கூடுநர்ப் பிரியலன்
கெடுநா மொழியலன் அன்பினன் எனநீ
வல்லகூறி வாய்வதின் புணர்ந்தோய்
நல்லை காண்இனி காதல்அம் தோழீஇ
கடும்பரிப் புரவி நெடுந்தேர் அஞ்சி
நல்லிசை நிறுத்த நயம்வரு பனுவல்
தொல்லிசை நிறீஇய உரைசால் பாண்மகன்
எண்ணுமுறை நிறுத்த பண்ணி னுள்ளும்
புதுவது புனைந்த திறத்தினும்
வதுவை நாளினும் இனியனால் எமக்கே. 352

வரைந்து எய்திய பின்றை மணமனைக்கண் சென்ற தோழிக்குத் தலைமகன் சொல்லியது. வரைவு மலிந்து சொல்லிய தோழிக்குத் தலைமகள் சொல்லியதூஉம் ஆம்.

அஞ்சியத்தை மகள் நாகையார் பாடியது.

தகடூரின் சிறப்பும் அஞ்சியின் புகழும் இப் பாடலில் குறிக்கப்படுகிறது. அஞ்சி அத்தை என்பது அஞ்சியகுதை என்று கொண்டு ஆண்பாக, திரு ஐராவதம் மகாதேவன் போன்றோர் கருதுவர்.



# பிரகலாதன் சரித்திரம்

## (நாடகம்)

**முன்னுரை**

'அரி, ஓம், நாராயணா' என்ற மந்திரத்தின் மூலம் நற்கதி அடைந்த பிரகலாதன் சரித்திரம் தமிழ் மொழியில் மட்டுமன்றி இந்திய மொழிகள் பலவற்றிலும் தொன்று தொட்டு நாடகமாக நடிக்கப் பெற்று வருகின்றன. பாரதமெங்கும் பக்தி மிகுந்த கதையாகப் பிரகலாதன் சரித்திரம் இருந்து வருகிறது.

பிரகலாதன் பொருட்டு நரசிம்ம வடிவமெடுத்து இரணியனைத் திருமால் அழித்ததைத் தமிழ் மொழியைப் பொறுத்தவரை பரி பாடலிலேயே பார்க்கிறோம்.

> ''செயிர்தீர் செங்கட் செல்வ நிற்புகழப்
> புகைந்த நெஞ்சிற் புலர்ந்த சாந்திற்
> பிருங்க லாதன் பலபல பிணிபட
> வலந்துழி மலர்ந்தநோய் கூம்பிய நடுக்கத்து
> அலர்ந்த புகழோன் தாதை யாகலின்
> இகழ்வோன் இகழா நெஞ்சின னாகநீ யிகழா
> நன்றா நட்டஅவன் நன் மார்பு முயங்கி
> ஒன்றா நட்டஅவன் உறுவரை மார்பிற்

படிமதஞ் சாம்ப ஒதுங்கி
இன்னல் இன்னரோ டிடிமுர சியம்ப
வெடிபட ஓடி தூட்டடியொடு
தடிதடி பலபட்வகிர்வாய்த்த உகிரினை'' பாடல் 11

என்று புலவர் கடுவன் இளவெயினனார் பாடுவார். நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் நரசிம்ம அவதாரம் வருவது யாவருமறிந்த தொன்றாகும். பல்வேறு நூல்களிலும் நரசிம்ம அவதாரம் குறிப்பிடப்படினும் கம்பராமாயணத்தில் யுத்த காண்டத்தில், விபீடணன் தம் தமையன் இராவணனுக்கு அறிவுறுத்தும்போது இரணியன் வதையை நன்கு விளக்குகிறான். வடமொழி இராமாயணத்தில் இல்லாத இப் பகுதி தமிழில் சிறப்பாக எடுத்தாளப்பட்டுள்ளது. நமக்குக் கிடைத்துள்ள 'பிரகலாத சரித்திரம் அல்லது இரணியன் சம்ஹாரம்' என்ற நாடகம் இராமாயண இரணியவதைப் படலத்தை யொட்டியே எழுதப்பட்டுள்ளது. மேலும் விருத்தமாகப் பாடியதை இந் நாடகாசிரியர் நாடகமாக மாற்றி உள்ளார். பிரகலாத சரித்திரத்தின் கதைச் சுருக்கம் நாடகத்தின் காப்புச் செய்யுட்களை யடுத்து அகவற் பாவில் நூலாசிரியர் கூறியிருக்கிறார்.

இரணியன் என்பான், பிரமனுக்குப் பேரனும் மரீசியின் புதல்வனுமாகிய காசிப முனிவனுக்கும் திதி என்பவளுக்கும் மகனாகப் பிறந்தான். இவனுடைய தம்பி இரணியாட்சதன் ஆவான். இரணியாட்சதன் வேதங்களைக் கவர்ந்து கொண்டு கடலில் ஒளிக்க, திருமால் வராக அவதார மெடுத்து அவனை அழிக்கிறார்.

தம்பியை யிழந்த இரணியன், பிரமதேவனை நோக்கிக் கடுந்தவம் செய்கிறான். தேவர், மனிதர், விலங்கு முதலிய எவ்வகை உயிர்களாலும் ஐம்பெரும்

பூதங்களாலும் பல்வேறு படைக் கருவிகளாலும் சாகாத வரத்தினை இரணியனுக்குப் பிரமன் அளிக்கிறார். வரம் பெற்ற இரணியன், தேவர் முனிவர் அந்தணர் யாவருக்கும் துன்பம் தருகிறான். தன்னையே 'இரணிய நம'வென எல்லோரும் வணங்க வேண்டுமென்கிறான். இந் நிலையில் இவனுக்கும் லீலாவதிக்கும் நான்கு குழந்தைகள் பிறக்கின்றன. மூத்தவன் பிரகலாதனைத் தக்க பருவத்தில் நாரதமுனிவர் ஆலோசனைப்படி இரணியன் பள்ளிக் கனுப்புகிறான். சுக்கிராச்சாரியாரே குருவாகிறார். குரு, கற்பித்த 'இரணிய நமா'வை விட்டுவிட்டு, 'நாராயணாய நம' வெனப் பிரகலாதன் ஓதுகிறான். குரு, எவ்வளவோ கூறியும் பிரகலாதன் உறுதியாக நிற்கிறான். குரு விற்கே உபதேசம் செய்ய முற்படுகிறான்.

பயந்துபோன சுக்கிராச்சாரியர் இரணியனிடம் முறையிடுகிறார். தந்தை, மகனை அழைத்துக் 'குருவின் வார்த்தையை மீறலாமோ?' என்கிறார். இறுதியில் நாராயணன் நாமத்தை மகன் கூறக் கேட்டு இரணியன் வெகுண்டு வீரர்களை அழைத்துப் பிரகலாதனைக் கொன்றுவிடுமாறு கூறுகிறான்.

இரணியனுடைய படை வீரர்கள் படைக் கருவி களால் பிரகலாதனைத் தாக்குகின்றனர். நாராயண மந்திரத்தால் அவனுக்குத் தீங்கு நேராமல் போவதை இரணியனிடம் படை வீரர்கள் சென்று கூறுகின்றனர்.

இரணியன் வீரர்களை நோக்கித் தீயில் தள்ளுமாறு பணிக்கிறான். தீயில் தள்ளியும் பிரகலாதனுக்குத் துன்பம் வரவில்லை. பின், பாம்புகளை விட்டுக் கடிப்பிக்கச் செய் கிறான். அதிலும் பிரகலாதனுக்குத் துன்பமில்லை அஷ்டதிக்குக் கஜங்களைவிட்டுக் கொல்ல முற்படுகிறான் யானைகளாலும் துயரமில்லை. மலையில் தள்ளிக்கொல்ல முயன்றும் நஞ்சூட்டியும் மகன் இறக்காததால் தானே அவனைக் கொல்ல முனைகிறான்.

தன்னைக் கொல்ல வந்த தந்தையைப் பார்த்து, "தந்தையே! என்னுயிர் இறைவனுக்கு மட்டுமே உரியது. உம்மால் கொல்ல முடியாது" என்கிறான். "இறைவன் யார்"? என இரணியன் கேட்க, திருமாலின் சிறப்புகளைப் பிரகலாதன் கூறுகிறான். திருமாலைத் தம் குலத்தின் எதிரியாகக் குறிப்பிட்டு, அவனை 'என் கண்முன் காட்ட முடியுமா?' என் மகனிடம் கேட்கிறான் இரணியன். எங்குமுள்ளவன் இறைவன் என்ற கருத்தை விரிவாக மகன் விளக்குகிறான். இறுதியாக 'இந்தத்தூணில் இருப்பானா?' என்று ஒரு தூணைக் காட்ட, 'தூணிலும் இருப்பான் இறைவன்' என் மகன் கூறுகிறான். இரணியன் தூணை தன் கையினால் அறைகிறான்.

தூணிலிருந்து நரசிம்மர் பயங்கரப் பெருஞ் சிரிப் பொலியுடன் தோன்றுகிறார்.

அந்திவேளையில் நரசிம்மர் இரணியனைத் தம் மடி மீது கிடத்திக் கைவிரல் நகத்தினால் அவன் குடலை உருவி மாலையாகப் போட்டுக்கொண்டுக் குருதி முழுதும் கீழே சிந்தாதபடி குடித்து, இரணியனைச் சம்ஹாரம் புரிகிறார். இறுதியாகப் பிரகலாதன் விருப்பிய வண்ணம் வரமளித்து மறைகிறார்.

பட்டிதொட்டியெங்கும் இக்கதை தெரிந்த ஒன்றுதான். எனினும் சிற்சில வேறுபாடுகள் பிரகலாதன் சரித்திரம் என வழங்கப்படும் நாடகங்களுள் உள. இந் நாடகத்தில் உள்ள சிறப்புகளை அறியும் முன்னர், இந் நூலாசிரியரைப் பற்றிப் பார்ப்போம்.

நூலாசிரியர் பெயர் இரண்டு இடங்களில் இந் நாடகத்தில் பார்க்கிறோம்.

வருணமாபுரி என வழங்கும் நகரில் வாழும் குலவேள் பிள்ளை என்பவர் மகன் திருக்காமி என்பவர் நாடகமாய்ப் பாடுகிறார். தரும நல்லூரில் வாழும் சபாபதியைத் துதி செய்து நாடக ஆசிரியர் நாடகத்தைப் பாடுகிறார்.

> "திருக்காமி யென்னும் சிறந்திடும் பெயரான்
> பெருக்காய் நாடகம் சென்று ரைப்ப"

> "நாட்டியத் தருமநல்லூரில் வாழும்
> பாட்டினில் புலவன் பைந்தமிழாலே
> நாடகமாக நானில மறிய
> பாடினான் பெரியோர் பதம்சிரம் பணிந்தே."

மேற்கண்ட பிரகலாத சரித்திரம் என்னும் சுவடி பழைய தருமபுரியில் வாழ்ந்த காவேரி பூசாரியிடமிருந்து தருமபுரி அருங் காட்சி யகத்திற்காகப் பெறப்பட்டது. 42×3. செ.மீ. நீள அகலமுள்ள இச்சுவடி 69 ஏடுகளைக் கொண்டுள்ளது. இச் சுவடியை மஞ்சக் குப்பத்தை யடுத்த (விழுப்புரத்தை யடுத்திருக்கும்) மேழிநல்லூரில் வாழும் வீராச்சாமி வாத்தியார் எழுதியதாக இறுதி ஏடு குறிப் பிடுகிறது.

பிரகலாத சரித்திரம் அல்லது இரணிய விலாசம் என்ற பெயரில் ஏற்கனவே பல நாடகங்கள் தமிழில் அச்சில் வந்திருப்பினும் தற்போது கிடைப்பது அரிதாகும்.

புதுவையைச் சார்ந்த சாரத்திலிருக்கும் சோம சுந்தர முதலியாராலியற்றி இஃது புதுவையில் வசிக்கும் சின்ன சாமி முதலியார் கேட்டுக் கொண்டபடி தண்டலம் தமிழ் உபாத்தியார் தியாகராய முதலியார் குமாரர் உபாத்தி யாயர் சுப்பிரமணிய முதலியாரால் பரிசோதிக்கப்பட்டு பிரஜோற்பத்தி ஆண்டு சித்திரை மாதம் பதிப்பிக்கப் பட்ட இரணிய நாடக மொன்றின் பழைய புத்தகம் உ. வே. சா. நூலகத்தில் உள்ளது. 348 பக்கங்களையுடைய

'இந்நூல் நமக்குக் கிடைத்துள்ள நூலைவிட விரிவாக உள்ளது. 'இரணியன் வரலாறு' 'இரண்யாட்சதன் வரலாறு' 'தேவேந்திரன் செய்கை விரிவாக இதில் உள்ளன.

பாடல்கள்பல இரண்டு சுவடிகளிலும் ஒன்று போல் இருப்பினும் வேறுபாடும் ஆங்காங்கே காணப்படுகின்றன. நம்முடைய சுவடியில் ஆசிரியர் பெயர் குலவேள்பிள்ளை என்றுள்ளது. ஆனால் அச்சில் வந்த நூலில் இச் செய்தி இல்லை. அவ்வாறே நம் சுவடியில் இராகங்கள் மட்டுமே குறிக்கப்பட்டுள்ளன. ஆயின், அச்சிட்ட நூலில் இராகத்துடன் தாளமும், தரு, பல்லவி அனுபல்லவி, சரணம் ஆகியவையும் குறிக்கப்பட்டுள்ளன.

நூல் பார்வையிட வழங்கிய உ. வே. சா. நூலக அலுவலர்களுக்கு நன்றி தெரிவித்துக் கொள்கிறேன். அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகத்தில் மற்றொரு சுவடி உள்ளது. இரணிய நாடகம் என்ற அந்த ஓலைச்சுவடி முழுமையின்றி உள்ளது.

**காலம்**

பிரகலாத சரித்திரம் என்னும் இந் நாடகம் 18ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இயற்றப்பட்டதாகத் தெரிகிறது. நாடகம் கருநாடக இசையில் அமைந்ததாகும். ஒவ்வொரு பாடலும் இராகத்தின் பெயருடன் காணப்படுகிறது. பண்ணாராய்ச்சி செய்பவர்களுக்கு இந்நாடகம் துணை புரியும். சங்கீத மும்மூர்த்திகளுக்குப் பின் இந் நாடகம் இயற்றப்பட்டதாக இராகங்களின் பெயர்களை வைத்தே குறிப்பிடலாம்.

**இராகங்கள்**

கீழ்க்கண்ட இராங்ககளில் அமைந்த பாடல்கள் இந் நாடகத்தில் வருகின்றன.

| | |
|---|---|
| மத்தியமாவதி | எதுகுல காம்போதி |
| சங்கராபரணம் | நாதநாமக்கிரியை |
| ரீசபத்தியம் | மோகனம் |
| புன்னாகவராளி | சுருட்டி |
| நவரோசி | தோடி |
| பைரவி | கேதார கௌளை |
| நொண்டி (நாட்டுப்புற மெட்டு) | காம்போதி. |
| ஆனந்தபைரவி | சிந்துபைரவி |
| குணகல்யாணி | சந்தவிருத்தம் |
| தீபிதை | நீலாம்புரி |
| சௌராஷ்டரம் | பூபாளம் |
| ஆச்சரிய சூரணிகம் | பந்துவராளி |

ஆகியவையாகும். மேலும் தரு என்ற இசைப் பாடலும், விருத்தமும், வெண்பாவும், கொச்சகமும் நாடகத்தில் பயின்று வந்துள்ளன.

தியாகேசர் குறவஞ்சி போன்று இராகங்களின் பெயர்களுடன் கூடிய பாடல்களைக் கொண்டுள்ளதால் நாடகம் இயற்றப் பெற்ற காலத்தில் தருமபுரியில் இசைப் புலமையுடன் புலவர்கள் வாழ்ந்தமையை அறிகிறோம்.

### நாடகத்தின் சிறப்பியல்புகள்

திருக்காமி என்பவர் இயற்றிய பிரகலாதனெனும் இந் நாடகம் எளிமையாகவும் இனிமையாகவும் அமைந்துள்ளது. தேவையானபோது மட்டுமே வசனத்தைப் பார்க்கிறோம். தமிழ் மூதாட்டி அவ்வையார், வள்ளுவர் போன்றோர் கருத்துகளை நாடக ஆசிரியர் கையாண்டுள்ளார். மனித நேயத்தையும் கூறிச் செல்கிறார். அரக்கர்கள் தேவருலகம், பிரம

லோகம், தருமலோகம் எல்லாம் சென்று தொல்லை தந்தனர். ஆயினும் மனிதர் உலகம் வந்து மனிதரை வழி பட்டுச் சென்றதாகப் பாடுகிறார் ஆசிரியர். "அரிது அரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது" என்ற அவ்வை யின் கூற்று இதில் பிரதிபலிக்கிறது.

**கருத்தொருமித்த வாழ்வு இல்வாழ்வு**

தேவர்களையெல்லாம் அடக்கிய இரணியன் தம் மகனுக்குக் கல்வி கற்பிக்க நினைத்தபோது உடனே முடி வெடுக்காமல் தம் மனைவியை வரவழைத்து அவளுடைய அபிப்பிராயத்தைக் கேட்கிறான். அவளோ கணவன் கருத்தே தன் கருத்து என்கிறாள். கணவன் மனைவி நல்லுறவிற்கு இதுவோர் உதாரணமெனலாம்.

**பாசம்**

இரணியனும் பிரகலாதனும் தந்தை மகன் பாசம் கொண்டுள்ளதை நூலில் யாண்டும் பார்க்கிறோம். சுக்கிராச்சாரியார் மகனைப் பற்றிக் குறை சொன்ன போது உடனே நம்பாமல் மகன்மீது பாசம் கொண்ட தந்தையாகவே நாம் இரணியனைப் பார்க்கிறோம். மகனை வீரர்கள் துன்புறுத்துவதைக் கண்டு துயருறும் தாயாக லீலாவதி காட்டப்படுகிறார். மகன் வாழ்வின் பொருட்டு நாராயணனையே வழிபடும் தாயாக இந் நாடகத்தில் லீலாவதியைப் பார்க்கிறோம். நாராயணனே தம் மகனுக்கு நற்கதி தருவான் என லீலாவதி நம்புகிறாள்.

தந்தை இறந்தபின் அவருக்கு வீடு பேறு வழங்குமாறு பிரகலாதன் இறைவனிடம் முறையிடுகிறான். தந்தை தனக்கு எவ்வளவோ துயர் தந்தும் ஒரு நன்மகனின் நிலை யில் பிரகலாதன் இருக்கிறான். குருவையும் கொடிய மல் லர் களையுங்கூட பிரகலாதன் அன்பு செலுத்தி நல்வழி காட்டுகிறான். இறைவன் மீது கொண்ட பக்தி

காரணமாகப் பிரகலாதன் தனக்குரிய கடமைகளிலிருந்து விடுபடவில்லை. ஆழ்ந்த பக்தியின் மூலம் எதையும் சாதிக்கலாம் என்பதை அவன் விளக்குகிறான்.

**நாடகம்**

இந் நாடகத்தில் தம்பி இரணியாட்சதன் வரலாறு கோடிட்டுக் காட்டப்படுகிறது. அவ்வாறே தேவேந்திரன் லீலாவதியின் கருவைக் கலைக்க வந்த சப்பவமும் நாரதர் கருவில் உள்ள குழந்தைக்கு 'அரி ஓம்' மந்திரம் புகட்டு வதும் சுருக்கமாக வருகிறது. லீலாவதிக்கும் மகனுக்கும் இடையே நடைபெறும் வாக்குவாதமும் இதில் குறைவே யாகும். நூல் முழுவதும் பிரகலாதன் பக்தியையே பார்க்கிறோம். குருவுக்கும் சீடனாம் பிரகலாதனுக்கும் இடையே நடைபெறும் வாக்குவாதமும் மல்லர்கள் திருந் தியபின் அவர்களுக்கும் பிரகலாதனுக்கும் இடையே நடை பெறும் வாக்குவாதமும் சுவையாக உள்ளன.

இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் இந்த நாடகம் தருமபுரியில் நாடகமாக நடிக்கப்பட்டதாகவும் அதனைத் தாமும் பார்த்ததாகவும் சுவடி வழங்கியபோது மறைந்த திரு காவேரி என்னும்பூசாரி குறிப்பிட்டார் நாடகத்தில் 200க்கும் மேற்பட்ட இசைப் பாடல்கள் உள்ளன.

கட்டியக்காரன் 'ஆஸ்தான சந்தோஷி' என நாடகத் தில் குறிக்கப்படுகிறான். இக்காலத் தெருக்கூத்து நாடகங் களில் எப்படி கட்டியக்காரன் வருவானோ அதே மாதிரி பாடல் குறிப்பிடுகிறது. இரணியன் சபையில் இருப்பதை ஒரு பாடல் அழகாகக் குறிப்பிடுகிறது; சந்திரன் குடை பிடிக்க, தேவ அரம்பையர் தீபங்கள் ஏந்த, வருணன் பன்னீர் தெளிக்க, தேவர்கள் கைக்கட்டி நடுங்க, துந்துபி முழங்க, அகிலமே வணங்க சங்கீத லோலனாய்க் காட்சி தருகிறான். படிப்பு சொல்லித் தரும் குருவின் தோற்றம் தத்ரூபமாக ஒரு பாடலில் பார்க்கிறோம்.

நரசிம்ம அவதாரம் குறித்துத் திவ்யபிரபந்தத்தில் உள்ள சில பாடல்கள் வருமாறு:

எங்குமுளன் கண்ணன் என்ற மகனைக் காய்ந்து
இங்கில்லை யாலென் றிரணியன் தூண்புடைப்ப
அங்கப்பொழுதே அவன்வீயத் தோன்றியவென்
சிங்கப்பிரான் பெருமை ஆராயும் சீர்மைத்தே''

என நம்மாழ்வார் பாடுவார்.

'அளந்திட்ட தூணை அவன்தட்ட ஆங்கே
வளர்ந்திட்டு வாள்உருச் சிங்க உருவாய்'

என்று பெரியாழ்வார், பாடுவார்.

சிங்க ஏழ் குன்றமென முன்னாளில் வழங்கப்பட்ட அகோபிலத்தில் நவநரசிம்மர் கோயில்கள் உள்ளன.

பிரகலாத நரசிம்மர் அல்லது சாந்தமூர்த்தியாகக் காட்சிதரும் இலட்சுமி நரசிம்மர்
சத்ரவட நரசிம்மர்
கரண்ட நரசிம்மர்
யோகானந்த நரசிம்மர்
குகை நரசிம்மர்
குரோத நரசிம்மர் (வராக நரசிம்மர்)
மாலோல நரசிம்மர்
ஜ்வால நரசிம்மர்
பாவன நரசிம்மர்

நாமக்கல்லிலுள்ள நரசிம்ம பெருமாள் குகைக் கோயில் எல்லோரும் அறிந்த ஒன்றாகும். இரணியனை வதம் செய்யும் காட்சி இங்குத் தத்ரூபமாக உள்ளது.

ஆந்திர மாநிலத்தில் தொலுங்கானா பகுதியில் கரீம்நகர் மாவட்டத்தில் தருமபுரி என்ற ஊர் உள்ளது; வேதம் பயின்ற ஊர். அங்கிருந்த பண்டிதர்கள் சமஸ்கிருதத்தில் நூல்கள் இயற்றி உள்ளனர். அவ்வூரில் முக்கியக் கோயில் நரசிம்ம சுவாமி கோயிலாகும். அச்சில் வராத 'தருமபுரி க்ஷேத்திர மகாத்மியம்' என்ற வடமொழி ஓலைச் சுவடி இக் கோயிலில் உள்ளது. நரசிம்ம அவதாரச் சிறப்பை இச் சுவடிக் குறிப்பிடுகிறது. தர்ம வர்மா என்ற அரசனைக் குறிப்பிட்டு, மகா விஷ்ணுவை வழிபட்டு அவன் உய்வு பெற்றதாகவும் அவன் பெயரிலேயே ஊர் தருமபுரி என அழைக்கப் பட்டதாகவும் அதில் பார்க்கிறோம். நரசிம்மர் சௌமிய வடிவம் கொண்ட இடமே தருமபுரியாகும். தவிர நடன நரசிம்மர் சுவாமி கோயிலும் இங்குண்டு.

பழைய தருமபுரியில் உள்ள நரசிம்ம சுவாமி கோவிலையும் ஈண்டு நினைவில் கொள்ள வேண்டும் அவ்வாறே கோட்டைக்கோயிலில் உள்ள தூண் ஒன்றில் நரசிம்ம உருவம் அழகாகச் செதுக்கப்பட்டுள்ளதை ஏற்கனவே பார்த்தோம். இனி நாடகத்தைக் காண்போம்.



# பிரகலாதன் சரித்திரம்

## (நாடகம்)

### விருத்தம்

திருவளர் மணிசேர் மார்பன்
திருவடி தலைமேல் சூழ
பிரகலாதன் தன் சரித்திரம்
பெருமையாய்ப் பாடி யாட
வரிமுலை குமுதச் செவ்வாய்
மலைமக வீன்ற முக்கண்
இருபதத் தொருகொம்பி யானை
யிணையடி காப்பு தானே.

சீர்வளர் துளப மார்பன்
செழும்பதம் தினமும் போற்றும்
பேர்வளர் பிரக லாதன்
பெரியநா டகத்தைப் பாட
தாரணி புகழ்ந்து போற்றும்
தருமநல் லூரில் வாழும்
வாரண முகஞ்சேர் நாக
மணிந்தவன் மலர்த்தாள் காப்பே

அருமறை முடிவு கொண்டு
அருள்பிர கலாத னென்னும்
பெரியவன் கதையைக் கூற
பெருங்கட லுலகஞ் சூழும்
வருணமா புரியில் வாழும்
வாரண முகத்தோன் பெம்மான்
ஒருமகன் வெள்ளைப் பிள்ளை
யுபையதாள் பணிகு வோமே. 2

ஆதிநூல் முறைமை யெல்லாம்
அறிவினால் தானே யோதும்
நீதிசேர் பிரக லாதன்
நெடும்புகழ் கதையைப் பாட
தாதவிழ்க் கொன்றை வேணி
தற்பர ராதி மூலம்
பாதமு மமிர்த வல்லி
பதமதும் பணிகு வோமே. 3

அண்டர்நா யகனைத் தூணில்
அருவுரு வாய மைத்து
தொண்டனாம் பிரக லாதன்
தொழுதிடுங் கதையைப் பாட
வண்டமிழ்ப் புனையும் செல்வி
மனுதினம் வாக்கு வந்து
கண்டருள் பொழியும் வேதக்
கலைமகள் காப்பு தானே. 4

இருநிலம் வாழ்க போற்று
மிரணிய னீன்ற செல்வன்
பெருமைசேர் பிரக லாதன்
பிரபல நாட கத்தைத்

திருமறை நான்கு ஞானச்
செந்தமிழ்ப் புனைந்து பாடி
அருள்பெறு பனிரண் டாழ்வார்
அடியனின் காப்பு தாமே. 5

மண்ணெல்லாம் போற்றி யேத்த
வரும்பிரக தாலன் கதையை
யெண்ணிலா அறிவோர் முன்னே
இயம்புவா ரோதோ வெண்ணில்
தெண்ணிலா வொளிவு செய்த
தினகரன் ஒளிவு பார்க்க
கண்ணொடு வாயு மில்லாள்
காட்டிய வார தாமே.

பிரக லாதன் கதையைப்
பெரிய நாடகமாய்ப் பாட
வருண மாபுரியில் வாழ்வோன்
வருநிதி குலவேள் பிள்ளை
தருதிரு காமி யென்பார்
தயவுடன் வந்து கூற
தருமநல் லூரில் வாழும்
சபாபதி துதிசெய் தானே. 7

தரு

ஜெயஜெய ஜெயஜெயா சிதா கோவிந்தா
தேவ தேவகி நந்தா
மாதவ வைகுந்த வாசனே முகுந்தா
— ஜெயஜெய
மச்சக்கூர் மவதாரா வரும் வரும் வராகவதாரா
வச்சவசி நாவுதாரா வாமனாவதாரா
— ஜெயஜெய

பரசுராம ராமா பலபத்திர ராமா
ஸ்ருங்கிருஷ்ண பரந்தாமா மகாலட்சுமி பூமா
— ஜெயஜெய

அருள்பீ தாம்பரா அகலங்க மணிதாரா
வருணகோ தண்டகோபாலா வாசுதேவக் குமாரா
— ஜெயஜெய

பக்தஜன பரிபாலா பத்மஞான விசாலா
சித்தர்பணி கோபாலா திருமாதுரும் லோலா
— ஜெயஜெய 8

தரு ராகம் பந்துவராளி

மங்களமே ஜெயமங்களம் மங்கள நரசிம்ம
மாதவ நேயனுக்கு மங்களம்
மங்கள கோவிந்த மாயனுக்கு மங்களம்
பங்கயக் கண்ணனுக்கும் பனிப்புயல் வண்ணனுக்கும்
அங்கஜன் தனைபெற்ற அமலனுக்கும் மங்களம்
சச்சுத நந்தனுக்கும் சர்வலோக நாதனுக்கும்
அச்சுத நந்தனுக்கும் அமலனுக்கும் மங்களம்
சீதேவி மார்பனுக்கும் தேவாதி தேவனுக்கும்
பூதேவி முதல்வனுக்கும் புருஷனுக்கும் மங்களம். 9

அகவல்

காசிபமுனிவன் காதல்சேர் மனையாள்
ஆசைகோள் பதிமூன் றாகிய மடவார்
அத்தி திதியும் மைந்தன் திதியும்
திதியும் சாமையும் சிறந்தயி ரெட்டையும்
சுவாமியும் முனியும் துய்யதா மரையும் 5

சுரசையும் விளையும் சொல்லியே காட்டியும்
மதிமிகக் குரோத வசயன் பாராய்
பதிமூன் றாகப் படர்வார் மடவார்
திதியென் பவள்தான் சித்தசன் கணையால்
மதிமிகக் கலங்கி மாலைப் பொழுதில் 10

பதியெனும் காசிபன் பாதம் பணிந்து
என்னவில் வேளை யிதழமு தருந்தி
மன்னிய கலவி மருவீ ரென்ன
அன்றவ ளழைக்க அந்தியம் பொழுதில்
குன்றின் முலையாள் கூடுத லாகத் 15

தென்னவும் கேளாய் ஏந்திழை புலம்ப
அன்னவ ளுடனே அணைந்தந்த முனிவன்
அப்பொழு தினிலே அவள்தன் வயிற்றில்
கர்ப்பமும் தரிக்கக் கிளர்முனி சொல்வான்
வாராய்ப் பெண்ணே வடிவுள்ள மைந்தன் 20

நாரா யணனால் நலியுமென் றுரைக்க
அரிசிவனே யென்று அவள்மனங் கலங்கி
நூறு வருஷம் நுவன்றிடும் கருப்பம்
விறுடன் தாங்கி மெல்லியாள் பெற்றாள்
அதிபராக் கிரமராய் அதிசூ ரருமாய்க் 25

கதிர்மணி நடுங்க காசினி நடுங்க
அண்டமு நடுங்க அமரர்கள் நடுங்க
கொண்டலம் குழலாள் குமாரனை யீன்றாள்.
இரண்ய னென்றும் இரண்யாட்சதனென்றும்
பெருகிய பெயரே பெற்றிடுஞ் சூரராய் 30

இந்திரன் பதிமேல் ஏகியே நடந்து
சந்திரன் விமானம் தானே யூர்ந்து

மறவிதன் தண்டினை வாங்கிச் சுழட்டிச்
விறலுடை யோராய் மிகவே வளர்நாள்
இரண்யாட் சதனெனு மிளையோ னெழுந்து 35

தரணியே பாயாய்த் தானே சுருட்டி
புணரியி லழுந்திப் போயினா னென்றே
மண்மலித் தாமரை வந்திடும் பிரமன்
முத்திலெ நின்று முதல்வனா மையன்
சத்திய வருக்கம் தானுருக் கொண்டு 40

பொல்லா மயனும் போகக் கண்ணே
மல்லார் மாறன் பவதிரைப் பிளந்து
கொன்றபின் பூமியைக் கொட்டினி லென்றிட
வன்றிறு வுலகம் வற்றனன் மாயன்
அவ்வுரை கேட்டு அடலிர ணியனும் 45

கல்வை நெஞ்சினனாய் கண்ணீர்ப் பெருகி
இனியிற வாமல் எழில்வரம் பெறவே
தரணியை மைந்தனாய்ச் சார்பினி லடைந்தான்
பதுமா சனத்தில் பாங்குட னிருந்து
மூதியும் புலனை மோனத் திசைத்து 50

இடதுகால் குதியை யினைகுந் தழுத்தி
தொடைவலக் காலைத் தொடைமே லிருந்திட
மூலத் திருந்து முதலெழுஞ் சூழினைக்
காலை யொத்திழுத்து கதிர்முனை நாசி
வழிசேர் பன்னிரண்டும் குலவாய் விறனில் 55

ஒழியினா லங்குல முகந்த வெட்டங்குல
முள்ளே யொடுங்கு முத்தம் வாயுவை
தொனியே வலத்தீர் திகழ்நாசி தன்னில்
நாசித்தன்னில் ரெட்சித்து முன்னேயிழுத்து புரித்து
பூசித்து குய்யும் பொரிந்து யிவ்வாறு 60

ஒருபதி னாயிரம் வருஷ மிருந்து
அருந்தவஞ் செய்வதி லேயருஞ் சோதி
யிருதலை யுச்சி யெரிமீ திருந்து
வானக மெங்கும் வட்ட மான
ஞானங் கலங்கி நலிவுறச் செய்ய 65

புரந்தரன் முதலோர் பொறுக்க மாட்டாமல்
வரந்தரும் நான்முகன் மருங்கே யுரைக்க
அன்ன வாகனமேல் அவன்முன் தோன்றி
என்ன வேண்டுமென் றிறையவன் கேட்க
தேவர்க ளாலுந் திக்குள்ளோர்க ளாலும் 70

யாவர்க ளாலும் மாதவத் தாலும்
சூலவாள் வசிர்தேர் மரத்தி னாலும்
வேலதி னாலும் விறக்கினை யாலும்
மண்ணிலும் விண்ணிலும் மற்றுள்ள தாலும்
உள்ளிலும் வெளியிலு மோனர் கையாலும் 75

அல்லும் பகலும் யாதொன் றாலும்
வல்லுபிர் மாயா வரந்தாரு மென்ன
அவ்வர மருளி அயன்பதிப் போகச்
செவ்வரங் கொண்ட செருக்கா லெழுந்து
தேவர்க ளுலகம் திருமா லுலகம் 80

பூவையः னுலகம் புண்ணிய னுலகம்
ஈரே ழுலக மெங்கும் விளங்க
சீற்றுற திருமால் சிவன்பெயர் மாற்றி
தன்னது பெயரே தானே தழைய
நன்னிய முனிவர் நன்னில் கிழவர் 85

இரணிய நமவென உரைத்தியே வணங்க
தரணியீ ரேழும் சகுதிச பரனாய்

துந்துமி அதிர துடிமுரசு அதிர
அந்நிரை பேரிகை ஆர்ப்பரித் திருக்க
மல்லாரி தாளம் வகையுட னதிரச் 90

சல்லாரி பம்பை தானே யதிர
மழுவுவிழக் கூவிசிர் வாளுட னீட்டி
கழுமுனைக் கப்பணம் கணைசிலை பூட்டி
காதில் குண்டலங் கதிரொளி யெரிப்ப
தாதவிழ் மார்பில் தரமணி யிலங்க 95

சன்னவீ ரத்தினத் தார்வடம் இலங்க
மண்ணில் பதக்க மணிவெல வெரிப்ப
சந்திர குடையுயர் தண்ணிழல் தயங்க
கந்தங் குழலா விரிகா லசைப்ப
தீபக் கண்ணன் செழுஞ்சுடர் கண்ணன் 100

தூபக் கண்ணன் சுரோணிதக் கண்ணன்
அம்புவி தன்னையங் கையா லேந்தும்
சம்பரன் முதலோர் தானவர் சூழ
சுரமங் கையர்கள் சோபனம் பாட
அரவமங் கையர்கள் ஆலாத்தி யேந்தி 105

வானவர் பூமழை மண்மிசைப் பொழிய
தானவர் வேந்தன் சதிரிர ணியனும்
சிங்கா தனத்தில் சிறப்புட னிருந்து
செங்கோல் செலுத்திச் செயமுடன் வருநாள்—
லீலா வதியெனும் நேரிழை மனையாள் 110

பாலார் மொழியாள் பாவை வயிற்றில்
பிரக லாதனன் பேரனு கலாதன்
விரகுள லாதன் வீரசங் குலாதன்
நால்வர்கள் பிறந்து நலமுடன் வாழ்நாள்
பாலகன் வித்தைப் பயின்றிட வேண்டி 115

பார்க்கரன் தன்னைப் பரிவுட னழைத்து
ஆர்க்கமா பிரக லாதன் தனக்கு
ஒப்புடன் வேத மோதுவீ ரென்ன
தப்பிலா தவனும் சார்விடம் நண்ணி
இரணிய நமாவென் றியம்பென வவனும் 120

கரஞ்சிரங் குவித்து கண்ணீர்த் ததும்ப
நாராய ணாயநமாவென் றுரைத்து
நீரா யுருகி நெடும்போ திருந்தான்
இரணியன் கேட்டு எனக்கவன் பயந்து
சரணமென் றோடி சலத்தினி லொளித்தான். 125

தம்பியைக் கொன்ற தருக்கண் ணானைக்
கும்பிடச் சொன்ன குழந்தா யுன்னைக்
கொல்லுவே னென்று கொதித்தெழுஞ் சினத்தால்
மல்லரை யழைத்து மடிப்பீ ரென்ன
வாளால் வெட்டியும் மழுவா லெறிந்தும் 130

தாளாண்மை யோர்கள் தன்வலி கொண்டே
வச்சிரப் படையால் மார்பினி லெறிந்தும்
நச்சுப் பாம்பால் நடுங்கச் செய்தும்
ஒன்றிலுஞ் சாகா யுறுதியைப் பார்த்து
அன்றவர் கல்லினி லணைத்துப் பிணைத்துக் 135

கருங்கடல் நடுவே கவிழ்த்திட மிதந்து
பரங்கரு ணையனே பரமனே யானே
அரிஅரி யென்று அய்யன் புகழ
விரைவுடன் கரைமேல் மிதந்து கல்லேற —
கொண்டுவா வென்று குமரனைப் பார்த்து, 140

இன்றுநீ சொன்னவன் இறைவனே யானால்
எங்கே யிருப்பா னென்றவன் கேட்க,

எங்கெங்குந் தானா யிருப்பா னென்ன
தூணிலு முளனோ சொல்லரி யென்று
பாணியா லறைய பதித்தா ணிருந்தே 145

கோர சிங்கமும் கொழுங்கனற் கண்ணும்
நார சிங்கமாய் நாதனு மெழுந்து
அந்தி நேரத்தி லமலனும் நகத்தால்
வந்திர ணியனை மடியிலே வைத்து
வயிற்றைப் பீறி மாய்த்தருள் செய்து 150

நயத்துட னுலக நடுக்கமும் தீர்த்து
வாய்த்தரு ளிமையோர் மனமது மகிழ்ந்து
பூதல மீதே பூமழை பொழிந்தார்
மைந்தனுக் காயிசு மகிழ்ந்தருள் புரிந்து
இந்தமாக் கதையை யெழில்வரு ணாபுரி 155

வந்திடும் பிள்ளை மகிழ்பதி குமாரன்
திருக்காமி யென்னும் சிறந்திடும் பெயரான்
பெருக்காய் நாடகம் பேசென் றுரைப்ப
நாட்டியத் தரும நல்லூரில் வாழும்
பாட்டினில் புலவன் பைந்தமி ழாலே 160

நாடக மாக நானில மறிய
பாடினான் பெரியோர் பதம்சிரம் பணிந்தே. 162

விருத்தம்

மட்டில்லா பணிகள் பூண்டு
வரிசை சல்லடமுந் தொட்டுச்
சட்டமாய் சாலு போலே
தழைத்திடும் வயிறுங் கொண்டு
இஷ்டமா யுலகம் போற்றும்
இரணியன் வாசல் காக்கும்
கட்டியக் காரன் வந்து
களரியில் தோன்றி னானே.

## வசனம்

இரா‌ணிய மகாராசன் வாசல் காக்கப்பட்டா நின்ற கட்டியக்காரன் வருகிற விச்சித்திர அவதார மெப்படி யென்றால்.

## தரு

ஆக்கிரம வீரப ராக்கிரம யிரணியன்
ஆஸ்தான சந்தோஷி வந்தா னைய்யா
அதட்டி அதட்டி மிரட்டி யுருட்டி
ஆஸ்தான சந்தோஷி வந்தா னைய்யா
அரண்ட பார்வையு மிரண்ட முழியும்
ஆஸ்தான சந்தோஷி வந்தா னைய்யா
அண்டர் பணிந்திடுங் கொண்ட யிரணியன்
ஆஸ்தான சந்தோஷி வந்தா னைய்யா. 12

## விசால தரு

சிந்தூரப் பொட்டு மிட்டுச்
செஞ்சிலம்பு காலி லிட்டுக்
குந்திகுந்தி யாடிக் கொண்டு
கோணை குல்லா சூட்டிக்கொண்டு
விந்தைபதம் பாடிக் கொண்டு
மேவு மிரணியன் வாசல்
கந்த பரிமள மார்பன்
கட்டியக் காரனுந் தோன்றினானே. 13

## விருத்தம்

அண்டரண் டங்கள் போற்றும்
அமரர்கள் வணங்கி யேத்த
எண்டிசை காக்கும் தேவர்
அஞ்சிவாய் புதைத்து நிற்க

மண்டலம்வியப்ப வேத
மாமுனி வோர்க ளாசீர்
கொண்டிட யிரணியர் சூரன்
கொலுவினி லிருக்கின் றானே. 14

வசனம்

அண்டரண்ட பிரமாண்டங்களும் முப்பத்துமுக் கோடி தேவர்களும் நாற்பத் தெண்ணாயிரம் ரிஷிகளும் அஷ்டவசுக்களும் திக்கு பாலகரும் தெண்டனம் பண்ணி கைக் கட்டிக் கொண்டு நிற்க தக்கதாகவும் தெய்வலோகத்து தேவஸ்ரீகள் பல்லாண்டு கூறி மங்கல ஆலாத்தி யேந்தி அசிர்வதிக்கவும் இப்படி நடனக் கணிகையுடனே இரணியேசுபரன் கொலுவுக்கு வருகிற விதமெப்படி யென்றால்

தரு. ராகம் மத்தியமாவதி

கந்தருவ ரிசைபாடவே தும்புரு நாரதர்
கிம்புருடர்— சுதி கூடவே
சந்திரமுகந் தளதளன்னவே மார்பிலிருந்து
சந்திர ஆரம்—பளபளன்னவே
மந்திரிகள் புடைசூழவே வானவர்களும்
வந்து அடிமிசை தாழவே
கொந்தலறு மாலை முடியான் யிரணியனும்
கொலுவுதனில் வந்துதோன்றி னான். 15

விருத்தம்

தங்கமா மகுடம் சூட்டிச்
சரப்பளி பணிகள் பூண்டு
மங்களப் பெண்க ளாடி
வரிசை யாலாத்தி யேந்த

துங்க மந்திரிகள் சூழ
 துய்யநான் மறையோர் வாழ்த்த
எங்குமே புகழ்பெற் றோங்கும்
 இரணியன் தோன்றி னானே. 16

வசனம்

அகோ தெப்படி யென்றால் இரணிய சூரன்
வருகிற விசித்திர அவதார மெப்படியென்றால்

தரு எதுகுல காம்போதி

அதிவீர பராக்கிரமன்
 அளவற்ற பலவிக்கிரமன்
குதிகோன் தேவதுஷ்ட
 னிக்கிரகன் இரணியபூமன்

கொலுவினில் வந்து தோன்றினான்
 பொன்மணி மகுட மின்ன
பூந்துகில் பளப ளென்ன
 மின்மினிப் பூணொளி துன்னவே
 இரணிய பூமன்

வேடிக்கை யாகத் தோன்றினான்
 சந்திரக் குடைமேல் விளங்க
சாமரை யிருபால் துலங்க
 வந்திக வாழ்த்தொலி — பொங்கவே
 இரண்ய பூமன்

வாணவர் வணங்க வந்தானே
 மின்னு மிடைரம் பையர்கள்
வேல்போல் விழிகன் னியர்கள்
 பொன்மணித் தீபங்க ளேந்தவே
 இரணிய பூமன்

புகழுடன் வந்து தோன்றினான்.
வருணன் பன்னீர் தெளிக்க
மந்த வாடை தென்றுளிக்க
பெருமதி வெண்குடை புகவே —
இரணிய பூமன்

பெருமையுடன் வந்து தோன்றினான்.
சுபரிபமாய் பார்க்கும் போது
சூரர் கைகட்டி நடுங்கி
விபரீதப் பொன்பூ போடவே —
இரணிய பூமன்

விந்தையுடன் வந்து தோன்றினான்.
இருப்பு லக்கை பிண்டிபால்
இலங்கு மழுவேல் சூலம்
தரித்த சுரர்முறை சூழவே —
இரணிய பூமன்

சகல ரெட்சகன் வந்தானே.
அந்தரத் துந்துமி முழங்க
அகில மெங்கும் வணங்க
சுந்தர சங்கீத லோலனாய் —
இரணிய பூமன்
சொகுசுடன் வந்து தோன்றினான் 17

விருத்தம்

கொலுவினி லிருந்த வேந்தன்
கொடிய கஞ்சுகியைப் பார்த்து
வலிபெரும் நமது சேனை
மன்னவன் சம்பா சூரன்

இலகிய விசாலக் கண்ணன்
 யெரிக்கண்ணன் புகைக்கருங் கண்ணன்
அலகிலாப் படையை யிப்போ
 தழைத்துநீ வருகு வாயே. 18

வசனம்

அகோ வாரும் பிள்ளாய்! தூத கஞ்சுகி நம் முண்டய தளகர்த்தனான சம்பா சூரன், விசாலாட்சன், அக்கினி யாட்சன், துப்பாராட்சன் இவர்கள் நால்வரையும் அழைப்பியும் பிள்ளாய்.

அப்புடியே! மகா பாக்கியமையா சுவாமி. அந்தச் சமயத்திலே சேனைத் தலைவர்கள் வருகிற விசித்திர அவதாரமெப்படி யென்றால் —

தரு. ராகம் மத்தியமாவதி

சம்பா சூரனும் வந்தானே — தளகர்த்த
சம்பா சூரனும் வந்தானே!
சம்பா சூரனும் நிகும்பா சூரனும் வந்தார்
தும்பாண்டசூரனுடன் செம்பாண்ட கண்ணனுடன்
(சம்பா சூரனும்)

ஈட்டி வல்லயம் பூட்டியே கட்டாரி சூரி
இடையி லுடைவாள் கட்டியே
தாஷ்டீக முடன்வெகு மெட்டி மெட்டிமையாக
போட்டிகள் பேசி ராசன் பேட்டிகள் காணவென்று
— சம்பா

அண்டம் நடுநடுங்கவே தபசு செய்யும்
அந்தணர்கள் நெஞ்சொடுங்கவே
கொண்டலென முழங்க மண்டி சேனத்துடனே
எண்டிசை காக்குந் தேவர்கண்டு நடுக்கங்கொள்ள
— சம்பா

திக்குக ளெட்டும் வெல்லவே இரணியன்பேர்
தேசங்க ளெங்கும் சொல்லவே
வக்கிரமந்த ராக்ஷதர் உக்கிரமுடன்கூடி
அக்கிரமஞ் செயவென்று கொக்கரித்து
ஆர்ப்பரித்து 19
— சம்பா

விருத்தம்

வெம்பு ராட்சதர்களெல்லாம் விண்ணையம் செய்து நிற்க
சம்பா சூரன்முகத்தைநோக்கி தாரணியெங்கும்தேடி
தம்பி தன்னுயிரைக் கொண்ட தண்டுழா யரியைப் பற்றி
யிம்பரே வருவீரென்ன வியம்பவே புறப்பட் டாரே 20

வசனம்

அகோ வாருங்கள் ராட்சதர்களே! என்னுடைய தம்பி இரணியாட்சதனைக் கொன்ற திருமால் எங்கேயிருக்கிறார் என்று தேடிப் பார்த்துப் பிடித்து வாருங்கள் பிள்ளாய்.

அப்படியே. மகா பாக்கியம் சுவாமி.

தரு சங்கராபரணம்

வந்தாரே ராட்சதர் மாயனைத் தேடி
வந்தாரே ராட்சதர்

இந்திரலோகம் புகுந்து- இந்திரனை
இணைத்துப் பிணைத்து முடிக்கக் கடுகி வந்தாரே
சந்திர லோகம் புகுந்து—சந்திரனை
துடித்துப் பிடித்து யிடித்து அடித்து வந்தாரே
பிரம லோகம் புகுந்து—பிரம்மாவை
பெருத்த சினத்தா லுருட்டி திரட்டி, வந்தாரே

தரும லோகம் புகுந்து — எமனை
தண்டைப் பிடுங்கிக் கொண்டு முடுக்கி, வந்தாரே
பருதி லோகம் புகுந்து சூரியனை
பார்த்து ஆர்த்து சேர்த்துக் கோர்த்து, வந்தாரே
அரனார் லோகம் புகுந்து — அவரை
அங்கும் காணாதே எங்கும் திரிந்து, வந்தாரே
முனிவர் மடங்கள் புகுந்து — முனிவர்
முயங்கும் வேள்வியை மயக்கி தயக்கி, வந்தாரே
மனித லோகம் புகுந்து — மனிதரை
வணங்கி யிணங்கி குணங்களைக் கொண்டு
— (வந்தாரே ராட்சதர்) 21

### விருத்தம்

வந்த ராட்சதர்க ளெல்லாம்
மன்னனை வணங்கித் தேவர்
சிந்தனைப் படியே யந்தத்
தேசமு முலக மெங்கும்
முந்தியே நாலு திக்கும்
விசயமே முயன்றோ மென்ன
விந்தையாய் வரிசை யீந்து
விடைகொடுத் தனுப்பி னாரே. 22

### வசனம்

அகோ வாருமையா சுவாமி. ராசபரமேஸ்வர தேவரீர் சொன்ன பிரகாரம் திக்குவிசயம் செய்தோம். அந்த நாராயணனைத் தேடிப் பார்க்கிறபோது எங்கும் காணோம். சகல லோகங்களிலேயும் உம்முடைய பிரசித்த நாம கரணமே யல்லாமல் அரி என்கிறபேர் எந்த லோகங்களிலேயும் காணோமையா, சுவாமி.

### விருத்தம்

விடைகொடுத் தனுப்பிப் பின்பு
வேத வேதியர்கள் வானோர்
அடைவுடன் புகழ்ந்து போற்ற
அரியணைப் பொலிய மேவி
நடனசங் கீத லோல
னாகவே நடக்கும் போது
தொடையலார் முனிவன் வந்து
தோன்றினான் ஊன்றி னானே. 23

### வசனம்

இப்படியாக திக்கு விசயம் செய்து வந்த சேனாதிபதி யாருக்கு ஆடையாபரண முள்ளிட்ட வெகுமதிகள் செய்து அனுப்பின பிற்பாடு அனேகரிஷிகள் அனேக தேவாதிகள், வணங்கி வாழ்த்தும்படியாய் நடன சங்கீத லோல நாகரத்தின சிம்மாதனருடனாக இரணியேசுபரன் கொலு விருக்கும் சமயத்திலே நாரத மாமுனி வருகிற விசித்திர அவதாரமெப்படி என்றால்

### தரு — நாத நாமக்கிரியை

நாரத மாமுனி வந்தாரே
இரணியன்பால்
நாரத மாமுனி வந்தாரே
நாரத மாமுனி

சீருடன் வீணை மீட்டி
சரிகம பதநி வென்ன
நேருட னிசை பூட்டி (நாரத மா)

பெய்யும் நிலாவைப் போலே
மெய்யில் வெம்பொடி பூசித்
துய்ய சுருதி மறை
செய்யநா வினிற் பேசி (நாரத மா)

தண்டுங் கமண்ட லமும்
　　இரண்டையுங் கைப்பிடித்து
தண்டைச் சிலம்பு காலில்
　　மண்டிடவே நடித்து　　　　(நாரத மா)

உருண்ட ருத்திராட் சங்கள்
　　புரண்டமா லைகள்சூட்டி
முரண்ட கலகமெங்குந்　　　　24

திரண்டிடவே நாட்டி
　　நாரத மாமுனி வா ந்தாரே!

**விருத்தம்**

நாரத மாமுனியே கேளாய்
　　நானில முதல தாக
ஈரேழு புவனத் துள்ள
　　இகழ்ச்சியும் புகழ்ச்சி தானும்
நேருட னறிந்தா யன்றோ
　　நீதெரி சேதி யெல்லாம்
ஏருட னிசைப்பா யென்ன
　　இயம்புவான் நயந்து தானே.　　　　25

**வசனம்**

அகோ வாருமையா நாரதரே. இந்தப் பூலோக முதலாகவுள்ள ஈரேழு லோகத்திலேயுஞ் சஞ்சரித்து அங்கங்கே உள்ள இகழ்ச்சியும் புகழ்ச்சியும் இழிவும் பெருமையும் நீ தெரிந்து கொண்டவ ரானபடியினாலே எந்த லோகத்திலே எந்த இகழ்சசி எந்த லோகத்திலே எந்தபுகழ்ச்சி அந்தச் சேதிகள் எல்லாம் நமக்குத் தெரியும் படியாய்ச் சொல்லுமையா.

**அப்படியே மகாபாக்கியமையா இரணியேசுபரா.**

### விருத்தம்

மண்டல மெல்லா முந்தன்
 மகிமையே மகிமை யல்லால்
கண்டது மில்லை வேறு
 காண்கிலேன் கேட்கி லேன்யான்
மண்டமர் கடந்த வேலாய்
 மைந்தனாம் பிரக லாதன்
திண்டிற லான சேதி
 செப்புவே னிப்போ தானே. 26

### வசனம்

அகோ வாருமையா இரணிய பூபாலக. அண்டரண்ட புவனங்கள் எல்லாம் நாம் சஞ்சரித்தோம். அங்கே பார்க்கிறபோது உம்முடைய மகிமையே ரிஷியீஸ்வரர்களும் தேவாதிகளும் புகழ்ந்து கொண்டிருக்கக் கண்டதே யல்லாமல் வேறேயொரு அன்னியமான சேதியும் காதினாலே கேட்டதில்லை. ஆனாலும் உம்முடைய புத்திரசிகாமணியான பிரகலாதன் விருத்தாந்தமெல்லாம் கேட்டபடி சொல்லுகிறேன். கேளுமையா.

### ராகம் மத்திமாவதி

மைந்தன்கதி சொல்லக் கேளய்யா
 ராசாதி ராசா
மைந்தன்கதி சொல்லக் கேளய்யா
இந்திராதி சூரர் வந்து இதர்சனார்
விந்தை இரணிய துரந்த சுந்தர (மைந்தன்)

எல்லோர்க்குஞ் சற்குணவிலாசன் — உன்னிலுமதிக
வல்லோன் விற்பன மதிகவல்லோன் — சாது
சன்மார்க்க சல்லாபன் எங்களனு கூலன்

துன்மார்க்க மானபொல்லாதார் கண்ணாடல்—
குலகாலன்
ஓதும் முன்பின் கல்வி கண்டு — ஆதிசேஷனும்
நாணுமே
போது மவற்கீ டெங்கே காணுமே (மைந்தன்)

சத்தியந் தவறாத வாக்கியன் — அறியாதபக்தி
முக்தி மெய்ஞ்ஞான வயிராக்கியன் — வேதபுராண
புத்தி விஸ்தாரண மனுசிவ வாக்கியன்
— லோகாதி லோக
மெத்திசையும் புகழும் பாக்கியன்
— உன்பேரெடுக்கும்
பத்த பாலன் சுசீலன் ஆதி தன் — சித்த
முற்றவனே பிரகலாதன்
(மைந்தன்)

கொள்ளுமா முனிவோர்கள் கூடி — பிரம
லோகத்திலே
வள்ளலே யுந்தன் புகழைப்பாடி — பூசனைசெய்து
பிள்ளைப் பிரகலாதனைக் கொண்டாடி —
மகிழ்ந்த சேதி
உள்ளது சொல்லவந்தேன் ஓடி — ஆகையினாலே
மெள்ளக் குழந்தைக் கைந்து பிராய மாச்சுது
பள்ளிக் குகந்து வைக்க தருண மாச்சுது
மைந்தன் கதி சொல்லக் கேளய்யா. 27

விருத்தம்

நாரதர் நவிலக் கேட்டு நயந்துடல் புளகம் பூத்து
பாரிய புயங்கள் வீங்கி பண்பவர் மூலவர் தன்மேல்
சீரிய கருணையாகிச் சிந்தையில் மகிழ்ச்சிப் பொங்கி
நேருட னிரணி யேசன் நினைந்திது இயம்பு
வானே. 28

வசனம்

இப்படியாகத் தன்னுடைய புத்திரனான பிரகலா தனுடைய விருத்தாந்தமெல்லாம் நாரதமாமுனி சொல்லக் கேட்டுச் சந்தோஷமானது தலைகொண்டு சரீரமெங்கும் புளகாங்கிதம் கொண்டு புசங்கள் பூரித்துச் சொல்லுகிற விதமெப்படி யென்றால்—

விருத்தம்

ஈதுமுன் னினைந்தேன்யானும் இசைந்து
நாரதரே நீரும்
ஓதிய தன்மை யாலே உயர்ந்திடும் நிமித்தியம்
நன்றே
ஆதலால் பிரகலாத அன்பனை அமைந்தநாளில்
வேதநூ லோத வைப்பேன் விரைந்துபோய்
வருகுவீரே. 29

வசனம்

அகோ வாருமையா நாரதரே! இதுக்கு முன்னமே நாமும் நினைந்துகொண்டிருந்தோம். மனதுக்கு மனது சாட்சியாக நீரும் சொன்னபடியினாலே மகா திவ்யமான நிமித்த மாச்சுது. இப்போது திதி வாரம் நட்சத்திரம் யோகங் கரணமான பஞ்சாங்கமும் அமைந்த சுபதினத் திலே அப்படியே பிரகலாதனைப் பள்ளிக்கு வைக் கிறேன். நீர் உம்முடைய ஸ்தானத்துக்குப் போய் வாரு மென்று நாரதரை அனுப்பிவிட்டு இருக்கிற சமயத் திலே இரணியன் சொல்லுகிற விசித்திர அலதான மெப்படி என்றால்—

### விருத்தம்

தன்னரு கேவல் செய்யும் தையலார் முகத்தை
நோக்கி
பொன்னணி மனையிலேகிப் பூங்குழல் மனைவி
யாளை
என்னரு கழைப்பீரென்ன ஏந்திழை மார்கள் சூழ
வண்ணமா மதிபோல் லீலாவதி வந்து
தோன்றி னாளே. 30

### வசனம்

அகோ வாருங்கோள் பெண்களே! நம்முடைய அரண்மனைக்குப் போய் லீலாவதியை அழைத்துக் கொண்டு வாருங்கோள் பெண்களா!

அப்படியே மகா பாக்கியமையா சுவாமி.

அந்தச் சமயத்திலே லீலாவதிஅம்மன் வருகிற விசித்திர மெப்படி என்றால்—

### ரீச பத்தியம்

முத்து மாமணிச் சுட்டி நெற்றிதனி லாடவே
முகப்பூரண சந்திர ஒளி முடுகி யாட
கொத்து மாலையுமாட குழையூஞ்ச லாட
கொங்கை மாமயிலிணைக் குலுங்கி யாட
சித்த நூபுரத் தண்டை கிண்கிணிக ளாடவே
தாழ்வான கைப்பிரபை தயங்கி யாட
பத்தரைமாற்றுத் தங்கவளை கையினி லாடவே
பாங்கிமார் கவுரிய ரிருபா லு மாட
தித்தி மத்தள தாள மொத்து மோங்கத்
திக்ழும் நாரதர் வீணை யிசையு மோங்கச்
சுத்த ரணசூர இரண்ணியன் மேவும்
சுர லீலா வதி வந்துதோன்றி னாளே. 31

திரை — தரு

வந்தாளே சிங்கார லீலாவதியும் வந்தாளே
நெற்றியில் செந்தூரத்தின்
திலகம் மின்னவே வந்தாளே
தண்டை வெண்டையஞ் சதங்கை
கலகலென்னவே சரச
தொண்டை வாய மிருத மதுரஞ் சலசலென்னவே
வந்தாளே சிங்கார லீலாவதியும் வந்தாளே. 32

தரு

மங்கையருக்கு ளபிமானி லீலாவதி
வந்தாளே யெசமானி
பங்கைய நறுமலர் வதன ஒய்யாரி
பனிமொழிப் பிரகலாதனைப் பெற்றிடுஞ் சிங்காரி
(மங்கை)

கற்பினுக்கு யருந்ததி ஈடுசெய்ய
கமலா வதிக்கே யிவள் சோடு
அற்புதமிகும் பொன்னா பரண விசாலி
அஷ்டலட்சுமி வாசம் யிஷ்ட பாக்கியசாலி (மங்கை)

நடைக்குள்ளே யிவளன்னப் பேடு — மணி
நாகப்படமோ மதன வீடு
தொடைக்குப் பசுமையிளம் கதலியுந் தோற்குமே
துடியிடைக்கிணை மின்னல் கொடிவந்து பார்க்குமே
(மங்கை)

நங்கையர்கள் கவுரி வீச வெகு
நயனத்துடனே நயம் பேச
சிங்காரமுடன் கொடி மங்கையர் விளக்கேற்ற
செயனிரணிய னிருநயன மணிபோல் வந்த
மங்கையர்க் குளபிமானி 33

விருத்தம்

அண்ணலே போற்றி போற்றி
அடியாளை யழைத்த சேதி
நண்ணியே யருள்வீ ரென்ன,
நாயகி நீயே கேளாய்
கண்மணி பிரக லாதன்
கல்விக ளோத வேண்டி
எண்ணினோ முனது சிந்தை
இயம்பென இயம்பு வாளே. 34

வசனம்

அகோ சரணம் சரணமைய்யா சுவாமி. என்னுடைய பிராண நாயகா! அடியாளை அழைப்பித்த காரியம் சொல்லுமையா சுவாமி.

அகோ வாரும் பெண்ணே லீலாவதியே! நம்முடைய குலபுத்திர சிகாமணியான பிரகலாதனைப் பள்ளிக் கனுப்பி வைக்க வேணும். ஆகையாலுன்னை யோசனை கேட்க அழைத்தோம் பெண்ணே.

விருத்தம்

தேவரீர் நினைத்த சொல்லும்
சிந்தையே சிந்தை யென்று
பாவையாள் மொழித லோடும்,
பரிந்து கஞ்சுகியைப் பார்த்து
தூவிய மறையோ னான
சுக்கி ராச்சாரி யாரைக்
கூவென, அவரும் வந்து
கொப்பென, தோன் றினாரே. 35

**வசனம்**

அகோ சரணம் சரணமய்யா சுவாமி. என்னுடைய பிராண நாயகா! தேவரீர் சித்தத்திலே எப்படியோ அப்படியே செப்புமையா சுவாமி.

அகோ வாரும் பிள்ளாய். தூதகஞ்சுகி! நம்முடைய குல குருவாகிய சுக்கிராச்சாரியாரை அழைப்பியும் பிள்ளாய்.

அப்படியே அழைத்து வருகிறேன் சுவாமி.

அந்தச் சமயத்திலே சுக்கிராச்சாரியார் அங்கே வருகிற விசித்திர அதவதான மெப்படி யென்றால்

**தரு** **ராகம் சங்கராபரணம்**

இரணிய நமோ நமோ நமா
இறைவா செய நமோ நமா
சிரபதி நமோ வென்றே
சுக்கிராச் சாரியர் தேன்றினார்.

தர்ப்பைப்புல் பௌத்திரமும்
தண்டுடன் கமண்டலமும்
சிரிப்பும் களிப்புமாக
சுக்கிராச்சாரியர் தோன்றினார்.

கமுக் கட்டில் பொத்தகமும்
கனக மணிக்குடையும்
தமுக்குத் திமுக்செனவே
தானவர் குருவந்து தோன்றினாரே.

பூங்காவி சோமன் கட்டி
புலித்தோ லாசனத் துடன்
பாங்காகவே ஒய்யார
பார்க்கரன் வந்து தோன்றினாரே.

விருத்தம்

அருந்தவ முனியை நோக்கி அருமணி புதல்வ னுக்கு
திருந்திய வேதத் தியானஞ் செப்புவீரென்று தன்பால்
இருந்த கஞ்சுகியைப் பார்த்து இப்பொழுதழைப்பா
யென்ன
பெருங்குணப் பிரக லாதன் பெருமையாய்த்
தோன்றினானே. 37

வசனம்

அஹோ வாருமையா சுக்கிராச்சாரியரே! நம்முடைய குல புத்திர சிகாமணியான பிரகலாதனுக்கு வேதஅத்தியானம் சொல்லுமையா சுவாமி.

அப்படியே மகாபாக்கியமையா இரணியேசுபரனே.

அடா வாடா தூதகஞ்சுகி. நம்முடைய குமாரனான பிரகலாதனை அழைத்து வாரும் பிள்ளாய்.

அப்படியே அழைத்து வருகிறேன். ஐயாசுவாமி.

அந்தச் சமயத்திலே பிரகலாதன் வருகிற விசித்திர அவதானமெப்படியென்றால்—

விருத்தம்

விண்ணவ ரெவரும் வேத வேதிய ரெவரும் வாழ
மண்ணவ ரெவரும் செய்த மாதவம்
வெளிவந்தாற்போல்
நண்ணு மெந்தனை என்னாளும் நரகில் விழாமல்
காத்த
அண்ணல்வேள் பிரகலாதன் ஆண்டவன்
தோன்றினானே. 38

**வசனம்**

அகோ முப்பத்து முக்கோடி தேவர்களும் நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகளும் சகல லோகத்தாரும் செய்த தவமானது உருக் கொண்டு வந்தாற்போல் அடியேனை நரகில் வீழாமல் காத்தருளிய அண்ணலாகிய பிரகலாத சுவாமி வருகிற விசித்திர அவதான மெப்படி என்றால்—

**தரு** **ராகம் மத்தியமாவதி**

வந்தான் பிரகலாதன் தந்தையர் முன்னே
வந்தான் பிரகலாதன்
வந்தான் பிரகலாதன் இந்திராதிபர் வேந்தன்
சிந்தாகுலம் போகவே விந்தையாகவே
(வந்தான்)

காலைப் பொழுதிலெழும் வால சூரியனைப்போல்
கதிர்மணி முடிமின்ன — அதன் மேல்
சந்திரனைப் போல விளங்கிய
வெண்குடை நிழல்துன்ன —
மன்னன் முன்னே வந்தான்
வச்சிர மழுத்திய பச்சைமரகத — மாலை
மார்பினிலே அலுங்க — பொன்
கச்சுடன் அரைமணி நட்சத்திரம் போல் மின்னி
கலகலென்றே குலுங்க புவிதுலங்க வந்தான்
மகர குண்டலங் காதில் தகதக வெனவே
மின்னு மதிக் கதிர்போலக் கொழிக்க — நல்ல
இதழ்பெருந் தோள்களில் நிகநிகவெனவே
இரணியன் செழிக்க புவி தழைக்க
தண்டைச் சதங்கைகள் மண்டிக் கலகலென்ன
தாமரைத் தாள் தனில் ஒலிக்க — நல்ல
குண்டு கடகங்கள் ரெண்டும் கைகள் தன்னில்
கொழுஞ்சுடர் போல சொலிக்க!
(வந்தான்)

அண்ட ரனைவருக்கும் பண்டமு தளித்திடும்
அரிபாதந் தனைக் கூறி உயர்
விண்டலத் தவரோடு மண்டலத்தவர் ஆசிர்
வாதம் சொல தேர் மீதில்

(வந்தான்)

தழைத்த வண்ணன் காலில் விழுந்து
எழுந்தாற்போல் சாமர மிருபாலும் போட
மழைவிளங்கிடு மேகம்போல் விளங்கும் புரவியேறி
மங்கையர் நடமாட கூட
—வந்தான் பிரகலாதன். 39

விருத்தம்

வந்திடும்போது தாயார்
மகிழ்வுட னெதிர்சென் றோடி
எந்தனா ருயிரே வாடா என்னிரு கண்ணே வாடா
சுந்திர மணியே வாடா சுரர்பதிக் கரசே வாடா
மைந்தனே வாடா மறைநூல் சுளோத வாடா. 40

வசனம்

இப்படியாக வருகிற மகனிடத்திலே ஓடி லீலாவதி யம்மாள் சொல்லுகிற விதமெப்படியென்றால்—

தரு ராகம் மத்தியமாவதி

பளளிக்கு வைக்க உங்களையர் அழைக்கிறார்
பாலகா நீவாடா பிரகலாதா!
தெள்ளித் தெளிந்த என் கண்மணியான
வினோதனே
செழிக்கு மன்பூங் குணமுந் தழைக்கும் பிரகலாதனே
(பள்ளிக்கு)

வாச மல்ரவ்னும் அரிசிதவு மயனும்
வசிஷ்ட ரகஸ்தியனும் சுதிஷ்ட புலத்தியனும்
காசிபனும் பரத்துவாச முனியான்
கற்றுக் கொண்டதினா லல்லோ
மெத்தப் பெரியவ ரானார் — (பள்ளிக்கு)

படிப்பு வார்த்தைகள் பேசும்—
துடிப்பு முனக்கு மேலும்
பார்க்கும் போது சேஷனும்
தோற்குமே யானாலும்
தொடுத்த வித்தையும் புத்திக்கு
எடுத்து சொல்லுவ தேதோ!

தொட்டுக் காட்டாத வித்தை
சொட்டுப் போட்டாலும் வாராதே (பள்ளிக்கு) 23

செல்வத்தில் பெருஞ்செல்வம் கல்விச் செல்வமே
யென்றும்
செப்பும் பெரியோர்மொழி தப்பல்லவே யென்றும்
சொல்வித்தையும் விசய வில்வித்தையும் நீமிக்க
சொன்னாலு மொருகுரு முன்னாக ஓதிவைக்க
— (பள்ளிக்கு)

பள்ளிக்கூ டத்திருந்து பிள்ளைகளுடன் நின்று
பாடமும் சொல்லிக்கொண்டு வீடது தன்னிற்சென்று
கிள்ளைக்குத் தனியஞ்சொல் வள்ளைக்காது நிரம்ப
கேட்க வேணுமென்றெண்ணி வேட்கையாகுது
ரொம்ப
பள்ளிக்கு வைக்க அழைக்கிறார் உங்களையர். 41

விருத்தம்

கருடவாகனம் மீதேறும் கருமுகில் மேனியான்தன்
திருவடியோத நாளும் சிந்தையிற் புனைந்தசெல்வன்
ஒருகுடை நிழலில் ஈரேழுலகமும் புரக்கும்
செங்கோல்
இரணியன் மலர்பொற் பாத மிறைஞ்சி
வாய்புதைத்து நின்றான். 42

தரு

வாடா பிரகலாதா — கண்மணியே — நீ
வாடா பிரகலாதா

வாடா பிரகலாதா தாடாநீ யொருமுத்தம்
ஓடா தேயினி விளை யாடாதே யிங்கே — சும்மா
(வாடா)

சட்டமணி மார்பிலே யிஷ்டமுட னணைத்துக்
கட்டிக்கொண்டு முத்தமிட்டுக் கொள்ளகிட்டே
(வாடா)

பேசும்பசுங்கிளி 'கூசுமழலை யுன்சொல்
நேசமுடனே கேட்க ஆசையா யிருக்குது (வாடா)

அந்தி கலகலென்ன — தொந்தி பளபளென்ன
எந்தன் மடிமே லேற மைந்தா யோடிக்கிட்டே. 43

வாடா பிரகலாதா கண்மணியே நீ — (வாடா)

விருத்தம்

நேசமுடன் தாயாரும் மகன்பா லோடி
நீள் நிதியே என்னிருகண் மணியே [யென்று
ஆசையுடன் வாரியெடுத்தணைத்து மோந்து
அரும்பவள வாய்முத்த மன்பா யுண்டு
வீசுபுகழ் இரணியன் கைக் கொடுக்க, வாங்கி
மேவுமடி மீதில் வைத்துக் களப கந்தம்
பூசிநறு மந்தார மாலை யாரம்
பூட்டினாள் மணிவாயமு தூட்டி னாளே. 44

விருத்தம்

பன்னு கஞ்சுகியே கேளாய் பாலகன்பிரக லாதன்
தன்னுடைத் தோழர்க்குந்தளகர்த்த மந்திரிமார்கள்
அன்னவர் புதல்வர்தம்மை யவனுடன் பள்ளிக்கூடம்
துன்னியே யோத வென்று துரிதமாய்அழைத்து
வாராய். 45

தரு

முத்துக்குச்சி கொன்றை துன்ன
மோர்கன மாலிகை மின்ன
பத்தரை மாற்றுப் பசும்பொன்
பணிக ளதுஅசைந் தாட
சுத்தி யரைமணி சூட்டி
சொர்ண தண்டை காலில் பூட்டி
சத்த வெண்டையந் தொனிக்க
தானவர் மைந்தர் தோன்றினாரே.

மண்ட லமும்விண் டலமும்
மற்று முள்ள பேருலகும்
உண்டருளும் பெரு மானை
உள்ள மதில் வைத்தருளும்
தொண்டனான பிரக லாதன்
தோழமை யாகவே கூடித்
தண்டமிழ் நூல்முறை யோத
தானவர் மைந்தர் தோன்றினாரே. 46

வசனம்

அந்தச் சமயத்திலே பஞ்சாங்க பட்டர் வருகிற அவதானமெப்படி யென்றால்

தரு

பொன்னிழைத்த குல்லா யிட்டு
    பூங்காவி சோமன் கட்டி
கொன்னிக் கொன்னிப் பேசிக்கொண்டு
    குந்துநடை நடந்து கொண்டு
மன்னும் காதில் குண்டலமும்
    வரிசை ருத்திராட்சத தரவடமும்
பன்னிய பஞ்சாங்கம் கொண்டு
    பங்காரு பட்டர் தோன்றினாரே. 47

வசனம்

சிரஞ்சீவி இரணியேசுபரா! சிரஞ்சீவி திதிஞ்ச ஸ்ரீமாப்புனோதி வாராகா யீஸ்வரிய வர்த்தனம் நட்சத்திரம் அர்த்தபாவம் யோகம் ரோக பாவம் நிவாரணம் கர்ண மரணம் சித்திஞ்ச பஞ்சாங்கம் பலமதிகம். இதுக்கு அர்த்த மெப்படி யென்றால் திதியைக் கேட்டால் பெண் சாதி சாவாள். வாரங்களுக்கு ஆயிசு நஷ்டம். நட்சத்திரம் அர்த்தபாபம். யோகங்களுக்கு ரோகம் வரும். கர்ணங்களுக்கு மரணம்வரும். இந்தப் பஞ்சாங்க பலன் மத்திமம். இந்தப் பிரகாரம் பஞ்சாங்கம் கேட்ட பிற்பாடு தம்முடைய குருவாகிய சுக்கிராச்சாரியாரைப் பார்த்து இரணிய மகாராசன் சொல்லுகிற விசித்திரமெப்படி யென்றால்—

தரு

உபதேசம் சொல்லுமையா சற்குருவே — நீ
    உபதேசம் சொல்லுமையா
அருண உதயத்தினில் அருமை மகனுக்கினி
    கருணைசெய் யுபதேசம் இரணிய நமோவென்று
        — (உபதேசம்)
ஆசார பாதத்தில் தேசமெல்லாம் விளங்கும்
    வாசமாய் பூசைசெய்ய நேசம தாகவே
        —உபதேசம் சொல்லுமையா. 48

### விருத்தம்

தகமைசேர் மைந்த ரோடே
    தனையனைக் கூட்டி விட்டு
மகிழ்வுடன் வெள்ளி பின்போய்
    வளமுட னோதென் றேவ
அகமகிழ்ந் தழைத்துக் கொண்டு
    அரும்பள்ளிக் கூடம் சேர்ந்து
மிகவுமே வெள்ளி யோனும்
    வேதநூ லோது வானே. 49

### வசனம்

அகோ வாருங்கோள் குழந்தைகளா! பிரகலாதனே வேதாகம சாஸ்திர புராணங்களெல்லாம் சுக்கிராச்சாரி! யாரிடத்திலே போய்வாசியும் பிள்ளாயென்று கூட்டிவிட, அப்படியே தானே சுக்கிராச்சாரியாரும் பிரகலாதனை அழைத்துக் கொண்டுபோய் பள்ளிக்கூடத்திலே வைத்து வேத அத்தியானம் சொல்லுகிற விதமெப்படி யென்றால்—

### தரு — ராகம் மோகனம்

நேமுகம் தப்பாதே — சீடர்களே
    நியமம் தப்பாதே
பிரமமு கூர்த்தத்தில் கிரமந் தப்பாமலே
    பிரியமாக சங்கற்பம் பண்ணிக்கோ
பிரம உறவுமுன் தகப்பனே
    பரிவா னென் றெண்ணிக்கோ சீடர்களே
— (நேமுகம்)

செப்பு முத்தரணியும் தும்பை மலரைப்போலே
    தினந்தோறும் புளியிட்டுக் கழுவும்
அம்புவி அனைத்துக்கும் தம்பிரான் தந்தையை
    அடிபணிந்தே அனுதினந்தொழும் சீடனே
— (நேமுகம்)

திட்டமதாகிய பட்டவர்த்தனையும்
தீர்க்கமாய்ப் பார்க்கவே சாத்து
பொட்டமான தோல்தன்னை யிட்டஆசனம்
போட்டுப் புகழ் கனகனைப் போற்றும் சீடனே
— (நேமுகம்)

வடக்கு முகமாகத் திடத்தோடிருந்து — கொண்டு
மறைகளைத் தப்பாம லோது
இடக்கை விட்டு நல்ல
நடக்கையாஇரணிய நமாவென்று சொல்இப்
போதுசீடனே
— (நேமுகம்) 50

வசனம்

அகோ அடா பிரகலாதனா, எழுந்திருந்து நம்மைப் பிரதட்சணம் செய்து கொண்டு கிழக்கு முகமாக இருகை கட்டிக்கோ வாயை மூடிக்கோ தலை குனிந்துகோ இரணிய நமாவென்று சொல்லுமடா பிரகலாதா வென்று சொல்லுகிற விசித்திர மெப்படியென்றால்.

தரு

குரு

இரணிய நமோவென்றெழுதும் — பிரகலாதா
இரணிய நமோ வென்றெழுதும்
மைந்தா யுந்தனை பெற்ற தந்தையிரணிய நமோ
முந்தி யெழுத வல்லோ வேணும்.

பிரகலாதன்

சிந்தை மகிழ்ந்தே அரிஅரி அரியோஅரி
முந்தி எழுதவல்லோ வேணும்

குரு

உச்சிதமாக இரணிய நமோ — பிரகலாதா
உன்னி எழுதல்லோ வேணும்

பிரகலாதன்

மச்சாவதாரஞ் செய்த அரிஅரி நமாவே
மச்சாவதாரஞ் செய்த அரிஅரி

குரு

தாறு மாறாகவே சொல்கிறாய் — இரணியநாமம்
தரணி எழுத வல்லோவேணும்

பிரகலாதன்

கூர்மாவ தாரம் செய்த அரிஅரியோ அரி
கூர்மாவதாரஞ் செய்த அரி அரி

குரு

இரணியநமோ வென மொழிய வேணும்

பிரகலாதன்

அரியோ அரியென மொழிய வேணும் 51

எண்சீர் விருத்தம்

இவ்வண்ண மைந்தனுக்கு நியமஞ் சொல்லி
எழுந்து தன்னைவலஞ் செய்து யிருகை நல்கி
மெய்வண்ண மான பொருளிர ணியநமா
வெழுத்ததனை மேன்மையுடன் விளம்பு கென்ன
அவ்வண்ணன் புலன் செய்தோன் தளர்ந்து கேட்டு
அரிஅரி யென்றே கையினால் காது மூடிச்
செவ்வண்ண மலர்க்கண்ணீர்த் ததும்ப நெஞ்சம்
சிந்திப்பான் மறைமுடிலை வந்திப் பானே. 52

**வசனம்**

அகோ அடா பிரகலாதா. எழுந்திருந்து நம்மைப் பிர தட்சணம் செய்து கொண்டு கிழக்கு முகமாய் இருகைக் கட்டிக்கோ வாய் மூடிக்கோ தலையை குனிந்துக்கோ இரணிய நமாவென்று சொல்லுமடா பிரகலாதனா வென்று சுக்கிராசாரியார் சொன்ன மாத்திரத்திலே அரி அரி யென்று இரண்டு கையினாலேயும் இரண்டு காதையும் மூடி செந்தாமரைக் கண்ணிலே ஆனந்த புட்பம் பொழிய புளகாங்கிதனாய் மன முருகி வேதாந்த முடிவிலே விளங்கா நின்ற அகண்ட பரிபூரண சச்சிதானந்த சொரூபமாய் விளங்கப்பட்ட தத்துவத்தை நாவினாலே வசனிக்கிற விதமெப்படி யென்றால்

**தரு** **புன்னாக வராளி**

நாராயணா அரியே அரி—அரி
நாராயணா அரியே
நாராயண மந்திரம் பாராயணம் செய்தால்
நமனும் வந்தணுகுமோ அமையுமிதுவே நல்ல
—நாராயணா

வித்தையும் புத்தியுஞ்சேரும் அஷ்டாட்சரம்
சித்தியும் பத்தியும் கூடும்
தத்துவப் பொருட்கெல்லாம் தலைமையாய்
விளங்கிடும்

நித்திய பரிபூரண நிமலனச்சுதானந்த நாராயண
சென்ம சாபல்ய மாகும்; முன்னால் செய்த
கர்மங்கள் புறம் போகும்.
தன்ம பரிபாலன் சகல நிஷ்களமான
சென்மய நிரஞ்சன் தேவதேவரட்சகா நாராயண
கருணைபொழி விலாசம் — ஈதறியாத
கசடருக்கு வெகுமோசம்
அருணன் கிரணன் சாட்சி; நாபிக் கமலமீது
தருநான் முகனையுந் தான்பெற்ற ரட்சகா!
நாராயண அரியே அரி

### விருத்தம்

இந்த வண்ணந் தலைமேல் கைகுவித்துப் போற்றி
இருகண்ணி லானந்த வெள்ளமாய்
நைந்துருகி நடுங்கி மயிர்புளகம் பொற்ப
நானிலத்தின் செயலறியா திருந்தான் பாலன்
அந்தணனுஞ் சிந்தை யலமருந்த ஏங்கி
அய்யய்யோ என்செய்வேனினிமே லென்று
மைந்தனே பிரகலாதனே யிந்த
வார்த்தைதனை மறந்திடாய் மறந்திடாயே. 54

### வசனம்

இப்படியாக அகப் பிரமாஞ்சலி பண்ணிக்கொண்டு இரண்டு கண்களிலும் ஆனந்த வெள்ளம் பெருக உலகத்தின் செயற்கை யறியாமல் ஏகச் சித்தனாயிருக்கிற பிரகலாத ஆழ்வாரைப் பார்த்து சுக்கிராச்சாரியார், அய்யய்யோ நான் என்ன செய்வேன் என்று புலம்பிச் சொல்லுகிற விதமெப்படி யென்றால்

### தரு புன்னாகவராளி

என்ன சொன்னாயடா பிள்ளாய் பிரகலாதா—நீ
ஏது சொன்னாயடா பிள்ளாய்
என்ன சொன்னாய் பிள்ளாய் துன்மதியாலின்று
உன்னையும் கெடுத்ததல்லா லென்னையும்
கெடுக்கவென்று — (என்ன)

சிவனயன் வேறுண்டோ உன் தந்தையல்லாமல்
தெய்வத்தின் கூறுமுண்டோ அவனைப்
பூசனை செய்யா
அரிபெயர் நீ சொன்னால் அய்யோ மோசம் மோசம்
செய்வதுண்டோ என்னால் — (என்ன)

மூவர்க்கும் மூலனவன்—பஞ்சகிருத்திய
தேவருக்கும் தேவனவன் காவல் செய்துலகத்தைக்
காக்கு மவனல்லாமல் கர்த்தன் தெய்வம்வேறுண்டோ
பத்தியுடன் சொல்லாமல் —(என்ன) 25

இரணிய மகராசன் யெவ்வுயிர்க்கும் தரணியில்
வெகுநேசன்
அருமறை முனிவரும் அமரரும் எப்போதும்
திருவடி தொழுவதுந் தெரியாதோ போதும் போதும்
என்ன சொன்னாயடா பிள்ளாய்!

### வெண்பா

இன்னவகை சொன்ன யெழிலார் தவமுனிவன்
தன்னைமுகம் பார்த்து, தலைமுனிவன்—என் உறுதி
தப்புவது முண்டோ சதுர்மறையா! கேளென்று
ஒப்புடனே சொல்வா னுணர்ந்து.

### வசனம்

இப்படிச் சொன்ன சுக்கிராச்சாரியாரைப் பார்த்து பிரகலாதன் சொல்லுகிற விதமெப்படி யென்றால்—

### தரு சுருட்டி

என்ன தப்பிதம் நான் சொன்னேன்
—சொன்னேனென்று
இடிச்சுக் கேட்கிறீ ரைய்யா
என்னையும் முன்னையும் இரணிய மகராசன்
தன்னையும் பிழைப்பிக்க உன்னிமொழிந்தேனல்லால்
—(என்ன)

அந்தணர் முனிவருந் சிந்தையி லனைவோரும்
அவரவர் நினைந்தது தவறாமல் கைதந்து
வந்து கூடும்பொருள் யெந்தனறிவா லாய்ந்து
வழக்கஞ் சொன்னேன்நல்லா யிருக்குமுண்டோ
சொல்லாய் —(என்ன)

உடலுக்குள் உயிர் போலே மடலுக்குள் மணம்போலே
உறைந்த பால் சுவைபோல சிறந்த எள்ளெண்ணெய்
போல
கடலுக்குள் திரைபோலே இடருற்ற உலகத்தில்
அகன்று நிறைந்திருந்த நலந்தனைவிட்டு வேறே
— (என்ன)

அஞ்சனமேனியும் கஞ்ச மலர் விழியும்
அணிந்த பீதாம்பரத் தணைந்த போர்வையும்கண்டு
தஞ்சமென்றவர்க்கெல்லாம் அஞ்சலென்றருள் செய்யும்
சரணனைப் பரமனைத் தருணனைவிட்டு - வேறே
என்ன தப்பிதம் நான் சொன்னேன்? 57

கலித்துறை

நித்தியமாம் பேரருள்யானே வுரைக்கும் நிலைவிடுத்து
பித்தர்கள்போல் பிதற்றுகின்றாயிந்தப் பேருலகில்
கர்த்தா இரணியன் தானன்றி வேறொன்று
கண்டதுண்டோ?
சற்றாகிலும் அறிவில்லாமல் மால்பெயர்
சாற்றினையே. 58

தரு

இந்த பாலப் பிராயத்திலே பிரகலாதா - உனக்கு
இந்தஅறி வெங்கே வந்தது பிரகலாதா
நல்லது சொல்லப் போனாலும் பிரகலாதா-இப்போ
பொல்லாங்கா விளையுமல்லோ பிரகலாதா
தப்பிதம் நீ சொன்னதல்லோ பிரகலாதா - இப்போ
தப்பிதமாகத் தோணுமே பிரகலாதா
அப்பனே என்கண்மணியே பிரகலாதா - உனக்
கொப்புறுவார்உண்டோ பிரகலாதா
உந்தன் குலகுரு நானே பிரகலாதா - உன்
தந்தை பெயர் சொல்லி வாழ்கின்றேன் பிரகலாதா.

காவதேசம் பார்த்தல்லோ பிரகலாதா - ஒரு
சீலமதை எண்ணவேணும் பிரகலாதா
அன்னையும் பிதாவுமல்லோ பிரகலாதா - அவ்வை
முன்னறி தெய்வமென்றாளே பிரகலாதா
தந்தைபேர் சொல்லாமலே பிரகலாதா - நீ
எந்தடவு வாழ்வுகொள்வாய் பிரகலாதா
என்ன சொன்னா லுனக்குப் பிரகலாதா - சற்றும்
பின்னு மறிவில்லையோ பிரகலாதா. 59

### விருத்தம்

அறியாத பருவத்தை உணர்வு கூறும்
அன்பாக போதித்தா ராரோ இந்த
குறியாகச் சொன்னவர்கள் முனிவர்தாமோ
குவலயத்தின் மறையவரோ, கூறுகென்ன—
நெறியான சுக்கிரபகவானே கேளாய்
நீயறியா தொன்றுமில்லை நிலைமையாக
வெறியாட லில்லாமல்... ...
... ...என்றுயியம் புவானே. 60

### வசனம்

அகோ வாரும் பிள்ளாய் பிரகலாதா. இந்த அறியாத பிராயத்திலே உனக்கு இந்தப் போதனை போதித்தவர்கள் முனியீஸ்பரர்களோ பிராமணர்களோ? எனக்குத் தெரியும்படியாய்ச் சொல்லும் பிள்ளாய்.

### விருத்தம்

என்தந்தை இரணியனார் தவங்கள் செய்ய
ஏகினா னதுசமயந் தன்னில் பார்த்து
இந்திரன்வந் தென்னுடைய தாயைக் கொண்டு
இருஞ்சிறையி லடைத்து வைத்தானந்த வேளை

வந்துமுனி நாரத னென்தாயைத் தேற்றும்
வகைபோலே எனக்குண்மை வகுத்துச் சொன்னான்
அந்தடவென் தாய்வயிற்றி லிருந்து கேட்ட
—தறைகிறேன்!
உனக்கென்று முறைசொல் வானே. 61

**வசனம்**

அகோ வாருமையா சுக்கிராச்சாரியாரே. என்னுடைய தகப்பனான இரணியன் மந்திரகிரி பருவதச் சாரலிலே தபசு செய்யப் போனான். அந்தச் சமயம் பார்த்து தேவேந்திரன் என்னுடைய தாயார் லீலாவதியம்மனைக் கொண்டு போய்ச் சிறையிலே உபாதை பண்ணுகிற சமயத்திலே அவ்விடத்திலே நாரத மாமுனி எழுந் தருளி வந்து என்னுடைய தாயார் மனதைத் தேத்தித் தெளிவிக்கிறவர்கள் போலே எனக்குபதேசம் பண்ணி னார். அந்த உபதேசப் பொருள் என்னுடைய தாயார் வயிற்றிலேயிருந்து கேட்டுக் கொண்டேன். அந்த மார்க்கம் உமக்குச் சொல்லுகிறேன் கேளும் என்று சொல்லத் திருவுளம் பற்றுகிறார்.

**தரு** **நவரோசி**

வித்தில்லா விளைவுண்டோ — அய்யா
வெள்ளியே நீர் கண்டதுண்டோ
தத்துவ குணத்திலே தன்னறிவது கண்டால்
கைத்தலந் தனிலுள்ள கனிபோலாருமே கண்டால்
தன்னுள்ளே உலகங்கள் தந்து — அது
தன்னுள்ளே தாங்குவான் வந்து
பின்னுமுன்னு மில்லான் போக்கு வரவு மில்லான்
பேச்சில்லா னேச்சில்லான் பெருமை சிறுமையில்லான்
(வித்தில்லா)

முப்பொருள் முப்பரமாகும் — அது
முக்கோண முச்சுடராகும் — அதை
ஒப்புட னெப்படி யப்படி யென்னுவோர்க்
கப்படி யப்படி யாகவே நண்ணுமே (வித்தில்)

ஒருவினை ஒருபயன் தருமோ — அந்த
அரியினை யல்லால் வேறு வருமோ
கருதிய பொருளினைக் காட்டுகின்றது அல்லால்
தருபயன் தனக்கினி சாட்சியுண்டோ சொல்லாய்
(வித்தில்)

கருமமும் கருமத்தின் பலனும் — நல்ல
தருமமும் தருமத்தின் பலனும் நல்ல
திருவளர் மணிமார்பன் பரமென்று
தேருவார் இருமை யென்றுரைத்திடும்
கடலையென் றேறுவார் (வித்தில்)

சொற்பொருளாகிய போதம் கண்டோர்க்கு
அற்புத மான வதீதம் தற்பர
சிற்பர தத்துவ மானது
நற்பரமே யப்பா நாரண னானது
வித்தில்லா விளைவுண்டோ அய்யா? 62

விருத்தம்

நன்மையே யுரைத்தீ ரய்யா
நாதனுன் தந்தை கேட்டால்
புன்மையும் விளையு மென்னப்
பொறுத்திடா தொறுத்தல் செய்வான்
வன்மையா யவன்பேர் சொல்லி
வணங்கலே யுண்மை யாகும்
தன்மைதான் செய்ய வேண்டும்
தகைமை நீயுரைத்தி டாயே. 63

### வசனம்

அகோ வாரும் பிள்ளாய், பிரகலாதனா. நீ சொன்ன காரியம் தற்புருவமாய் விளங்கா நின்ற பொருளே யல்லா மல் வேறே யொன்று மில்லை. இந்தப் பொருள் உன்னு டைய தந்தையான இரணியேசுபரன் கேட்டானே யானால் என்னைச் சிரசரக்கினைப் பண்ணிப் போடு வான். ஆகையா லென்னை வேண்டி நீ யவன் பேரைச் சொல்லி வணங்க வேணும் மற்றபடிக்கு நான் செய்ய வேண்டிய காரியம் நீரே சொல்லவேணு,மென்று கேட்ட தற்கு, பிரகலாதசுவாமி வாக்கிய மெப்படி யென்றால் —

### தரு — புன்னாகவராளி

இன்னமென்ன என்ன சொல்வேன் — என்சுவாமியை
மன்னும் வேத முடிவில்
மன்னும் நாரணன் மலர்ப் பொன்னு சரணமல்லால்
உன்னிடும் பொருளு முண்டோ — (இன்ன)

ஏதோ நான் சொல்வதெல்லாம் — சூதோ
என்னோ டுமக்கு வாதோ
பெரியோர்கள் முன்னீதோ — தெரியாதோ
சும்மா — (இன்ன)

கேளு மடியேனை யெந்த — நாளும் தயவாகவே
ஆளும் நாரணன் மலர் — தாளும் விட வேறுண்டோ
— (இன்ன)

நாராயணாய வமுதோ — ராமனுண்ட வாயில்
தீராவெவ்விட முண்ண வாராது உமக்கிப்போ
— (இன்ன)

வாருமென் தந்தை பெயர் நீருந்த வுத்தியஞ் செய்து
பாரும் பலனுண்டாமாகில் நேரும் நானுரைக்கிறேன்
— (இ

வாசம் யீதென்ன பரி யாசம் நீர் சொல்வதெல்லாம்
மோச மிப்படிக் கொத்த பாசமே யுமக்கிப்போ
— (இன்ன)

தில்லு மிரணியன்முன் சொல்லு மெந்தனை யவன்
வெல்லும் வகை நினைந்தால் பில்லும்
நெருப்பல்லவோ
இன்னமென்ன என்ன சொல்வேன். 64

விருத்தம்

சொன்ன சொல்படியே சொல்லித்
துரியத்தி லிருந்தான் பாலன்
இன்னது செயலோ நாமே
இரணியர்க் குரைப்போ மென்று
அன்னவன் வெள்ளி போன
தளவையிற் பிரக லாதன்
பன்னு தானவர் மைந்தர்க்குப்
பகுத்தறி வுரைக்கின் றானே. 65

வசனம்

அந்தச் சமயத்திலே பிரகலாதன் சொன்ன தத்துவங் கேட்டு இந்த அதிசயத்தை இரணியனுக்குச் சொல்ல வேணுமென்று சுக்கிராச்சாரியார் போன சமயத்திலே அப்போது தன்னுடனே கூட வாசிக்க வந்த ராட்சத பிள்ளைகளுக்குப் பிரகலாத சுவாமி போதனை செய்கிற விதமெப்படியென்றால் —

தரு ராகம் தோடி

நாராயண னென்னுங்கோள் — மைந்தர்களே
நாராயண னென்னுங்கோள்
நாராயண மந்திரம் சேராத செவித்துளை
தோராத பெரும்பாம்பு நேராயுறங்குந் துளை
— (நாராயண)

கேசவனே யென்னுங்கோள் — மைந்தர்களே
கேசவனே யென்னுங்கோள்
கேசவன் மலரடிப் பூசை செய்யாத கைகள்
வீசித் தரணியெங்கும் நேசித்த உலக்கைகள்
(கேசவனே)

சீதரனே என்னுங்கோள் — மைந்தர்களே
சீதரனே என்னுங் கோள்
சீத்ரன் திருநாமம் ஓதாத பெருநாக்கு
ஏதும் தெரியாத வூமை தோதகத் தடிநாக்கு
(சீதரனே)

மாதவனே என்னுங்கோள் — மைந்தர்களே
மாதவனே என்னுங் கோள்
மாதவன் கமலப்பொற் பாதம் தொழாத — தனி
யாது வரங்கொல்லைக் கோது மிராளித்தலை
(மாதவனே)

அச்சுதனே யென்னுங்கோள் — மைந்தர்களே
அச்சுதனே யென்னுங்கோள்
அச்சுதன் கோயிலை நச்சாதப் பெருங்கால்கள்
குச்சுவீட்டு நடுவே வச்சிடுந் தறிக்கால்கள்
(அச்சுதனே)

கோவிந்தனே யென்னுங்கோள் — மைந்தர்களே
கோவிந்தனே யென்னுங்கோள்
கோவிந்தன் திருவுரு மேவாத பெருங்கண்கள்
தாவும் மயிர்சிறகில் தாவிய பெருங்கண்கள்
(கோவிந்தனே)

மதுசூதனனென்னுங்கோள் — மைந்தர்களே
மதுசூதனனென்னுங்கோள்
மதுசூதனன் திருப்பணிக் குதவாத பேராக்கை
முதியவெள்ளைக் கடும் புதிய பழுதையாக்கை
(மதுசூதன)

தாமோதர னென்னுங்கோள் — மைந்தர்களே
தாமோதர னென்னுங் கோள்
தாமோதரன் தொண்டர்க் கெல்லாம் வாசம்
காமோ தர்க்கெல்லாம் எமனுலகில்வாழும்
தீமை நரகில் வாசம் (தாமோதரன்)

திருமாலே என்னுங்கோள் — மைந்தர்களே
திருமாலே என்னுங்கோள்
திருமால் நேயன் துளசியை மருமோர் நெடுமூச்சு
கருமான் துருத்தியிலே வரும்வாதைப் பெருமூச்சு
(திருமாலே)

அரிஅரி என்னுங்கோள் — மைந்தர்களே
அரிஅரி என்னுங்கோள்
அரிஅரி யென்றுருகாத மனக்கல்லு
கருமகனுலையிலே மருவிய அடைக்கல்லு
அரிஅரி என்னுங் கோள். 66

விருத்தம்

ஆவநீ ரிசைத்த மாற்றம்
செவியெல்லாம் குளிர்ந்தோ மிச்சொல்
நாவினால் நவிலும் போது
நயத்தமு துண்ட தானோம்
பாவமே போக்கு மாயன்
பரம தத்துவத்தைத் தப்பா
தாவலால் எனக்கே யின்னு
மருள்செய் யென்றுரை செய்தானே. 67

வசனம்

இப்படியாகப் பிரகலாத சுவாமி சொன்ன மகா மந்திரத்தைக் கேட்டுத் தயித்தியக் குமரர்கள் சொல்லு

கிறார்கள் : வாருமையா பிரகலாத! தேவரீர் சொன்ன திருவாக்கியப் பொருளைக் கேட்டுச் செவிகளெல்லாங் குளிர்ந்தோம். அல்லாமலும் நாவினாலே வசனிக்கிற போது தேவாமிர்தம் உண்டாலெப்படியோ அப்படி போலே யானோம். ஆகையினாலே மகா பாவங்களையே போக்கா நின்ற நாராயணனுடைய பரமதத்துவ ஞான போதனையை இன்னுமெங்களுக்குச் சொல்லவேணுமையா சுவாமி.

### விருத்தம்

பாலரே நானும் சொன்ன பரம்பொருள்
நிலைமையின்னும்
சாலவே விளம்புகென்னுந் தன்மையால்
மகிழ்ந்தே யானும்
சீலமே மிகுந்த மாயன் சிறந்த
சின்மயத்தின் வண்ண
ஏலவே கேண்மோ வென்று இயம்பவே
நயந்திட் டானே. 68

### வசனம்

அகோ வாருங்கோள் பாலரே. நான் சொன்ன மகா மந்திரத்தைக் கேட்டு விளங்கி யின்னமும் நாராயண னுடைய பரமதத்துவத்தைச் சொல்ல வேணுமென்று கேட்டபடியினாலே மகா சந்தோஷமாச்சுது. ஆகையால் அந்தப் பரம்பொருளாகிய சின்மயத்தின் பெருமையை எனக்குத் தெரிந்த மாத்திரம் சொல்லுகிறேன். நீங்கள் அனைவரும் பயபத்தியுடனே கேளுங்கோள் என்று பிரகலாத சுவாமி சொல்லுகிற வித மெப்படியென்றால்—

### தரு — பைரவி

திருவளர் மணிமார்பன்
தெளிவித்த தென்ன சொல்வேன் பாலரே — நான்
தெளிவித்த தென்ன சொல்வேன்
கருவில் நான்வளர்போது அருமையா யென்மீது

கருணை சுரந்தருள பெருகுந்தவ மேலே
உருவுகொண் டுலகினில் வருநாரதன் போலே
சுத்த விமல மான சுயஞ்சோதி ஒளிவாகி
நித்திய வெளியாகி நின்ற யூமை யெழுத்தாகி
முத்தியக் காரமாகி மோனப் பிரணவமாகி
சத்தியப் பிரணவ முதல் தங்குமெட் டெழுத்தாகி
(திருவளர்)

அரிவிந்து நாதமாய் அறிவாய் விளங்குநேரம்
திருவாய் எங்கும் விளங்கும் செயல்
கேளும் விவகாரம்
புரியுளமூல மோங்காரம் புகழும் மூல மந்தாரம்
துரிய லிங்க மகாரம் சுழித்த உன்னதிகாரம்
வழியு மதுசிகாரம் வளர்சுத்தி வகாரம்
புரியு மாக்கினை யகாரம் புணரு மசிர சிகாரம்
(திருவளர்)

அபரி சின்னம தாகி அசங்க பூரணமாகி
விபரீத வுருவாகி விமலஅகண்ட மாகி
சுபம்சுபம தாகித் தொகுத்த வுட்புறமாகி
உன்பய காரணம தாகி உணராரி யுருவூாகி
கபட நாடக சூஸ்திர வேடதாரி நான்
அதட்டித ஞான விபகாரி
தபமெய்ஞ் ஞானியர் களிக்கும் கிருபைவாரி
அபம் செய்யவோர் மனத்தகலும் மெய்முராரி
(திருவளர்)

பாதம் பாதளமாகும் பைம்பொன்முடியே வானம்
ஆதவன் மதிவன்னி யருள்சேர் திருநயனம்
சீத வாருதியெல்லாம் செல்வனாவின் பானம்
வாதமெல்லாம் சுவாசமா மேரோ நிதானம்
ஓது மால்வரை எலும்பதாயினும் மன்னு

மீதுலாவிய விடுவெண் பல்லும் மின்னும்
மாதிரஞ் செவியாக மறை பன்னும்
ஆதி நாரணன் சிவரூப னென்னும்
—திருவளர் மணி மார்பன். 69

விருத்தம்

முன்னமே வேத மோதும்
முறையெலா முணர்ந்த மைந்தன்
தன்னுள மகிழ்ச்சி பொங்க
சாற்றியே யிருந்தா னப்பால்
அன்னவன் வெள்ளி யோடி
அய்யனே அகிலம் போற்று
மன்னனே புதுமை யொன்று
வழுத்துவன் கேளும் நீரே. 70

வசனம்

அந்தச் சமயத்திலே பிரகலாதன் சொன்ன தத்துவங் கேட்டுப் பயந்து இரணியன் சமுகத்திலே சுக்கிராச் சாரியார் போய்ச் சொல்லுகிற விசித்திர மெப்படி யென்றால்-

ரூரு கேதாரகௌளை

அய்யா இரணியேசா — ஒரு அதிசயத்தைக் கேளாய்
மெய்யோ அதுபொய்யோ அது வினையன் கண்ட
கனவோ (அய்யா)

விண்ணாடரும் மண்ணாடரும் வேதப்பொருளும்பகரும்
பண்ணான மறைசொன்னேன் உந்தன் பாலன்
பகர்ந்திலனே (அய்யா)

என்னோ அவன் மனத்தாலொன்று யிசைத்தானதனு
வசைத்தான்
சொன்னா லெந்தன் நாவும் வெந்து சுடுமே நரகிடுமே
(அய்யா)

ஏதென்று சொல்வேன் முடிவுனக்கோ அவன்
தனக்கோ
தீதென்றிது சொன்னாலவன் றோன்பதில் கூறான்
(அய்யா)

அண்டபகிரண்டங்களும் ஆண்டாய் புகழ்ப்பூண்டாய்
கண்டுன் மகன் சொன்னாலப்போ காணும் பொய்
மெய்தோணும்
அய்யா இரணியேசா 71

விருத்தம்

அப்படி வெள்ளிகூற அனல்விழி பெருக நோக்கி
ஒப்பிக் கஞ்சுகியைப் பார்த்து ஓடியிக்கணமே சென்று
தப்பிலா பிரகலாதன் தனைக்கொண்டு வருவாயென்று
செப்பவே யவனும் சென்று
செயமுட னழைக்கின்றானே. 72

வசனம்

அகோ வாரும் பிள்ளாய் தூதகஞ்சுகி. நம்முடைய குமாரனானப் பிரகலாதனை அழைத்து வாரும் பிள்ளாய்.

அப்படியே அழைத்து வருகிறேன் சுவாமி.

அகோ வாருமையா பிரகலாதரே! உன் தந்தையான இரணியேசுவரன் உன்னை அழைத்து வரச் சொன்னாரையா சுவாமி.

அந்தச் சமயத்திலே பிரகலாதன் சொல்லுகிற விதமெப்படி யென்றால்—

தரு

மன்னர் மன்னரான தந்தை
    மைந்தனென்ன சொன்னா னென்று
என்னை ஏன் அழைக்கிறாரே
    மன்னரான தந்தை முன்னே
வாத்தியாரும் போய் நின்று
    என்னவென்று சொல்லிப் போனாரோ
—மன்னர்

கூட விளையாடும் பிள்ளை
    சோடு பிரிந்ததே யென்று
வேடிக்கையாக அழைக்கிறாரோ —மன்னர்

பாவி யுலகாளும் தந்தை
    படிக்கிலை யென்று சொல்லி
ஆவியில் துயர மானாரோ —மன்னர்

அண்டருல காளும் தந்தை
    தொண்டனா ருரைத்த மொழி
தண்டனை செய்ய அழைக்கிறாரோ?
—மன்னர்

ஆதியான் மூவெழுத்தை
    ஓதினே னிருதயத்தில்
அன்பாக நம்பினாரோ
—மன்னரான தந்தை 73

விருத்தம்

வந்தடி பணிந்துநின்ற மகன்தனை யெடுத்துகொண்டு
தன்திரு மார்பை மாரைத் தழுவியே மடியில் வைத்து
அந்தணர் கேட்கநீயும் அவனையே முனிந்து பொல்லா
நிந்தனை யுரைக்க லாமோ நீயென்று சொல்லுவாயே.

வசனம்

அந்தச் சமயத்திலே பிரகலாதன் தகப்பனிடத்திலே வந்து தெண்டம்பண்ணிக் கைகட்டிக்கொண்டு நிற்கிற குழந்தையை எடுத்து, மார்பிலே அணைத்து முத்தமிட்டுக் கொண்டு முகத்தின் வேர்வையைத் துடைத்து, மடியின் மீதிலே வைத்துக்கொண்டு, அப்பா பிரகலாதா! சுக்கிராச் சாரியார் சொன்ன உபதேசத்துக்கு நீ கோவித்துக் கொண்டு சொன்ன சமாச்சாரம் சொல்லும் பிள்ளாய்.

நொண்டி — தன் தன் தத தானா தன்தானா

சுக்கிராச்சாரிய ருபதேசம் சொன்னதுக்கு
நிந்தனைகள் என்னத்தைச் சொன்னாய்
அக்கிரமம் சொன்னா யென்றான் — உன்
கீர்த்திக் கிழிவா மென்றான்
மெத்த இழிவா மென்றான்

நீ சொன்னப்பெரும் பிழையால் சுக்கிரனும்
நெஞ்சையுருகு தென்று பஞ்சரிக்கிறான்
யோசனை வேறில்லை யென்றான் கெடுதலை
உனக்கோ மகனுக்குப்பின் தனக்கே வென்றான் அது
வாய்பேச வொண்ணா தென்றான்

உனக்கோ மகனுக்குப் — பின்
தனக்கோ வென்றான் — அது
வாய்பேச வொண்ணா தென்றான்.

நரகம் வந்து போமென்றான்
நாவுவெந்து போமென்றான்
மாயவஞ்சனை ஈதென்றான்

அவுணர்கள் வாழ்வெல்லாம் — உன்
மகனாலே தாழ்வா மென்றான்
புத்திமான் நீ யென்றிருந்தேன் — நல்ல
புண்ணியவா னென்றிருந்தேனே.

எண்ணி எண்ணியே
பத்தியும் பாவனையும் — மகன் போகப்
பாக்கியவா னென்றிருந்தேனே
யோக்கிய முடனே குருமொழி
இகழ்ந்தோர்கள் அவர்கள்
தங்கள் லட்சியம் என்றிரும் சொல்லட்சியமே
அருமையென் கண்மணியாவர்க்கும்
அன்புவித் தருணமுள்ள யின்பவானே
தப்பிதம் நீ சொல்லமாட்டாய் சுக்கிரன்சொல்
சத்தியமல்ல வென்றான் புத்தியிலுண்டு

அப்படி நீ சொல்வதைச் சொன்னால்
அதையறிந்து நான் அவரைவதை செய்கிறேன்
சொல்லடா பிரகலாதா. 75

விருத்தம்

பெரியவர் வார்த்தை கேளாய்
 பெரும்பிழை யுடையோ ராதி
நரகமது தனிலே வீழ்ந்து
 நலிகுவ துண்மை யன்றோ
குருமொழி யிகழ்ந்தோர் பாவங்
 கூறவும் எளிதோ ஐயா
திருகு நீ சொன்ன சேதி
 செப்பெனச் செப்பு வானே. 76

வசனம்

அடா வாடா பிரகலாதனா! தனக்கு ஒரு வருஷமாகட்டும்; ஒரு மாசமாகட்டும்; ஒரு சாமமாகட்டும்; ஒரு நாழிகையாகட்டும். தனக்கு மூத்தவர்களுடைய வார்த்தை கேளாத பெரும் பிழை உடையோர்கள் உரவாதி நரகத்திலே வீழ்வார்களென்று சொல்லும் பழமொழியானது பொய்யாமோ? அப்படியிருக்கவம்சபரம்பரையாய் திவ்யக் கியான உபதேசம் செய்யாநின்ற ஒருவார்த்தை யிகழ்ந்த பாவியர்களுடைய பாபமும் நரகமும் சொல்லு

கிறதுக்கு யாவர்களாலேயும் முடியாது. அப்படி நீசொன்ன நிந்தனையை எனக்குத் தெரியும்படியாய்ச் சொல்லென்று கேட்டதற்குச் சொல்லுகிற விசித்திரம் எப்படி என்றால்—

தரு ராகம் காம்போதி

என்ன சென்மம் சென்மம் அய்யா—இது
எடுத்ததே கன்மம்
தன்மமென்றும் பாவமென்றும் அய்யா — இது
வன்மமறியாதே (என்ன)

ஆணவத்தின் மலக்காடு — அதிலும் புவனமாடு
வேணுமட்டுந் துள்ளாடு — அய்யா இது
மூன்றாசை மேலெண்ணும் — அய்யா இது
மூர்க்க மானதை நண்ணும்
தான்தானே மனதென்றும் — அய்யா இது
தாழ்வானதைப் பண்ணும் (என்ன)

புன்மை எதுவுந் தனியா — அய்யா இது
பொறுமை எள்ளள வணியா
தன்மை சிறிதுங் கனியா — அய்யா சுவாமி
நாரணனைப் பணியா
தென்ன சென்மம் சென்மம் அய்யா இது 77

விருத்தம்

பருவம் ஐந்தான மைந்தன்
பகர்ந்த தத்துவத்தைக் கேட்டு
எரியில் நெய்கவிழ்தாற் போலே
இருஞ்சினந் தலைக்கொண் டேறி
தரணி யீரேழு மெந்தன்
தாள் தொழுவதுவே யல்லால்
அரியவன் பெயரை யாரோ
அறிவித்தார் உரைசெய் வாயே. 78

வசனம்

அஞ்சு பிராயமான பிரகலாதன் சொன்ன தத்துவம் கேட்டு அக்கினியிலே நெய்யைக் கொட்டினா லெப்படி யோ அப்படிக் கோபமானது தலைக்கொண்டு, அடா பிள் ளாய். பதினாலு லோகமும் என்னைத் தெய்வமாகக் கொண்டாடி வருகையிலே எனக்கு சத்துருவான அரியான வன் பெயரை உனக்குச் சொன்னவர்கள் யாரோ வென்று இரணியன் பின்னும் சொல்லுகிறவித மெப்படியென்றால்,

தரு — ஆனந்தபைரவி

இப்படிக் கொத்த பொல்லாத
தப்புத் தண்டைகள் செய்தால் — எந்தன்
கோபம் பொல்லாதே மைந்தாவே
எப்புவியுந் திசையும் ஒப்புடனே போற்றி
ஏத்துவ தெனையல்லால் வாழ்த்துதலுமுண்டோ
கீர்த்தி (இப்படி)

எனக்கு வந்திடும் பழி யுனக்கது இல்லையோ
ஈன புத்தி யுனக்கு தானது இல்லையோ
சினக்கும் அரியைக் கொல்ல எனக்கென்ன
தொல்லையோ
செகத்தை யுண்பதோ சோறுவைத் துண்கிலையோ.
(இப்படி)

மெத்த மெத்தவே கல்விகற்று கற்று சுற்றாதே
வீணான வீணுக்குநீ வாணாளை மாய்க்காதே
பெற்ற தகப்பனுடன் கற்ற வித்தை யோதாதே
பேச்சும் உன்னடத்தையும் சீ போடாயிப்போதே.
(இப்படி)

மண்ணும்வெண் ணையும் வாரியுண்ணு வாய்
ரோம்பி
வளர்ந்த வயிர மார்பைப் பிளந்தானே மாயன்
வெம்பி
எண்ணுமென் குலத்தோரை கொன்றவன் பேரை
நம்பி
ஏனோ நீ பினாத்துகிறாய் மானமில்லையோ தம்பி!

விருத்தம்

பேதை பிள்ளைநீ பிதற்றுதல் பொறுத்தனன்
பெயர்த்து
மோதி வார்த்தைக ளின்னய விளம்பலை முனிவன்
யாதுசொல்லினன் யவையவை யிதமெனவே யெண்ணி
ஓதி யோதுமென் றுரைத்தவர்க் கெதிர்மொழி
யுரைப்பான். 80

வசனம்

அகோ அடாப் பிரகலாதனா! நீயறியாத சிறுபிள்ளை யான படியினாலே நீசெய்த குறை யெல்லாம் பொறுத்துக் கொண்டேன். ஆனாலுமென்ன. இப்பவும் சுக்கிராச் சாரியார் என்ன சொல்லுகிறாரோ அந்தப் பிரகாரம் சொல்லிப் படித்துக் கொண்டு வாரும் பிள்ளாய் என்று சொன்ன தகப்பனைப் பார்த்து பிரகலாதன் சொல்லு கிறான்.

விருத்தம்

பிறவியாங் கடலில் வீழ்ந்து பேதுரு மவற்கட்
கெல்லாம்
திறமுள கப்ப 'லாகிச்சீர் முற்றிக் கரைமேற் சேர்க்கும்
துறவு மாதவர் வேதத்தின் சொல்லு மெய்ப்
பொருளின் வண்மை
அறிவுடன் கேட்டா யானால் அறைகுவே னிலைமை
தானே. 81

வசனம்

அகோ பிதாவாகிய சுவாமியே. பிறவிக் கடலில் விழ்ந்து தத்தளிக்கப்படா நின்ற பேருக்கு ஓடம் போலே தாங்கி இந்தப் பொருளானது முத்தியென்னுங் கரை மேலே சேர்க்கா நின்றதைசய தன்னியமான பதத்தை இன்னுஞ் சொல்லுகிறேன் கேளுமையா சுவாமி.

தரு ராகம் காம்போதி

கர்மங்கள் பெறுவதுந் தருவதும் வருவதும்
தந்தையே தந்தையே — அது
கடந்த கால பேரின்பங்க ளடைந்து வருவது
தந்தையே தந்தையே

ஓமங்க ளந்தணர் நேமம் புரிவதும்
தந்தையே தந்தையே — அது
ஓரெழுத்தின் பொருள் நாராயணமல்லோ
தந்தையே தந்தையே

நீரும் நிலனும் நெருப்பு மாருதமும்—
தந்தையே தந்தையே — அது
நின்றது சென்றது யீன்றது மன்றதுந்
தந்தையே தந்தையே

மூவற்குந் தேவற்கும் மூப்பொருளாமே
தந்தையே தந்தையே — கன
முத்தியும் சித்தியும் பத்தியும் தருவது
தந்தையே தந்தையே

ஒவ்வொரு காட்சியும் மாட்சியும்
—தாட்சியும் தந்தையே தந்தையே — அது
ஓரெழுத்தின் பொருள் நாராயண
மல்லோ தந்தையே தந்தையே!
மண்ணுக்குள் விண்ணுக்குள் என்னுக்குள்
உன்னுக்குள்
தந்தையே தந்தையே — இன்ன

மற்றெங்கு சுற்றெங்கு முற்றப் பரஞ்சுடர்
தந்தையே தந்தையே
ஒன்றுக்கு ளொன்றாகி நண்ணிய மெய்ப்பொருள்
தந்தையே தந்தையே — அது

ஓரெழுத்தின் பொருள் நாராயண மல்லோ
தந்தையே தந்தையே
ஒல்கி எள் எண்ணெய்போல் நின்றது மாயவன்
தந்தையே தந்தையே — அது
ஓரெழுத்தின் பொருள் நாராயண மல்லோ
தந்தையே தந்தையே

வேதப் பொருளாய் விளங்கும் பொருளது
தந்தையே தந்தையே — சொல்ல
வேணுமோ தோணுமோ காணுமோ என்னாலே
தந்தையே தந்தையே

ஓதப் பிரமன் பரமனாகுமோ
தந்தையே தந்தையே அது
ஓரெழுத்தின் பொருள் நாராயண மல்லோ
தந்தையே தந்தையே

ஆதியு மாகி அனாதியு மானது
தந்தையே தந்தையே — பின்னும்
அடியு முடியு நடுவுமில்லாதது
தந்தையே தந்தையே

ஓதும் பொருட்கெல்லாம் சாதகமானது
தந்லதையே தந்தையே — அது
ஓரெழுத்தின் பொருள் நாராயண மல்லோ
தந்தையே தந்தையே

ஆணவ மாய்கைக் குழியி லழுந்தியே
　　தந்தையே தந்தையே — இத்தை
அறியாமல் குறியாமல் வெறியாடுராய்ச் — சும்மா
　　தந்தையே தந்தையே

ஊன்றி உனக்குள்ளே தோணுமே பார்த்தக்கால்
　　தந்தையே தந்தையே — அது
ஓரெழுத்தின் பொருள் நாராயண மல்லோ
　　தந்தையே தந்தையே

நீரிற்கு மிழிநிலை யில்லா காயத்தைத்
　　தந்தையே தந்தையே — இதை
நிசமென்று எண்ணியே வசை பூணலாகுமோ
　　தந்தையே தந்தையே

ஓரும்பொருளும் மணமும் குணமுங்கேள்
　　தந்தையே தந்தையே — அது
ஓரெழுத்தின் பொருள் நாராயண மல்லோ
　　தந்தையே தந்தையே.

விருத்தம்

அனல்வழிந் தொழுகும் கண்ணான் அவ்வுரை
　　　　　　　　　　கேட்டு நெஞ்சிற்
சினமது முதிர மீசை துடித்திட
　　　　　　　　　　பிறைவெண்பல்லா
லிணமணி யுதட்டைத் தின்னும்இடியினும்
　　　　　　　　　　வலியச் சொல்லால்
மனனிலை மகனைநோக்கி வகுத்திட்டான்
　　　　　　　　　　தொகுத்திட் டானே. 83

வசனம்

அகோ இப்படி சொன்ன மகனைப் பார்த்து கண்ணிலே அக்கினி பறக்க மீசை படபடவென்று துடிக்க பல்லினாலே உதட்டைக் கடித்துக் கொள்ளுகிறபோது

அந்தப் பல்லழுந்தி உதட்டிலே இருந்து பெருகுகிற ரத்த பானம் பன்றி இடிஇடித்தாற்போலே ஆக்கிரமிச்சு மகா கோபம் பிரவேசிச்சுத் தன் மகனைப் பார்த்துச் சொல்லு கிறவிதம் எப்படி யென்றால்—

தரு

இரணியன்

ஆரடா வுனக்கிந்த — போதனை செய்தவர்
நேராக யெனக்குநீ நிகழ்த்துவாய் — மைந்தா

பிரகலாதன்

நிகழ்த்தி னாலும்மென்ன நீஎன்ன அறியாயோ
அகத்தினிற் குடிகொண்ட — அரும்பொருள்
எந்தாய்

இரணியன்

அரும்பொரு ளாவதும் — பெரும் பொருளாவதும்
தரும்பொருள் யானன்றி — தானுண்டோ மைந்தா.

பிரகலாதன்

தானுண்டோ வென்றாயே — சதுர்மறை பரவிய
ஆனந்த நாரணன் — அமலன்காண் எந்தாய்

இரணியன்

நாரணன் நாதனே — ஆனாக்கால் தம்பியை
கோரவெம் பன்றியாய்க் — கொல்வானோ
மைந்தா?

பிரகலாதன்

கொல்லானோ பொல்லாத — பாதகரைக் கண்டால்
வெல்லாமல் விடுவானோ — விமலன்கா ணெந்தாய்

**இரணியன்**

விமல னானவனுக்கு — மெய்யினில் பயமுண்டோ
உமிழ்திரைக் கடலினில் — ஒளிவானோ மைந்தா?

**பிரகலாதன்**

கடலினு முள்ளவன் — காசினி தனிலுமுள்ள
உடலினு முள்ளவன் — ஒருவன்கா ணெந்தாய்

**இரணியன்**

ஒருவ னென்றுரைத்தாயே — ஒருவர்மேல்
—பகையென்ன
ஒருவர் மேலுறவென்ன — உகந்துசொல் மைந்தா?

**பிரகலாதன்**

உகந்தென்ன சொல்வது — உண்மை யறியாமல்
அகந்தனி லெண்ணுவோர்க்கு — அவன் எமன்
எந்தாய்

**இரணியன்**

எமனவ னென்றாயே — எமனையும் கொன்றுநான்
அமையுஞ் சிரமுடிப்பேன் — அறிந்துபார் மைந்தா!

**பிரகலாதன்**

அறிந்தென்ன பார்ப்பது — அவனைநீ கொல்வாயோ
செறிந்துன்னைக் கொல்வானே — தெரியாதோ
யெந்தாய்!

**இரணியன்**

தெரியாதோ ஆனாக்கால் — சிர்கருட னுடனே
அரியவன் பதுங்கினது — அறியாயோ மைந்தா

**பிரகலாதன்**

பதுங்குவதுஞ் சிங்கம் — பாய்ச்சலுக் கிடமல்லோ
ஒதுங்கிப் பிழைப்பதற் — கொண்ணாதோ வெந்தாய்

**இரணியன்**

ஒன்னாதென் றெண்ணாதே — விண்ணும் மண்ணுல
கெல்லாம் கண்மணியே நான்காத்தேன் மைந்தா.

**பிரகலாதன்**

காத்தது முன்னவன் — கருணையி னாலல்லோ
ஏத்தியே நீவாழ்த — லின்பங்காண் எந்தாய். 84

**விருத்தம்**

ஒருமையா யுரைத்தபோது உள்ளெழுஞ் சீற்றவேந்து
இருநிலங் கரிந்து தீயஏழேழு உலகம் அஞ்ச
அருமையென் றம்பிதன்னை யாருயிர் கொண்டான் பேரை
உரை செய்ய வென்றோயானும் உன்னையே பெற்றேனென்றான் 85

என்றிடித் துரைத்து தன்பால் இருந்த கஞ்சுகியைப் பார்த்து
ஒன்றிய வுடலிற் புண்ணை உகந்தறுத் தெறிவார் போலக்
கொன்றிட வேணுமிந்தக் கொடியனென் குலத்துக் காகான்
இன்றுநீ மல்லர்தம்மை இக்கணத் தழைத்து வாராய். 86

வசனம்

அந்தச் சமயத்திலே மல்லர்கள் வருகிற விசித்திர அவதான மெய்ப்படியென்றால்

தரு

மல்லர் வந்தாரே — கிங்கர
மல்லர் வந்தாரே
தொல்லுல கெங்கணும் — வல்லமை கொண்டிடும்
எல்லாரும்பணி இரணியன் முன்னே — மல்லர்

காலில் விருது வண்டையமிட்டு
கருக்கச்சையுஞ் சல்லடந் தொட்டு
வேல்மழு சூலம் வாள்களும் பிடித்து
விழித்து தெளித்து யுதட்டைக் கடித்து — மல்லர்

நெறித்த குஞ்சியும் செம்பட்டை மயிரும்
நெற்றி விசாலமும் நத்திய நடையும்
கருத்த மீசையும் முருக்கி வெருட்டிக்
கண்டவர் தங்களைத் துண்டம்செய்வார் போலே
— மல்லர்

இடித்த பேச்சும் வெடித்த சிரிப்பும்
இருட்டைக் குழைத்துத் திரட்டு மேனியும்
பிடித்து மேகத்தைப் பிழிந்து சலத்தைக்
குடித்துக் குழைத்து தடித்து பெருத்த — மல்லர் 87

விருத்தம்

மல்லர்கள் வணங்கிநின்று மன்னவா போற்றி
போற்றி
எல்லொழி மார்பா போற்றி இரணிய வேந்தா
போற்றி
வல்லமை யாலே யெம்மை வரவழைத்திட்ட சேதி
சொல்லுவீ ரென்று கேட்க சுராந்தகன் சொல்லு
வானே. 88

தரு குணகல்யாணி

மல்லரே கேளும் — சொல்லுகிறேன்
மல்லரே கேளும்
மல்லரே நகத்தாலே சல்லடைக் கண்போலே
சில்லிச் சில்லியாகவே கொல்லுங்கோள்.

குண்டு கட்டாய் மெத்தக்கட்டியே — மயிர்
கொடுமணி கயிற்றாலே கட்டியே — போட்டுத்
துண்டு துண்டாய் வாளால் வெட்டியே — இவனை
சேரரியுண்ணுங் கோளென்ன அட்டியே
— மல்லரே

காற்றாடி போலவே சுற்றுங்கோ ளிவன்
கால்வாரி நிலத்தோடே எற்றுங் கோள்
கோத்து கோத்து வேலாலே கொத்துங்கோள்
கொத்திக் குடலைப்பிடுங்கிக் கோப முற்றுங்கோள்
— மல்லரே

என்மகனானா லென்ன வேணுமோ — இனி
எனக்கிவன் மேலன்பு தோணுமோ
துன்மதியா லென்ன காணுமோ — பையன்
தோதக மதி யெல்லாம் பூணுமோ
— மல்லரே கேளும்

விருத்தம்

இந்த வகைசொல்லி மல்லர்கையி லீந்தான்
எழில்லீலா வதியம்மன் காதில் கேட்டு
கந்த நறுங்குழல் சொற்சுலைகள் சோரக்
கண்ணீர் வெள்ளம் பெருகக் கடுகவோடி
வந்துலீலாவதி யம்மன் மலைபோல் வீழ்ந்து
மன்னவனே மண்டலங்கள் மதிக்க வாழும்
சுந்தரனே சிசுவதைகள் செய்வா ருண்டோ
தோஷ மிதென்றே யழுது சொல்லுவாளே. 90

தரு — சிந்து பைரவி

இந்த வுலகத்தில் — இந்தக் கொடுமைகள்
ஏற்குமோ என் சுவாமி — பெற்ற
மைந்தனைக் கொன்று — நிந்தனை செய்வது
மார்க்கமோ யென்சுவாமி

இன்மைப் பழிகளும் — நன்மை நரகமும்
ஏற்குமோ யென்சுவாமி — இந்த
மும்மை யுலகத்தின் — நன்மை திரும்பி
முறைகெடு மென் சுவாமி

பெற்றக் குழந்தை மேல் — இத்தனைக்
கோபம் பெருகுமோ யென்சுவாமி — என்ன
குற்றங்கள் செய்தாலும் — பெற்றோர்கள்
பொறுத்துளங் கொள்வார்க ளென்சுவாமி

பல்லு விழுந் தின்னம் நல்வாய் முளையாத
பாலக னென்சுவாமி — இப்பக்
கொல்ல நினைந்திந்த —மல்லர்க்கை ஈவது
கொடுமைகளென் சுவாமி

மண்டலத் தெல்லோருங் — கொண்டாடச் செங்கோல்
மருவினீர் என்சுவாமி — இப்பக்
கண்டவ ரெல்லோருந் — திண்டாட்டம் சொல்வது
கருமமோ யென்சுவாமி

சொன்னசொல் கேட்கவும் — இன்னுந் தெரியாத
சிறுபிள்ளை யென்சுவாமி — அது
சொன்னதை தாய் தந்தை நன்மையென் றோர்வது
சுகிர்தமா யென்சுவாமி

மக்கள் மெய்தீண்ட — லுடற்கினியதாகி
வருமே யென்சுவாமி — அது
சொற்கேட்க வின்பஞ் — செவிக்கென்று வேதமுஞ்
சொல்லுமே என்சுவாமி

நீதி விளங்கிய — வேதன்குலம்
வந்ததே யென்சுவாமி — இந்தத்
தோதகஞ் சேய்வது — பாதகமென்பது
தோணுமோ வென்சுவாமி. 91

**விருத்தம்**

ஆரடி யிந்தமொழி சொன்னாயோடி
அன்பான நீயுமெனக்காகா யோடி
பாரடி யிவ்வுலகம் பதினா லுந்தான்
பகவானென்றெனைப் பணிதல் பாராயோடி
பேருள யென்றம்பி உயிர்கொன்றான் பேரை
சாற்றினா னவனுடனே யுனையுமிப்போ
கூரிய வாட்கிரை யிடுவேன் என்றான்; உள்ளங்
குனிந்து மகன்றனைத் தழுவிப் புலம்புவாளே.

**தரு**

மடியவே போறாயோ — பிரகலாதா
மணிமுத்தந் தாராயோ
மடியவே போறாயோ — கொடியாரைக் கனல்கூட்டி
நடுமார்பினிலே மூட்டா—தடிவயிற்றிலே மூட்டி
— மடியவே

எண்ணாது எண்ணினனே — கொடும்பாவம்
பண்ணாது பண்ணினனே
கண்ணே கண்மணியே — எவ்வுலகமும்
நண்ணிய புகழ்தனியே
உண்ணாமல் தின்னாமல்
ஊரெங்குந் தூராக்கி
விண்ணாளும்] பெருஞ்செல்வம்
வெறுத்தென்னை வேறாக்கி — மடியவே

கொங்கைபால் பெருகுதடா — லூட்டிவளர்த்த
செங்கையு முருகுதடா
அங்கம் வெந்துழலுதடா உயிர் போகாமல்
இங்கேவந்துழலுதடா
எங்கே போய் விழுந்தின்னம்
ஏங்குவேன் மனம் விண்டு
மங்களதனமும் வாயும்
நகையும் கொண்டு — மடியவே

முன்னாள் செய் தலை விதியோ
மன்னவனுக் கென்னகாரண மதியோ
அன்னியாயஞ் செய்தாயோ பெரியோர்களை
எண்ணாமல் வைதாயோ
பொன்னின்முடியும் ரத்தின
பூஷணமும் வெறுத்து
இன்னதென் றெனக்குண்மை
இயம்பாமலே வெறுத்து
மடியவே போறாயோ 93

விருத்தம்

ஏங்கியே மகனைப் புல்கி யெடுத்துவாய் முத்தம்
கொண்டாள்
மாங்குயில் மொழியாள்; அன்னைமலரடி வணங்கி
ஈங்குநீ வருத லேனோ எனக்கு நாரணனே யல்லால்
பாங்குள துணைவே றுண்டோ பகரென்றான்
நிகரென்றானே 94

தரு

ஏதுக்கு நீயிந்த வேதனைப் படுகிறாய்
அன்னையே அன்னையே
உனக்கென்ன குறையென்று உன்னிக் கலங்குகிறாய்
அன்னையே அன்னையே

காதுக்குங் கண்ணுக்கும் பேதமோ தூரமோ
அன்னையே அன்னையே — இதைக்
காணவும் கேட்கவும் வேணதுண் டதிசயம்
அன்னையே அன்னையே

அரியது மானிடப்பிறவி வந்த டுப்பதும்
அன்னையே அன்னையே — நூறு
ஆண்டதி லம்பது ஆண்டு நித்திரையிப்போ
அன்னையே அன்னையே.

இருபத்தோ ரைந்துள்ள—பருவத் தெவ்வனம் போகும்
அன்னையே அன்னையே — மற்ற
இருபத்தோரைந்தினில் வருபலன் மொழிவன்கேள்
அன்னையே அன்னையே

உறவின் மனைவி யென்றும் — நிறையும் புதல்வ
ரென்றும்
அன்னையே அன்னையே
தங்களாளம் வைத்து மூப்பிலே தள்ளுவார்
மனிதர்களே
அன்னையே அன்னையே!

மறலிசெய் நரகத்துக் — குறவாகி அழிவார்கள்
அன்னையே அன்னையே — இந்த
மாயப்பிறவிக்கு நீ தேயலாகுமோ
அன்னையே அன்னையே.

ஆபத்தினால் வந்த — பாபத்தா லிவ்வுலகம்
அன்னையே அன்னையே —
எண்ணிப் பாராமல் நான் என்னும் ஆணவம்
கொண்டு
அன்னையே அன்னையே — கூ

பத்திலே விழுந்தா புத்தர் போலவே
அன்னையே அன்னையே — அந்தப்
பரம்பொருள் நிலைமையின் — தரம்பிரித்தறியார்கள்
அன்னையே அன்னையே

பொன்னினும் பெண்ணினும் — தன்மனம்
வைப்பார்கள்
அன்னையே அன்னையே — அவர்
புத்திக்கு நானென்ன — கற்றுச் சொல்ல வேணுமோ
அன்னையே அன்னையே

தேவர்க ளவுணர்கள் யாவர்க ளாயினும்
அன்னையே அன்னையே — சொல்லும்
தேவர்க ளவுணர்கள் நரர்பார்வை யாகிலும்
அன்னையே அன்னையே

இன்பம் பெருகுவதுந் துன்பம் பெறுவதும்
அன்னையே அன்னையே — உடலுக்
கெடுத்த காரியமல்லால் அடுத்து வேறே வருமோ
அன்னையே அன்னையே

நம்பு மடியவர்க்கு செம்பத மலர்தந்து
அன்னையே அன்னையே — காக்கும்
நாரணன் இருக்கவும் வேறே இடர்வருமோ
அன்னையே! அன்னையே!

ஒன்றினில் படைப்பதும் ஒன்றினில் அழிப்பதும்
அன்னையே அன்னையே — மாய
ஒன்றினிற் றுடைப்பது மொன்றிய குணமல்லோ
அன்னையே அன்னையே

அன்று நாரதன் சொன்ன சொல்லின்று நீமறந்தாயோ
அன்னையே அன்னையே — அத்தை
அகங்கொண்டு அளவற்ற சுகங்கொண்டனுபவிப்போம்
அன்னையே அன்னையே

வருந்தியழைத்தாலும் வாராது வாராது
அன்னையே அன்னையே — கிட்ட
வந்ததைப் போவென்று நொந்தாலும் போகாது
அன்னையே அன்னையே

திருந்தி யவரவர் செவ்வினை போகுமோ
அன்னையே அன்னையே
அவ்வை செப்பிய வாசகம் தப்புமோ தப்பாதே
அன்னையே அன்னையே

மூலப்பகுதியின் கோலமா மூலங்கள்
அன்னையே அன்னையே — அது
முத்தொழில் செய்கையைப்பற்றி யனுபவிக்க
அன்னையே அன்னையே

காலங்கள் மூன்றிலுஞ் சாலவு மயக்குமே
அன்னையே அன்னையே — அந்தகர்
தூவிய நாரண அந்தத் தொழிலே யன்றி
அன்னையே அன்னையே. 93

### விருத்தம்

தேற்றிய காலைமல்லர் சிறுவாண்டை யிருந்தே
போக
பருந்துநன் குஞ்சுகொள்ள பசுங்கிளிபோலும்போலுந்
துரத்திய கன்றை வேங்கை தொடக்கண்ட பசுவைப்
போலும்
ஆற்றலாகிப்பின்னும் அலறுவாள்அலறு வாளே. 96

### வசனம்

இப்படியாகத்தானே தாயாருக்குத் தேறுதலைச் சொல்லுகிற சமயத்திலே மல்லரானவர் பிரகலாதனைக் கொண்டு போகும்பொழுது பசுவின் கன்றை வேங்கை

யானது பிடித்துக்கொண்டபோது பார்த்துக்கொண்டிருந்த பசுவைப் போலும்; பருந்தானது குஞ்சுகளை எடுத்தபோது அலறுகின்ற கிளிபேடை போலவும் — சுதறி மல்லரைப் பார்த்துச் சொல்லுகிறாள்:

தரு

மல்லர்களே மனுசொல்லி வாரெனச் சொல்லிச்
வாரமிட்டு மெல்லப் போகொணாதோ
இல்லையோ தான்மனது வல்லையோ தான்சற்றே
இங்கிருந்து மெல்லப் போகொணாதோ

தன்மமுண்டோ யிதனால் கன்மமுண்டோ நீங்கள்
தறுகில்நின்று மெள்ளப் போகொணாதோ
வன்மமுண்டோ யிவன்மேல் குன்மமுண்டோ
—சற்றே
மருகிநின்று மெல்லப் போகொணாதோ

என்குருவே முனிபுங்க னாரோ
இறைவனுக்கு நீரு மறை யொணாதோ
மங்கைமாரே யென் தங்கையாரே அந்த
மன்னனுக்கு நீரும் பண்ணொணாதோ

கண்மணியே நான் பிராயமெதோ அருள
கற்பகமே அருளற்புதமே
எண்ணி எண்ணியே மனங் குன்றுவேனோ
கண்ணி யேங்குவேனோ மனந் தாங்குவோனா

வெட்டுவாரோ தலைமேல் குட்டுவாரோ தள்ளி
மீட்டுவாரோ தண்டால் மாட்டுவாரோ
பெட்டிப் பாம்பு போலே யொட்டிநொந்து மகனே
புழுங்குவாயோ புழுங்கி அழுகுவாயோ!

தேற்றுவாரா ரென்னை யாற்றுவாரார் வேறே
திக்குங் காணேன் ஒருபக்கங் காணேன்
போற்றுவா ரார் இடர் மாற்றுவாரா ரெங்கும்
போக்குங்காணேன் ஒரு நீக்குங் காணேன்

சங்கவதா மகனே யிங்கே வாடா அல்லாது
உன்னைக் கொல்ல மன்னன் உன்னினானே
மங்கி மங்கி மனஞ் சங்குவாயோ ஏங்கி
வாடுவாயோ வாடித் தேடுவாயோ!

அய்ய அய்யமகனே அய்யஅய்ய
அகதி யானேனே கைக்குச் சகதி யானேனே
கையழகு மகனே மெய்யழகு எப்போ
காணுவேனோ இன்பம் பூணுவேனோ. 97

விருத்தம்

மங்கை இந்தவிதம் புலம்பி விசனமாகி
மாநிலத்தின் மிசைவீழ்ந்த மயிலன் னாளை
தங்கை யருந் தோழியருந் தாதிமாரும்
தாங்கியே யெடுத்தே அணைத்துத் தழுவிக் கொண்டு
திங்கட் விழமாமணி மண்டபத்திற் சென்றே
செய்ய மலர்ப்பஞ்சணைமேல் கிடத்திச் சூழ்ந்து
கொங்கலர் பன்னீர் தெளித்து வீசினார்கள்
கோதை தெளிந்தெழுந்து பின்னுங் குலைகுவாளே.
98

வசனம்

இந்தப் பிரகாரம்- புலம்பி மூர்ச்சையாகி பூமியிலே விழுந்த லீலாவதியம்மனைத் தோழிமார்கள் தழுவி எடுத்துக் கொண்டு சப்பிரமஞ்சத்தின் மேலே கிடத்தி, பன்னீர் தெளித்து ஆலவட்டங்கள் மேலே வீசுகிறபோது

சற்றே மூர்ச்சை தெளிந்து புலம்புகிற விதம் எப்படி என்றால்—

### விருத்தம்

அன்பான மகனே எந்தன் ஆருயிர் மணியே
கண்ணே
எப்படிப் பிரிந்து வாழ்வேன் இனியிந்த உடல்தன்னை
வைப்பனோ யுந்தனோடே வந்துபின் மடியா
விட்டால்
இப்படி உள்ளோ ரெல்லாம் இரும்பழி
சொல்லுவாரே! 99

### தரு

என்ன செய்வேன் தெய்வமே — நான்
ஏதுசெய்வேன் தெய்வமே

என்செய்வேன் தெய்வமே என்சுதன் வல்லுயிர்
வஞ்சகர் பாதகர் நஞ்செனக் கொல்வாரோ (என்ன)

விழித்தவிழி பிதுங்க — அழுத்தி மார்பிலே ஏறி
இழுத்துப் போட்டுக் — கழுத்தினை முறிப்பாரோ
(என்ன)

கஞ்சமலர் முகமும் — கொஞ்சிய கனிவாயும்
நெஞ்சே யுருகுதடா — தஞ்ச மஞ்சனனே யிப்போ
(என்ன)

நீதிக்கி உறவாகி — சூதுக்கு பகையாகிப்
பாதகியென் வயிற்றில் — ஏதுக்குப் பிறந்தாயோ
(என்ன)

தப்பாத மொழிபேசா — அப்பனே உன்னுயிர்
மெய்பகட் டெமராசன் — எப்படிக் கொல்வானோ?

அருந்தவஞ் செய்துன்னை — வருந்தி நான் பெறும்
போது
பெருந்தலையி லெழுத்து — மிகுந்ததோ காரணம்
(என்ன)

பிள்ளையை வதைசெய்த — கொள்ளிக்கண் பார்த்த
கள்ளியென் றுலகத்தில் — உள்ளோர்கள் வையாரோ
(என்ன)

சத்தியந் தவறாத உத்தமனே யுன்னைப்
பெற்ற வயிறெனக்குப் பற்றி எரியுதையோ
(என்ன)

அரி அரி யென்று — பரமென்று சொன்னாயே
அரிவந்து உன்னையிப்போ — பரமென்று
காப்பானோ
(என்ன)

தாயினும் அன்புள்ள — நேயனே உன்கனி
வாயில் முலைப்பாலுங் — காயவே யில்லையே
(என்ன

எத்தனை எத்தனைப் பிள்ளைகள் — பெற்று வளர்த்
தாலும்
உன்னைப் போலப்புது உத்தமனைப் — போலப்
புத்திரர் கிடைக்குமோ
என்ன செய்வேன் தெய்வமே 100

விருத்தம்

சேயிழையா ளங்கம் வெந்து புழுங்கும் போதுச்
சேய்கதற தாயருகே வந்தாற் போலும்
காயும் நெடும்பயிர்க்கு மழைபொழிந்தற் போலும்
கன்றலற வோடிவந்த கவலை போலும்
மாயவனாற கசேந்திரன் முன்வந்தாற் போலும்
மாய்ந்தோற்குச் சஞ்சீவி கிடைத்தாற் போலும்
ஆயுநாரத னந்தபுரத்தின் மேவி
ஆற்றுவான் லீலாவதியைத் தேற்று வானே- 101

வசனம்

இப்படி லீலாவதியம்மன் தன்னுடைய மகனை நினைந்து சரீரமு மனமும் வெந்து புழுங்கிக் கொண்டிருக்கிற சமயத்திலே, தாயைக் காணாமல் கதறியழுகிற குழந்தை முன்னே தாயானவள் வந்தாப் போலேயும் மாயா நின்ற பேருக்குச் சஞ்சீவி கிடைத்தாபோலேயும் நாரதமா முனியானவர் ஒருவரும் அறியாத படிக்கி அந்த புரத்திலே வந்து லீலாவதி அம்மனுக்குத் தேறுதலைச் சொல்லுகிற விசித்திர அவதார மெப்படியென்றால்.

56 புன்னாகவராளி

ஏனழுகிறாயம்மா வானவர்
சிறையிலும்மா
லேனுகி நெறியில்லாம லானது
சொன்னேன் சும்மா — ஏனழுகிறாய்

விந்தையாக நீயளித்த மைந்தனு முனக்குரைத்த
மந்திரம் மறந்துசித்த நைந்துநைந்துருகி மெத்த
—ஏனழுகிறாய்

உற்றது சொல்லுவேன் கேளும்
பெற்ற மகனுக்கே மீளும்
வெற்றி வருமல்லால் நாளும்
குற்றமும் வாரா தென்நாளும் — ஏனழுகிறாய்

ஆதி நாராயணன் பாதம்
ஓதவு வருமே போதம்
ஏதுவினை ஏது பேதம்
ஏதுபாவம் ஏது சேதம் — ஏனழுகிறாய்

போத நடுவனை யுற
மீதிலே யமர்ந்த பரஞ்
சோதி பிரகலாதனுக்
கென்ன துயரம்
— ஏனழுகிறாயம்மா 102

### விருத்தம்

அம்மையே நீ கலங்க வேண்டாம்
ஆயிழை கலங்க வேண்டாம்
யிம்மையிற் கலங்க வேண்டா
மினிமேலுங் கலங்க வேண்டாம்
செம்மையா யுனக்கு நானே
செப்பிய மாற்ற மெல்லாம்
மெய்ம்மையே யறிவா யென்று
விளம்பி நாரதன் சென்றானே. 103

### வசனம்

அகோ! அடியம்மா லீலாவதியே! நீ ஒன்றுக்கும் இலேசப்பட வேண்டாம். ஸ்ரீமன் நாராயணன் உன்னுடைய புத்திரன் பிரகலாதனுக்கு விச்சிதையில்லாம லனுக்கிரகம் செய்வான். ஆகையாலே இம்மைப் பிறப்பினும், மறுமையிற்கதியும் இரண்டு பயனையும் பிறக்கக்

கடவாயென்று விண்ணப்பம் செய்து தான் வந்தசேதி இருவரும் அறியப்போகாதென்று நாரதமுனி அந்தர் மார்க்கமாய்ப் போயினார்.

விருத்தம்

கொம்மை வெம்முலையா ளின்பங்
 கூர்ந்தவ னிருந்தா ளிப்பால்
செம்மை யில்லாத மல்லர்
 சினங்கொண்டு பாலன் தன்னைக்
கொம்மெனப் பிடித்துக் கட்டி
 கொண்டுபோம் பொழுதாங் குள்ளார்
பொம்மென நடுங்கிச் சுற்றிப்
 புலம்புவார் தழும்பு வாரே. 104

வசனம்

இப்படி லீலாவதி அம்மன் தன் னரண்மனையிலேயே புலம்பிக் கொண்டிருக்கும்போது, மல்லர்கள் பிரக லாதனைப் பிடித்துக் கட்டிக்கொண்டு போகிறபோது அந்தப் பட்டணத்தில் உள்ள சனங்களெல்லோரும் பார்த்துப் புலம்புகிற விதமெப்படி யென்றால்

தரு கேதார கௌளை

அய்யோ யிந்தக் காரணங்க ளிப்போ
அந்தமா யிங்கே வந்ததுவோ
பொய்யாமோ மெய்யாமோ யிது
பொல்லாது மல்லரே சொல்லீரோ

அருமைத் திருமேனி — மகன்
அற்புத நால்வற்கு மெய்ப்புதல்வன்
ஒருமைக்கு உறவான — நல்ல
உத்தம நற்குண நித்தியனை

கொல்ல நினைந்தானே — என்ன
குற்றங்கள் செய்தது பெற்றபிள்ளை
பொல்லாதபேர் தனக்கு இதுபொறுக்குமோ
பூமியி லொருக்கு மதோ

கல்விக் கரசனிவன் — நல்ல
கற்பனை யாகிய விற்பனனை
கொல்ல வழைத்து வந்தாரிக்
கொடியவர் வீழ்ந்து மடியாரோ

சல்லாபச் சுந்தரனை — சகத்
சனனைச் சென்ற ரக்ஷகனை
மல்லர்க ளெவ்வகையால் — உயிர்
மாய்ப்பரோ பூமியில் தேய்ப்பாரோ

பாலன்தனைப் பயின்ற — அந்தப்
பாதகியாள் செய்த மாதவமோ
லீலாவதியா ளென்பாள் — பெற்ற
தித்தனைக்கோ கேடுமித்தனைதான்

சந்திரோதய முகமும் — செய்ய
தாமரைக் கண்களின் நேமுகமும்
கந்த மலர்க் குழலும் — செய்ய
காதினில் குண்டல மண்டலமும்

பொன்னாடை மின்னார் பூண்ட
பூவினமும் கனமார் பகமும்
மன்னான நன்மகனை — மதன்
தன்னா லெழுதவு மொண்ணாதே

நோக்கிய கண்களெல்லா — மிக
நோகுதே வேகுதே — பாதகமே
பாக்கிய விரணியனைப் பெற்ற
பாலகனைக் கொன்ற காலகனென்றே

வையமும் வானகமு — முள்ள
மட்டுக்கு மிந்தப்பழி விட்டிடுமே
செய்யாத காரியங்க ளென்ன
செய்தாயோ வுடனுன்னை யவன்தன்

பிள்ளை அருமைதனை நொந்து
பெற்று வளர்த்திடு முத்த மீயாள்
கொள்ளார் மனங்கொதித்து — கூடிக்
குலைவாரும் விழுந்தழு வாரும்

அய்யகோ அய்யகோ வென்று
அழுவாரும் கீழேவிழு வாரும்
கையை நெறிப்பாரு — மோதிக்
கண் ணி லறைந்துபுண் ணாவாரும்

கூடிமடிவே மென்று — வந்து
கூடிடுவார் பின்னே ஓடிடுவார்
பாடா விதியனே யென்று
பதைப்பாரு முயிர்சிதைப் பாரும். 105

சந்த விருத்தம்

பொன்னகர் மங்கை யப்படி நைந்து
புலம்பி யழும்போதில்
மன்னியவர் குவவுத் தோடு மைந்தனை
மல்லர்கள் கொண்டேகிப்
பின்னும் மணிக்கயிரோடு பிணைத்து
பெருத்தகானங் குருகி
அன்னவர் நகைமுக மாகிய மல்லர்க
ளறைகுவா ரறைகுவாரே. 106

வசனம்

இப்படியாகப் பட்டணத்தில் உண்டான ஸ்ரீசனங்க ளெல்லாம் புலம்பும்படிக்கு ஆக்கினை களத்திலே கொண்டு போய்ப் பிரகலாத சுவாமியைப் பார்த்து மல்லர்கள் சொல்லுகிற வித மெப்படி யென்றால்

தரு — ஆனந்த பைரவி

மைந்தா நீகேளாய்
எங்கள் வார்த்தை
மைந்தா நீ கேளாய்

இந்திராணி தேவரும் வரு
வந்தனை புரியுமுன்
தந்தை இரணியனைச்
சிந்தை செய்வாய் நீயும் — மைந்தா நீ

இப்போது நீயே யுன்தந்தை
நற்பெயர் சொல்வாய்
... ... ... சொல்லாமல்
மைப்புயல்பேர் சொன்னால்
குப்புறத் தள்ளியே
தப்பாமல் கொல்லுவோம் — மைந்தா நீ

பொன்னான மேனி யுன்மேனி
என்னாமோ நீ அன்னியாய மாகவே
துன்னுமால் பேர் சொன்னால்
உன்னை இந்த வாளாலே
சின்னா பின்னஞ் செய்வோம். — மைந்தா நீ

அண்டர் நாதன் தந்தை; புகழ் கொண்ட வினோதன்
தொண்டனென்று சொல்லாமல்
விண்டுவின்பேர் சொன்னால்
கண்டங் கண்டமாகத் துண்டுகள் செய்வோமே
— மைந்தா நீ கேளாய் 10

### விருத்தம்

நீதி யில்லா மூடரிந்த வகையே சொல்ல
நீணிலமுஞ் சேனிலமும் வயிற்றில் வைத்த
ஆதிப் பரந்தாமனை யகத்தில் வைத்து
ஆனந்தக் கடலமிர்தம் அருந்தா நின்றான்
வேதியனும் புரந்தரனும் புகழ்தற் கேத்த
மெய்ஞ்ஞான அஞ்ஞான விளக்கம் கூறும்
சேதி மல்லர் முகம்நோக்கி யிதுகே ளென்று
செப்பவே தன்மனது ஒப்பி னானே. 108

### வசனம்

இப்படியாய் மல்லர்கள் சொன்ன மாத்திரத்திலே ஈரேழுலோகமும் அண்டரண்ட புவனங்களையும் தன்னுடைய வயிற்றிலே வைத்திருக்கப்படா நின்ற ஸ்ரீமன் நாராயணனைத் தன்னுடைய இருதய கமலத்திலே வைத்திருக்கப்பட்ட பிரகலாத சுவாமி மல்லர்களைப் பார்த்துச் சொல்லுகிற விதமெப்படியென்றால்

### தரு — தோடி ராகம்

என்ன சொன்னீர் மல்லர்களா —
இன்னஞ் சொல்லுங்கோள் — நீங்கள்

ஏது சொன்னாலுந்தா
னெந்தன் காது கொள்ளுமோ
மன்னு மறை முடிவினில் மன்னுதூயவராம்
மங்கைப் பூமாது மார்பினில் தங்கும்
மாயவன் மலர்ப் பாதங்
கன்னிதன் லோகநாதன் ஞானபோதன் பேர்
சொல்லாமல் — என்ன

செங்கனி யுள்ளோனவன் — காயைத்
தின்ன லாகுமோ
கங்கை தீர்த்த முள்ளோன்
சேற்று நீரைத் துன்னலாகுமோ
துங்க வமுதுள்ளோ னோசை
யுன்ன லாகுமோ
மாயன் தோத்திர முள்ளோன்
மாற்றி வேறே பன்ன லாகுமோ
சொல்லுஞ் சொல்லு புல்லு வீணரே
வல்லமையாகவே —என்ன

வெட்டினாலுங் குத்தினாலும் மீட்டினாலுமே
வெவ்வாங்க நெஞ்சை யூட்டினாலுமே
மூட்டுமத யானையென்மே லோட்டினாலுமே
— அனல்
மூட்டிமூட்டி போட்டுடல் வாட்டினாலும்
எதுமோசம் எதுநாசம் எதுகிலேச
மாயிர நேச மிருக்கவே —என்ன

அடியவற் கெளிமையான
ஆதியானவ னென்றும்
அடிமுடியு நடுவுமில்லா
னாதி யானவன்
நெடியவன் பரமானந்த
நீதியானவன் — சுத்த
நிமலன் விமலன் அமலன்
பரஞ்சோதி யானவன்
சொல்லுஞ் சித்தியன் துத்தியன்
செப்பும் புத்தியில்லாமலே
என்ன சொன்னீர் மல்லர்களா

### விருத்தம்

சொல்லும் வகையறிந்து மைந்தன் சொல்
லோடும்
சுடுமுகங் கொண்டிட மல்லர் சூலத் தாலும்
வெல்லும் மழு வாளாலுந் தண்டி னாலும்
விட்டெறிந்து தாக்குதலு மெய்யர் மெய்யன்
அல்லி நறுங்குழல் மாதுசேர் மார்பா
அச்சுதனே கேசவனே அரியே மாலே
தொல்லுலக முண்டவனே பரனே யென்று
துதித்திட்டான் திருநாமம் மதித்திட் டானே. 110

### வசனம்

இப்படியாகப் பிரகலாத சுவாமி மல்லரைப் பார்த்து நன்மார்க்கமான தத்துவம் சொன்ன மாத்திரத்திலே அப்பால் மகாகோபம் கொண்டு வாளாலேயும் மழுக்களாலேயும், ஈட்டினாலேயும், உபத்திரவம் செய்கிறபோது லட்சுமிசமேதா அச்சுதானந்த கேசவ நாராயணா பக்தவத்சலா பரமதயாளா வென்று தோத்திரம் செய்குற விதமெப்படி யென்றால்

### கொச்சகம்

புரகரியும் நான்முகனும் புரந்தரனும் புகழ்ந்தேத்தும்
முரஅரியே மெய்ஞ்ஞான மூர்த்தி முழுபொருளே
கரி கரிமுன் வந்தெழுந்த காட்சியைப் போல்
வந்தருளும்
அரிஅரி நாராயணனே அற்புதனே யெங்கோனே.

### தரு — சங்கராபரணம்

அரி அரி நாராயணா எங்கோனே — கமலத்
திருவடி துணைநம்பி னேன்

கருணை செய்திடவேணு நீயல்லால் — வேறு
பரமெனக்காரு நீ சொல்வாயே

சமந்தக மணிமார்பினனே பொல்லாத மல்லர்
எமன்தனைப் போல் வாரார் தானே
ஆளுடையநாயகனே அய்யா இப்போது — இந்த
வாளுமெந்தன் மேல் வருமோ — மெய்யா

வண்துளப மணிபரந்தாமா — மல்லர்கள் வந்து
தண்டுகொண்டு மோத வருமாமோ
குந்திமுன்னே வந்தெழுந்த சோதிவடி
உன்னடியேனைக்
குந்தமும் கொன்று விடுமோ மோதி

ஆலந்தளிர்மேல் தவழ்ந்த பிள்ளை உன்னடியேனைச்
சூலம் வந்துபாய மனது கொள்ளாய்.
மூலம் நடுவில்லாத வீரமல்லர்கள் விடும்
வேலும் வந்து பாயுமோ நீபாராய்

சங்கு சக்கிர மணிந்த பிரதாபா
பங்கயமீது மங்கையர் வளரும் மணிமார்பா
அச்சுதா முகுந்தா வாசுதேவா மாதவா — அரி
பச்சை வண்ணா என்னை நீ காவாய். 112

### விருத்தம்

இலங்கிய கல்சுவரெறிந்த கலமே போன்றும்
எழிற்பெரி யோர்தமக் கிழைத்த இடரே போலும்
உலகிடு தோள்மல்லர் விடும்படைக ளெல்லா
மொன்று நூறு பொடிந்து எதிர்த்தே யோடி
மலங்குமவர்த் தலைமீதும் முகத்து மீதும்
மார்மீதும் தோள்மீதும் வந்துமோதக்
கலங்கி இரணியற் கோத வேண்டுமென்றே
கடிகினார் மாருதப்போல முடுகினாரே. 113

### வசனம்

இப்படியாகப் பிரகலாத சுவாமி தவுத்தியம் செய்கிற போது எறியாநின்ற ஆயுதங்களெல்லாம் சின்னா பின்னமாய் முறிந்து கல்சுவரிலே எறிந்தகலம் போலவும், பெரியோருக்குச் செய்த இடரைப் போலவும் எதிர்த்தோடி மல்லர்களுடைய தலையின் மீதும் முகத்தின்மீதும் மார்பு மீதும் தோள்கள் மீதும் போய்ப்படுகிற போது மல்லர்கள் பயத்து இந்தச் சேதியை இரணியராசனுக்கு சொல்ல வேணுமென்று போனார்கள்.

### விருத்தம்

வெட்டுவதும் குத்துவதும் பார்த்திருந்த
மெல்லியர்கள் ஒரு நால்வர் விரைந்து சென்று
மட்டவிழுங் குழல்சரிய இடைகள் நோவ
வனத்துகில்கள் சரிந்திடவும் முடுகியேகி
கட்டின மலர்மெத்தையின்மேல் படுத்திடாமல்
காசினியின் மேல்புரண்டு புழுதி மேனி
வட்டமுலை எழில் லீலாவதியை நோக்கி
வணங்கினார் மகிழ்வார்த்தை யினங்கினாரே. 114

### வசனம்

இப்படியாக மல்லர்கள் வாளாலேயும். மழுக்களாலே யும், சூலத்தாலேயும், வேலாலேயும், உபத்திரவம் செய்கிற போது ஆயுதங்களெல்லாம் முறிந்து பிரகலாத சுவாமியின் திருமேனியிலே ஒரு வடுவு மில்லாமல் இருக்கிறதைப் பார்த்துக் கொண்டிருந்த தோழிப் பெண்கள் கொண்டை கள் அவிழ்ந்து போகவும், வஸ்திரம் நழுவிப் போகவும், இடைகள் ஒடிந்து போகவும் அவசரமாக ஓடிவந்து லீலாவதி அம்மனுடனே சொல்லுகிற விதம் எப்படி என்றால்

தரு — நாத நாம க்ரியை

அம்மா லீலாவதி யாரே — கண்ட
அதிசயம் கேளுமே — பாக்கியவதியாரே
உன்மகன் சொல்லெல்லாம் நிலவரமாச் செப்ப
உற்றது சொல்வோமே உந்தன் துயர்போச்சே
அம்மா

மல்லர்கள் கறுவி வாயை மடித்தாரே,
மடித்த வாயிற்பல் நெறநெறென கடித்தாரே
கொல்லுமென்றே வாள்கையில் பிடித்தாரே
— வெட்டும்
கூர்வாள் தூளாய் போக நெஞ்சம் துடித்தாரே
அம்மா

சூலத்தை மார்பிலே தைக்க விட்டாரே
சூலம் துண்டு துண்டாகவே மதிகெட்டாரே
ஆலத்தைப் போலவே வேல்கள் தொட்டாரே
வேலும் அக்கணமுரிய வோட்டமிட்டாரே
அம்மா

அரி அரி யென்றிடும் நாமம் மறவானே — அந்த
அருயருளாலே தன்னாகந் துறவானே
பிரகலாத னாருயிரை இறவானே — இந்தப்
பிள்ளைக்கென்ன தாழ்ச்சி மெத்தத் திரிவானே
அம்மா லீலாவதியாரே கண்ட
அதிசயம் கேளுமே. 115

விருத்தம்

தோழியு ரிவ்வா றோதத்
துயரெல்லாம் போக்கிக் கொண்டாள்
வாழிமா தவனே மாலே
மைந்தனைக் காப்பா யென்று

மழையோன் கண்ணாள் லீலாவதி
அம்மன் மகிழ்வு கூர்ந்து
ஆழிமா யவன்தாள் போற்றி
ஆற்றுவா ளேற்று வாளே. 116

வசனம்

இப்படியாகத் தோழிமார்கள் சொன்ன மாத்திரத்திலே மகா சந்தோஷங்களை அடைந்து மாதவனே நாரணனே என் புத்திரன் பிரகலாதன் தன்னை முற்றிலும் கடைபோகக் காப்பாற்ற வேணும் சுவாமி என்று பூசை பண்ணுகிற விதமெப்படி என்றால்

கேதகர கௌளை

நம்பினேன் நம்பினேன் — செம்பதம்
உபய சரோருகம்

மாயிரும் புவிகொண்ட மாயிருந் தனிநாகப்
பாயலில் வாழ்ந்திடும் நேயனே முகுந்தா
தீயவர் வினையின்னுஞ் சேயினை யணுகாமல்
நீயருள் சுரந்திடு வாயணி முகுந்தா நம்பினேன்

மின்னும் பணிமணியும் பொன்னுந்துளவு மார்பில்
மன்னிய விளங்கி காளிதுன்னிய முகுந்தா
என்னுட மகனுக்கு அன்னையுடனே தந்தை
யுன்னை யல்லா துண்டோ இன்னமு முகுந்தா
(நம்பி)

பங்கையன் சிரங்கொண்ட சங்கரனிடர் தீர்த்த
மங்கள சுபகர சிங்கார முகுந்தா
இங்கு வஞ்சகராலே மங்காமல் மகனுக்கு
அங்கருணை செய்யாதே சிங்கார முகுந்தா (நம்பி)

விமல நான்முகனையும் கமல உந்தியில் தரும்
அமல நாரண மூர்த்தி எமையாளு முகுந்தா
அமையும் வெவ்வினை செய்தார் குமாரனை
அணுகாமல்
இமையின் முன்னே காத்துச் சுமையது முகுந்தா
(நம்பி)

செய்யக் கமல மாது வையகமட மாது
மையல் கொண்டணி கின்ற மெய்யனே முகுந்தாவே
வெய்ய வினைதீர்க்கும் அய்யனே உனக்குநான்
கைமாறு தெரிந்திலேன் துய்யனே முகுந்தா
(நம்பி)

அத்தி மும்மேயென்று கத்தும்போ தோடிவந்த
மூத்தனே மிகும் பரிசுத்தனே முகுந்தா
புத்திரனை என்னாளும் முற்றிலும் கடை போகச்
சித்தம் வைத் தாண்டருள் கர்த்தனே முகுந்தா
நம்பினேன் நம்பி 117

விருத்தம்

சீதரன் பாதம் போற்றிச் சிறப்புடன்
இருந்தா ளென்னை
ஏதுநாம் செய்வோ மென்று இருதயம் கலங்கவோடி
தாதவிழ் மாலை சூடும் சதிர்முடி இரணியேசன்
பாதமே வணங்கி மல்லர் பரிவுடனுரை
செய்வாரே. 118

வசனம்

இப்படியாக லீலாவதியம்மன் நாராயணனைப் பூசை பண்ணிக்கொண்டு தன்னுடைய அரண்மனையிலே போயிருந்தாள். அப்போது மல்லவரானவர் ஓடிப்போய் இரணிய மகாராசனுக்குச் சொல்லுகிற விதமெப்படி என்றால்

### விருத்தம்

எவ்வுலகக் காணும் நீதி
　　இரணிய மன்னா கேளாய்
தெவ்வரைக் கொல்லும் வேலும்
　　செஞ்சுடர் சூலம் வாளும்
கவ்வலே விடுத்தோ முந்தன்
　　காதலன் மேல்ப டாமல்
செவ்விய தியானத் தாலே
　　சிதைந்துபோய் வதைந்த தென்றான். 119

### வசனம்

சரணம் சரணமையா சுவாமி இரணியேசுபரா! உன்னுடைய புத்திரன் பேரிலே விடுத்த சூலாயுதம் வேலாயுதம் ஈட்டி வேல் வாள் சக்கரம் தோமரம் இது முதலான ஆயுதங்களெல்லாம் விடுத்தோம். பிரகலாத சுவாமி செய்கிற தியானத்தாலே விடுத்த ஆயுதங்க ளெல்லாம் வாய் மடிந்து போச்சுது. இனி மேல் எங்களாலே ஆகிற காரியங்கள் சொல்லுமையா சுவாமி.

### விருத்தம்

கொல்லு தற் கெளிமையான
　　குழந்தையைக் கொல்லச் சொன்னால்
வல்லமை யில்லா மூட
　　மல்லரே சொல்லக் கேளும்
சொல்லுவேன்; பாசத் தாலே
　　சுருக்கென கட்டி யேகும்
கல்லுள மலைமே லேற்றிக்
　　கடகட வென்றுருட்டு வீரே. 120

### வசனம்

அகோ வாருங்கோள் மல்லரே! சிறுகுழந்தையைக் கொல்லுதற்கு வல்லமை யில்லாத மூடரே! ஒரு வயணஞ் சொல்லுகிறேன் கேளுங்கோள். பாசத்தினாலே குண்டுகட்டாய்க் கட்டி உயர்ந்த மலையின் பேரிலே கட கடென்று உருட்டுங்கோள் மல்லரே!

அப்படியே நல்லதையா சுவாமி!

### விருத்தம்

கையொடுங் காலுங் கூட்டி
கயிற்றினா லிறுக்கிக் கட்டி
வெய்யதோர் மலைமே லேற்றி
வீறுட னுருட்டும் போது
வையக மீரே ழுண்ட
மணிநிற வண்ணா கண்ணா
அய்யனே யென்று துன்பம்
ஆற்றினான் போற்றி னானே 121

### வசனம்

அகோ எப்படி யென்றால் கையும் காலையும் கூட்டிக் கயிற்றினாலே கட்டி ஆயிரம் யோசனை உயரம் பொருந்திய மலையின் பேரிலே ஏற்றித் தலைகீழாக உருட்டுகிறபோது, ஈரேழு பதினாலு லோகங்களையும் உண்டருளிய மாயவனே மணிவண்ணனே கண்ணனே அய் யனே சருவசீவ தயாபரனே யென்று தோத்திரம் செய்கிற விதமெப்படியென்றால்,

### கொச்சகம்

உரகவணை மேற்கடல் மேலோங்கு கருஞாயிறுபோல்
வரகவிழி துயின்ற வாருதியே மாயவனே
மரகதமே மெய்ஞ்ஞான வாழ்வே மணிவிளக்கே
அரிஅரி கேசவனே அச்சுதனே யெங்கோனே 122

நடு காம்போதிராகம்

அரிஅரி கேசவா அச்சுதா னந்தா
பரம ஞான விலாச பத்தர்சென பரிபாலா
அரிஅரி

எந்நாளு முந்தன் னிருபாதமலர் தொழாமல்
பன்னாம லிருந்துநான் கொடும்பாவி யானேனே
அரிஅரி

மின்னாமல் இடித்தாற்போல் வீரமல்லர் கையில் சிக்கி
இந்நாளில் பாடுபட எழுத்தின் வசந்தானோ
அரிஅரி

வேறாகி உள்ளாகி மேலாகிக் கீழாகித்
தோறாத பரமான துய்யபரந்தாமா
சூரைமாருதஞ் சூழலில் சுழ்ல்கின்ற
சருகென்ன வீரர்கையில் அகப்பட்டு மெலிய
வசந்தாமோ
அரிஅரி

அலைகடலில் துயில்கின்ற அச்சுதானந்தா
மலர்மீதில் வீற்றிருக்கும் மணிமார்பி னானே
அரிஅரி

மலைகளிலும் கெவிகளிலும் வரிந்து கட்டியுருட்டி
கொலை செய்ய நீபார்க்க என்ன குறைகள் செய்
தேனோ
அரிஅரி கேசவா அச்சுதானந்தா 123

வசனம்

இப்படியாகப் பிரகலாதனை மலைகளினும் கெவி களினும் உருட்டுகிறபோது பஞ்சணை மெத்தை மேலும் புரண்டெழுந்தா லெப்படியோ அப்படிப் போல பிரகலாத சுவாமி திருமேனியிலே ஒரு வடுவு மில்லாம லிருக்கிறதைக் கண்டு மல்லர்களோடி இரணியேசுவரனுக்குச் சொல்லுகிற விதமெப்படி யென்றால்,

### விருத்தம்

பிள்ளைதன் மேனிக்கொன்றும்
　　பேதைமை யில்லாத தாலே
கள்ளமா மல்ல ரோடிக்
　　கனகனுக் குரைப்பா ருந்தன்
தெள்ளிய புதல்வன் மாளச்
　　செய்வதொ ருறுதி தன்னை
வள்ளலே யுரைப்பா யென்று
　　வணங்கினா ரிணங்கி னாரே　　124

### வசனம்

அகோ சரணம் சரணமையாசுவாமி இரணியேசுவரா தேவரீர் சொன்னபிரகாரமே பிரகலாதனை மலையின் பேரிலே கட்டி யுருட்டிவிட்டும் உன்பிள்ளைக்குச் சரீரத் திலே யொரு வடுவு மில்லை. இனிமேல் எங்களாலே ஆகிற காரியம் சொல்லுமையா சுவாமி.

### விருத்தம்

பெருத்திடும் குழியில் கட்டை
　　பெருமலை போலே போட்டு
திருத்தி யாயிரம் குடத்துச்
　　செறிந்தநெய் விழுது வார்த்து
நெருப்பதை மூட்டி யிட்டு
　　நேருடன் மைந்தன் தன்னை
அருப்பமாய்க் கட்டித் தூக்கி
　　ஆட்டியே போட்டி டீரே　　125

### வசனம்

அகோ வாருங்கோள் மல்லரே! பெரிய குழியாக வெட்டி மலைகளைப் போலே கட்டைகளைப் போட்டு ஆயிரம் குடம் நெய் வார்த்து அக்கினியை வளர்த்து அதிலே தள்ளிப் போடுங்கோள் மல்லரே.

அப்படியே செய்வோமையா!

தரு

பூமியில் நாலுசதுரமாகக் குழிவெட்டினார் — உயர்
பொருப்பென்ன விறகுகள் கட்டைமுட்டையும்
கொட்டினார்
நேமுக மாகிய ஆயிரம் குடம் நெய்யை வார்த்திட்
டார் — அந்த
நெருப்பெங்கு மாகாசப்பரப்பெங்கு மெழும்பவே
யேற்றிட்டார்

வடவனல் போலவே துடிகொண்ட நெருப்பினை
நோக்கினார் — அது
மாமுனி வோர்களும் தாமரைக் கண்களில் தாக்கினார்
அடிமுதல் முடியளவாகிய பூரணவடிவனை நினைந்து
அன்பினாலானந்த வாரியின் மூழ்கின்ற நிமலனை

ஆளும் நாயகனைப் பாதகர் நெருப்பிலே தள்ளினார்
— அப்போ
அரிஅரி யென்று விழவே தேவர் மனம் நடுங்கித்
துள்ளினார்
வாள்தண்டு சங்குவில் சக்கர மேந்திய கையனே—
எந்தன்
மனதினில் வாழு முயிர்க்குயி ராகிய மெய்யனே

அன்பர்மனத்தி லின்பம் பொருந்திய சோதியே—இந்த
அனல்வந்து என்மேலே கனல்கின்ற தென்ன
வுபாதையே
துன்பமு மின்பமு நின்பரமே யல்லால் வேறுண்டோ—
இந்த
தொல்லை நெருப்பிலே செல்லுபோல் வேகவும்
வாறுண்டோ

பொல்லாத பாதகர் மல்லர்கள்கையினில் சிக்கினேன்
—சிக்கியும்
புழுங்கவு முன்னாலே நானென்னதான் குறை
செய்தேனோ
கல்லாத வருளம் செல்லாத கோதண்ட பாணியே—
செகக்
காரணனே பரிபூரணனே வந்து காக்க நீ

அண்டமும் மண்ணையு முண்டுமிழ்ந் தருளிய மாயனே
— நின்ற
அகிலமும் புவனமும் அனலுங் காற்று மான மாயனே
— என்று
தொண்டன் புகழ்ந்திட மண்டழல் நிழல்போலக்
குளிர்ந்ததே
சலந்தோய்ந்து முழுகிக்கரைப் பாய்ந்தவர்
போலின்பம் வளர்ந்ததே. 126

விருத்தம்

அக்கினி யாலும் பிள்ளைக்
கவதி யில்லா து நோக்கி
கக்கிய தறுகண் ணாளர்
கனகன்முன் னோடிச் சொல்வார்
திக்கெலாம் வென்ற தோளாய்
சிறுவனுக் குடலி லொன்றும்
தக்கவை யில்லை யென்றுச்
சாற்றினார் போற்றி னாரே. 127

வசனம்

அகோ வாருமையா சுவாமி இரணியேசுவரா! தேவரீர் சொன்ன பிரகாரம் அக்கினியிலே தள்ளினோம். அப்போது பன்னீர்க் குளத்திலே முழுகி யெழுந்தவனைப் போலே எழுந்திருந்தானையா சுவாமி.

### விருத்தம்

சுட்டது மில்லை என்றால்
  சுடுநெருப் பதனைப் பற்றி
கட்டியே சிறையி லிட்டுக்
  கள்வனைக் கடிந்து கொல்ல
அட்டதிக் கனைத்துந் தாங்கும்
  அனந்தனை முதலாய்ப் பாம்பை
தொட்டிட விடுத்தே சீவன்
  துடிப்பிப்பீர் மடிப்பிப் பீரே 128

### வசனம்

அகோ வாரும் பிள்ளாய். அந்த அக்கினி சுட்டுப் போடாமல் படிக்கி வஞ்சனை செய்தானல்லவா? ஆன படியினாலே, அந்த அக்கினியைக் கட்டிச் சிறையிலே போட்டு, அப்பால் இக்குகளைச் சுமந்த பாம்புகள் அனந்தன், தக்கன், சங்கபாலன், குலிகன், கார்க்கோடகன் முதலான அஷ்ட நாகங்களையும் விட்டுக் கடிக்கப் பண்ணி வையுங்கோள் பிள்ளாய்.

அப்படியே நல்லதையா சுவாமி.

அந்தச் சமயத்திலே தேசத்துப் பிடாரன் வருகிற விசித்திர அவதான மெப்படி என்றால்

### தரு — புன்னாக வராளி

பிடாரன் வந்தானே — பாம்புப்
பிடாரன் வந்தானே
அடாது கனவிலு
மெடாத மதியான் முன்
விடாத சினமே
மிகுபட வரவமே கொடு — பிடாரன்

விந்தை கலிக்கிறகும் நெற்றியில்
சந்தை மயில் சிறகு மணிந்து
இந்திர சாலசா தகமு
மெந்திர சாலசா தகமு
மந்திர சாலசா தகமும்
தந்திர சாலசா தகமுமே செய்யும் — பிடாரன்

சங்கவளை கையிற் றொடுத்து — வாயினிற்
சங்கீத மகுடி பிடித்துப்
பங்கையிற் சிங்க முக விருதுகள்
பொங்குபுலி விருதொடு
வெங்கணரவங்கள் — தொங்கலெனவே அணிந்த
— பிடாரன்
மோகன உச்சாடனமுந் தன பணலோலன்

வசிய மாறணமும் — அஞ்சன வாருபெரு குளிகைகள்
நாக மிகக் கிரிகைகள்
சேகர மகிமையொடு
லோகமது சுற்றி வரும் — பிடாரன்

தண்டையொரு வெண்டையமும் கலீர் கலீரென
மண்டியே தானதிர விளங்கிய மண்டலமும்
விண்டலமு மெண்டிசை யகண்டமொடு
முண்டருளு மண்டர்பதி தொண்டர்நிலை கண்டிட
— பிடாரன்

நஞ்சுபொதி சங்கபாலன் குளிகன்
வஞ்சரவில் மந்திரசீலன் வாசுகி
கெஞ்சிடவு மெஞ்சிடவுந் துஞ்சிடவு
விஞ்சையொடு சஞ்சீவிகள் அஞ்சுமிக
மிஞ்சுகுண ரஞ்சித பிடாரன் வந்தானே 129

**விருத்தம்**

சேஷனே முதலா உள்ள
    திசைகளைச் சுமந்த நாகம்
மாஷையாம் படம் விரித்து
    அழன்று மூச்செறிந்து சீறி
ஓடியும் வாலால் சுற்றி
    உயர்மதி தன்னை ராகு
பாடுறத் தீண்டல் போலப்
    பாய்ந்துமேல் தீண்டிற் றன்றே. 130

**வசனம்**

அந்தச் சமையத்திலே அஷ்ட நாகங்களும் படம் விரித்தாடிக் கொண்டு ஆக்கிரமிச்சு மூச்செறிந்து கீழ் நாக்கைப் புரட்டிக் கொண்டு சீறி வாலாலே சுழற்றி அடித்துச் சந்திரனை ராகுவானவன் எப்படிப் பாய்ந்து மறிப்பானோ அப்படியே போல இந்தப் பிரகலாதன் மேலே பாய்ந்து வருகிற விசித்திரம் எப்படி என்றால்

**தரு** **நாகவராளி**

சேடன்படம் விரித் தாடிக் கொண்டு
ஓடி வருகுது பாருங்கோள்
நீடிய நான்மறை தேடியே மலர்ப்பதம்
கூடியே தொண்டன் மீதிலே சேடன்

தக்கனும் விஷமது கக்கிக்கொண்டு — நல்ல
உக்கிரமாய் வருவது பாருங்கோள்
தக்கிட தகுதகு திக்கிடவேணும்நட
முக்கிய மால்தொண்டன் மீதிலே சேடன்

வளைவாய னுளைவா யதிர்ந்து
வருவது பாருங்கோள்
கிளைநான் மறையின் துளிர்மேல் வருமொழி
வளர்மால் தொண்டன் மீதிலே சேடன்

ஆசைகளெங்கும் வீசிய வால்கொண்டு
வாசுகி வருகுது பாருங்கோள்
வீசிலை மீதும் பாசிலை மீதும்
வாசங்கொள் மால்தொண்டன் மீதிலே சேடன்

தங்கிய விஷமொடு பொங்கிய பல்லொடு
சங்கன் வருவது பாருங்கோள்
செங்கண் மாலாசன மங்கை மணாளன்
எங்கினும் புகழ்தொண்டன் மீதிலே சேடன்

நீடிய வாலால் சாடிய கார்க்
கோடனும் வருவது பாருங்கோள்
ஏடவிழ் துளபஞ் சூடிய மாயனை
நாடிய தொண்டன் மீதிலே சேடன்

பதுமனும் விஷமாயப் பதுமனும் கூடியே
குதிகொண்டு வருவது பாருங்கோள்
சதுர்மறை பரவிய அதிவிதப்பரமனை
துதிசெய்யும் தொண்டன் மீதிலே — ஆதிச்
சேடன் படம் விரித்தாடிக் கொண்டு 131

## நீபிதை

அட்டதிசை தாங்குகின்ற நாகமெட்டு
மழன்றழன்று கண்கள் அனல்சொரிந்துநின்று
மட்டவிழும் பசுமலர் தார்மைந்தன்காலில்
மார்மீதில் கைமீதில் தோளின்மீதில்
தொட்டகழுத் தடிமீதில் மெய்யின் மீதில்
தூயபிறை நெற்றியின்மேல் தலையின்மீதில்
வட்டம தாயுடல் விழுங்கித் தீண்டும்போதில்
வாழ்த்துவா னரிநாம மேத்து வானே 132

வசனம்

இப்படியாய் வாராநின்ற அஷ்டநாகங்கள் அழன்று கண்களிலே அக்கினியெழும்பும் படிக்குப் பாய்ந்து பிரகலாத சுவாமியினுடைய சரீரமெல்லாம் சுற்றிக் கொண்டு காலிலேயும் கையிலேயும் பிடரியிலேயும் முகத்திலேயும் நெற்றியிலேயும் தலையிலேயும் அழன்று கொத்தித் தீண்டுகிறபோது அனந்தசயனா. கருடவாகனா அரிஅரிகோவிந்தா, பக்தவத்சலா, பரமதாயாளா, மகாலெட்சுமி சமேதா, நாராயணவென்று; தோத்திரம் செய்கிற விதமெப்படி என்றால்

கோச்சகம்

நரகவழி போகாமல் நல்லடியார் தமக்குப்
பரகதிதந் தாண்டருளும் பங்கயக்கண் மைப்புயலே
விரகமொடு பூமாது மேவுமணி மார்பா
அரிஅரிஸ்ரீ நாராயணா அற்புதனேயெங்கோனே 133

தரு ஆனந்த பைரவி

அரிஅரிஸ்ரீ நாராயணா திருவளர் மணிமார்பா
ஆதியே பரஞ்சோதியே
முரஅரி மதசூதனா சரசிதர நயனா
முத்தனே பரிசுத் தனே அரி அரிஸ்ரீ

சங்கு சக்கரபாணி சுங்கச னாற்றன் லோலா
சற்குணா நல்லநிற்குணா மங்கள சுபாகரனே
எங்கும் நிறைந்த துளபா மாற்றனே செகனாற்றனே
தண்டுளப மாலைமார்பா அண்டங்கள்பணி
சரணாச்சுதானந்தா அச்சுதா புண்டரிகவதனனே
பண்டைமறை துதிசெய்யும் பரதனே கன்னிதனே
அரி அரி ஸ்ரீ

அரவணை தனில் துயின்ற பரமசுந்தர விசாலா
அமலனே சுத்தநிமலனே உரகம் வந்து சீறுவதும்
சரதமோ உனக்கு உண்மையோ வெகுதிண்மையோ

பாந்தள் மீதிலே நடித்த சாந்தனடியா
ரென்றெண்ணிப்
பாராமல் சிந்தை தேறாமல் இப்போ சிந்துதையோ
கண்களனல்
காந்துதே உனக்கு மெங்கோ சிந்தையோ நான்செய்த
நிந்தையோ
பள்ளமான மாய்கைக் குழிக்குள்ளே நான்
விழுந்து துன்பப்படுவதோ வீணே கெடுவதோ
வள்ளலே உன்னருள் செயல் எள்ளளவாகிலும்
மனம் வல்லையோ வெகு தொல்லையோ

முண்டகத்தவி சுகந்த வொண்டொடி மீதிலே
வைத்த மோகனா கருட வாகனா
கண்டர் செயுங் கொடுமை யண்டாம
லெந்தனை யாளும் காரணா பரிபூரணா!

வேதத்தின் மேலே வேதாந்த நாதத்தின் மேலே
விளங்கு மெய்யனே ஆழி கையனே
பாதத் தன்மிக வருட் பிரசாதத்தையென்
சென்னி வைத்தான் பரமனே திருவிக்கிரமனே 134

விருத்தம்

நாதனா ரருளால் நஞ்சு நல்லமு தூறி யூறி
பாதகப் பாம்பு பேழ்வாய்ப் பல்லெலா முதிர்ந்துபோகத்
தீ தொன்று மில்லை யுந்தன் சிறுவனுக்கென்றேயோடி
பாதக ருரைக்க வந்தப் பாதக னுரைசெய் வானே 135

**வசனம்**

அகோ சரணம் சரணமையா சுவாமி. இரணியேசு வரா! தேவரீர் சொன்ன பிரகாரமே அஷ்டமா நாகங்களை விட்டுக் கடிப்பித்தோம். அப்போது அந்த விஷமெல்லாம் மகாசாதனமான ஒள்ளியமான அமுர்த விந்து போலே தெறித்துச் சர்பத்தினுடைய பற்களெல்லாம் உதிர்ந்து போச்சுதய்யா.

**விருத்தம்**

கிட்டிசை யதனைத் தாங்குங்
 கசேந்திர னழைப்பித் திப்போ
வாட்டமில் லாத பாலன்
 மடிந்திட விடுவீ ரென்ன,
ஓட்டமா யோடி வந்து
 உள்ளமும் பொங்கி மண்டி
கோட்டினாற் குத்திப் பாயக்
 கொத்திமேல் கதிக்குந் தானே 136

**வசனம்**

அகோ அப்படியானால் வாருங்கோள் மல்லரே! கீழ்த் திசையைத் தாங்கப்பட்ட அயிராபதமென்னும் வெள்ளை யானையை அழைப்பித்து கிரிதாக்கி காலினாலே இடற விட்டுக் கொல்லுங்கோள் பிள்ளாய்.

**வசனம்**

அப்படியோ நல்லதையா சுவாமி.

அந்தச் சமையத்திலே மதயானை வருகிற வசித்திர மெப்படியென்றால்

தரு சங்கராபரணம்

மதயானை இதோவந்ததே சினங்கொண்டு
மதயானை இதோ வந்ததே

மதயானை இதோ எங்கும்
மதமாக ஓடி வந்து
வந்து பிறவங்கி விந்தை
மைந்தன் முகம் நாடி (மதயானை)

வாலைவீசி முறுக்கிக் கையினாலே
மலை மரங்களை நொறுக்கி
ஆலகால அனல் போலே - கொடுமையன்றி
ஆக்கிரமிச் செழுந்து சீறி
தாக்குவே னெனவே மண்டி
(மதயானை)

காலைநிலம் பறித்து முறம்போலே
காது ரெண்டையும் நெறித்து
நாலு பிறைகள் போலே
நாலு கொம்புகள் மின்ன
நக்கன் வெள்ளிமலை காலால்
மிக்கவே நடந்ததென (மதயானை)

மீறி மீறிச் செருக்கி
யாறு போலே பெருக்கி
வீறுள்ள இரணியன்
சீறுவானென வஞ்சி
மிக்கச் சுழன்ற கண்கள்
கெக்கச் சிவந்து மிஞ்சி

### விருத்தம்

மூர்க்கமாய் வந்த யானை
மூதண்ட உலக மெல்லாம்
ஏர்க்கவே வயிற்றில் வைத்த
இறையவன் பாதத் தியானம்
மார்க்கமே மிகுந்த செல்வ
மைந்தனைப் பார்த்து மிக்க
ஆர்ப்பரித் திடித்து நின்ற
அதனைப்பார்த் திதுசொல் வானே 138

### வசனம்

அகோ இப்படி வந்த ஆனையானது வாலைவீசி முறுக்கி ஆக்கிரமிச்சு இடிமையைப்போலே கர்ச்சித்து வருகிறதைப் பார்த்துப் பிரகலாதன் தோத்திரம் செய்கிறவிதமெப்படி யென்றால்,

### கொச்சகம்

நாற்கடல் சூழ் மண்ணுலகும் நாளா
முலகமெல்லாம்
தீர்க்கமுட னுண்டளந்த செவ்வாய்த் திருமாலே
மார்க்கமிகு தொண்டர் நெஞ்சில் வாழ்வது
போலெந்நாளும்
பாற்கடலின் மிசையழகாய்ப் பள்ளிகொள்ளு
மெங்கோனே 139

### தரு — நீலாம்புரி

பாற்கடலி லனந்தன்மேல் ஏற்கத் துயின்றருளும்
பங்கயச்செங் கண்ணானே அரி அரியே
மாற்கமாம் தொண்டர்மனம் தீர்க்கமா
யுரைக்கின்ற
மாதவா கேசவா அரி அரியே

மூந்த முதலையைக் கொன்று வந்துநீ
ரெட்சித்த ஆனை
முனிந்து சுழித்துக் கொண்டு அரி அரியே

இந்த நாளில் வஞ்சகரா லென்னைக் கொல்ல
வெண்ணி
இதோ வந்து நிற்குதையோ அரி அரியே

திருமாலே நீயென்னுமொரு சிங்கமென்கமல
சித்தத்துள் ளேயிருக்க அரி அரியே
வெருவாமல் யானை யென்முன் வருவதுதா னென்ன
விதியேதோ நானறியேன் அரி அரியே

எல்லா வுருவுங் கொண்ட தொல்லேனேநீ
இந்த ஆனையுருவங் கொண்ட அரி அரியே
பொல்லாத பாவியென்றே கொல்லவே நீ வந்தால்
புண்ணியம் நான் செய்ததல்லோ அரி அரியே

அடியேன் செய்வினைதானோ கொடிதான
ஆனையுருவாகி வந்ததுவோ அரி அரியே
படிமீதி லென்னைக் கொல்ல முடுகி வருவதுநீ
பார்த்துக் கொண்டிருப்பாயோ அரி அரியே

எவ்வுயிர்க்கு முயிரான தெய்வமே பரமான
யேக நாயகமூர்த்தி அரி அரியே
அவ்வுயிர்க்குள் நாமொருவனொவ்வுமோ
வொவ்வாதோ
அய்யனே மெய்யனே அரி அரியே 140

விருத்தம்

ஆனை இந்தவிதம் வந்து முன்னேநின்று
அய்யன் முகுந்தனைப் பார்த்து வணங்கியோட
சனர் வந்து மைமந்தன்மேல் முடுகிவிட்டார்
இருகோடும் வாழைத் தண்டெனவே பிய்த்துப்

போனது கண்டிந்த வதிசயங்கள் நாங்கள
　　பூமியிலுங் கண்டதில்லை யெனவே யோடி
ஈனமொன்றும் நின்மகனுக் கில்லையென்று
　　இணங்கினா ரவன்பாதம் வணங்கி னாரே. 141

வசனம்

அகோ வாருமையா சுவாமி இரணியேசுபரா! தேவரீர் சொன்ன பிரகாரம் அயிராவதமென்னும் வெள்ளை யானையைக் கொண்டுவந்து பிரகலாதன் மேலே விட்டோம். அது அவன் முன்னே போய் தெண்டன் பண்ணிக்கொண்டு போச்சுது. அப்பால் நாங்கள் ஓடிப் பிடித்து அடித்து முடுக்கி விட்டுப் பாயப்பண்ணினோம். பாய்ந்த மாத்திரத்திலே உடம்பிலே தைக்காமல் வாழைத் தண்டுகள் போலே கொம்பெல்லாம் முரிந்து போச்சுதைய்யா சுவாமி.

விருத்தம்

மல்லரே யவனை இப்போ
　　மலைபோலும் வட்டப் பாராங்
கல்லிலே பிணைத்துக் கட்டிக்
　　கடலிலே அழுத்திப் போட்டு
ஒல்லையி லோடி வந்து
　　உற்றது சொல்வீ ரென்ன
நல்லதென் றவர்கள் கூடி
　　நலிந்திட்டார் மலிந்திட் டாரே. 142

வசனம்

அகோ வாருங்கோள் மல்லரே! இந்தட்சணம் கல்லிலே கட்டிக் கப்பலிலே ஏற்றி நடுக்கடலிலே போட்டு வந்து சமாசாரங்களைச் சொல்லுங்கோள் பிள்ளாய்.

அப்படியே நல்லதையா சுவாமி.

### விருத்தம்

யோசனை யகல நீள
    முயர்மலை பிடுங்கிப் போட்டுப்
பாசத்தா லேகை கால்கள்
    பதைக்கவே யிறுகக் கட்டி
பேசிய கப்ப லேற்றிப்
    பேருக்கவே விளைத்தா ரந்த
வீசலைத் துயில்வோன் பாதம்
    விதித்திட்டான் துதித்திட் டானே! 143

### வசனம்

இப்படிச் சொன்ன மாத்திரத்திலே யோசனை யகலமும் நீளமும் பொருந்திய மலையைப் பிடுங்கி வந்து அதன் பேரிலே கிடத்திப் பாசத்தினாலே கையும் காலும் அசையாமல் கட்டிக் கப்பலிலே ஏற்றி நடுக்கடலிலே கொண்டு போய்க் கவிழ்க்கிறபோது, அந்தக் கடலிலே ஆதிசேஷன் பேரிலே ஆனந்த நித்திரை செய்யாநின்ற நாராயண னுடைய திருவடித்தாமரையைத் தெப்பமாக பிரகலாத சுவாமி தோத்திரஞ் செய்கிற விதமெப்படி யென்றால்,

### கொச்சகம்

விரியுமைம் பூதமுமாய் மேவுங் கரணமுமாய்
உரியகுண முண்டாகி யோங்கிரெண்டு மொன்றாகித்
தெரியுமறைப் பொருளாய்ச் சித்தாகி சிற்குணமாய்
அரிஓம்அரி நாராயணனே அற்புதனே யெங்கோனே
144

தரு மத்தியமாவதி ராகம்

அரிஓம்அரி நாராயணா அமலாநித்திய நிமலா
கருமாமுகில் திருமேனிய கண்ணாமணி வண்ணா
அருமாமறைப் பொருள்மேவிய அருவேயரு வுருவே
திருமாதுறை மார்பாசெழுந் தீபாபத்ம நாபா

உந்தன் செயலறியேன் பொருள்குறியேன்
வெகுசிறியேன்
எந்த விடர்தீர்ப்பா ரினியாரோ அறியேனே
கந்தந் தரு துளபம் புனை கருணாநிதி வருணா
அந்தத் தறுகணை வெஞ்சிலையாளா கதைவாளா
கடல்மேல் அரவணை மீதினில் நிற்கு ஞாயிறுபோல்
மடமேவு கண்டுயில் சார்ந்திடுமாலே யருளாலே
கடல்மேல் பெருந்திடர்மேல் கட்டிக் கவிழ்த்தால்
மிதந்திடவே
அடியார்க்கருள்மாலே யுன்போ நரிலானு மானேனே

மேல்பொங்கிய கடல்மீதிலே ஆலந்தளிர் மேலே
கோலங்கொடு மலர்கண்டுயில் கூரும்பசுங்
குழந்தாய்
காலந்தனை யொப்பார் கருங்கடலில் கவிழ்ந்தாலும்
போலே மிதந்திட யானொரு புனிதனானேனோ

அடியா ரடியார் தங்களுக்கன்பும் பணிவிடையும்
யடிமீதி லெள்ளள வாகிலும் பண்ணுந்திற மறியேன்
கொடியா யிதுகுறியா சொலும்குண
மெதுவெந்அார்
நெடியா யுந்தனடியேன் மனநிலை நீறியயாயோ! 145

### விருத்தம்

ஆலிலை மீதே நீரி லச்சுதன் விழுந்தாற்போலே
பாலனு மலையினூடே பாங்குடன் மிதந்தேயேறச்
சாலவே மல்லரோடிச் சாற்றவும் இரணியேசன்
ஞாலமும் விசும்பு மஞ்ச நடுங்கினான்
கலங்கினானே 146

### வசனம்

இப்படியாய்ப் பிரகலாத சுவாமி தவுத்தியம் செய்த மாத்திரத்திலே முன்னாலே யுகாந்தப் பெருக்கிலே நாராயணன் ஆலந்தளிரின்பேரிலே குழந்தையைப்போலே தவழ்ந்து எப்படி மிதந்தாரோ அப்படிப் போலே அந்தக் கல்லே ஒரு ஆலந்தளிராகவும் பிரகலாத சுவாமி நாரா யணனைப் போலே மிதந்து கல்லானது கரைமேலேறின மாத்திரத்திலே, மல்லரானவர்கள் ஓடி, ராசாதிராசனே இரணியேசுபரனே! சரணம் சரணமையா சுவாமி!தேவரீர் சொன்ன பிரகாரமே கருங்கல்லிலே கட்டிக் கப்பலிலே யேற்றி நடுக்கடலிலே கவிழ்த்தோம். அப்பவும் அவன் செய்கிற தியானத்தினாலே க்ஷணப்போதிலே தெற்பை போலே மிதந்து கரைமேலேறினானையா சுவாமி! என்று சொன்ன மாத்திரத்திலே அப்பால் மகா கோபம் பிரவே சித்துச் சொல்லுகிறவித மெப்படியென்றால்,

### விருத்தம்

பூட்டியகற் காணத்தி லெடுத்துப் பேர்ட்டுப்
புண்ணீரும் நெடுந்தசையும் எலும்பும் வேறாய்
ஆட்டியுயிர் போக்குவிப்பீ ரென்ன வேதான்
அடர்மல்லர் மணிக்கயிற்றா லிறுகக் கட்டிப்
போட்டு உலக்கையைநாட்டிக் கொத்தி மாட்டிப்
பொருந்திவலம் பையிரட்டை யானை பூட்டி
யோட்டி யறைத் திடும்போதுபிரக் லாதன்
உன்னினான் திருநாமம் பன்னினானே. 147

### வசனம்

அகோ! வாருங்கோள் மல்லரே! கற்காணத்திலே எடுத்துப் போட்டு இரத்தம் வேறு மாமிசம் வேறு எலும்பு வேறாக ஆட்டி அவனுடைய உயிரைக் கொல்லுங்கோள் பிள்ளாய்!

அப்படியே மகா பாக்கியமையா சுவாமி.

அந்தப் பிரகாரமே கற்காணத்தை நாட்டி அதன் பேரிலே வச்சிர உலக்கையை நாட்டிக் கொக்கி மரத்தைக் கோத்து வலம்பையை யிறுக்கி இரட்டை யானையைக் கட்டியோட்டுகிற கற்காணத்தினுடைய சத்தம் பிரம லோகம் செவிடுபடும்படியாய் ஆட்டி அறைக்கிறபோது பிரகலாத சுவாமி தவுத்தியம் செய்கிறவித மெப்படி யென்றால்,

### கொச்சகம்

பரியரவம் பூண்டெழுந்து பார்மேற் கலியுகத்தில்
தரியலரை வென்றிடுவான் தாங்குந் தயாநிதியே
எரியனல் கால மண்ணுலகமெட்டா வெளியாகும்
அரி ஓம் நாராயணனே அற்புதனே யெங்கோனே.

### தரு

அரி அரி அரி ஓம் நாராயணா
அச்சுதா னந்தா வேத பாராயணா
புரகலி தீர்க்குங் காரணா புண்ணியா
புருஷோத்தம ஞான பூரணா! அரி அரி அரி

ஆர்க்குஞ் சகாய னாகி நின்றாயே — ஆக்கி
அழிக்குமாறு நீராக்கிச் சென்றாயே
போக்கும் நாராக்கிச் சென்றாயே — உந்தன்
புதுமையாரறிவாரோ வென்றாயே! அரி அரி அரி

அடிமை படைப்பதுனக் கருமையோ
ஆளாவத் தருவதுன் பெருமையோ
கொடியன்செய் பாவத்தை ஒருமையோ — இந்தக்
கோலஞ் செய்தா லென்ன வருமையோ? அரி அரி அரி

கல்லாதவன் நெஞ்சம் புன்மையோ — என்னைக்
கற்காணத் தறைப்பது நன்மையோ
எல்லாம் பார்த்திருப்பது வன்மையோ — இனி
என்செய்வே னுன்னருள் தொன்மையோ
அரி அரி அரி

கோடிகோடி சூரியப் பிரகாசனே — தொண்டர்
குடி கொண்டருள் வைகுந்த வாசனே
தேடினானுனைக் காணா நேசனே — உந்தன்
சித்த மென்பாக்கியம் ரிஷி கேசனே
அரி அரி அரி 149

விருத்தம்

ஆடிய செக்கடி யின்வேர் பரிந்து சாய்ந்து
அறைக்கும் உலக்கையும் முரிந்து கொக்கிதுள்ளி
ஓடிவலம்பையும் பரிந்து பூட்டும் யானை
ஒண்கழுத்தில் நெகத்தடியும் முரிந்து தூளாய்

நீடு மல்லர்மேல் விழுந்து மார்புந் தோளும்
நெறிந்தவர்கள் பயந்தொடுங்கிப் பிரகலாதன்
ஏடவிழ் பூந்தாரானை முகத்தை நோக்கி
ஏத்தினார் முறைசொல்லிப் போற்றினாரே. 150

வசனம்

இப்படியாகப் பிரகலாத சுவாமி தோத்திரம் பண்ணின மாத்திரத்திலே ஆடப்பட்ட செக்கினுடைய வேர் பறிந்து சாய்ந்து உலக்கையும் முரிந்து, கொக்கி

மரமும் துள்ளி வலம்மையும் பரிந்து, ஆனையின் கழுத்தும் மற்றும் நுகத்தடியும் முறிந்து மல்லர்கள் மேலே விழுந்து மண்டைகளுடைந்து மார்கள் நெறிந்து போன மாத்திரத்திலே, இது நமக்கு என்ன ஆகாத காலமோ வென்று நடுங்கிப் பிரகலாத சுவாமியைப் பார்த்து வணக்கத்துடனே சொல்லுகிற விதமெப்படி என்றால்,

### விருத்தம்

ஓதிநீ கேள் பிரக லாதா மணியே வானாலெதிந்து
நெடுமலைக் கரட்டில் கல்மேல் முள் மேல்
மீதுமுட்டியுங் கனலில் போட்டுப் பாம்பின்
விஷமீது ஆனையின் காலிடறவைத்தும்
ஓதநெடுங் கடலில் விழக் கவிழ்த்துஞ் செக்கில்
உடலுறுப்பு வேறாக அறைத்தும் சற்றே
வேதனையில் லாதிருந்த விபர மெல்லாம்
விளம்புவா யெமக்கென்று விளம்பு வாரே. 151

### வசனம்

அகோ வாருமையா பிரகலாதரே! வாள்முதற் கொண்ட ஆயுதங்களாலே தேவரீரை வெட்டியும் மலையின் மீதிலேற்றி கல்லிலேயுங் கரட்டிலேயும் உருட்டி, அக்கினிக் குழியிலே தள்ளியும் அஷ்டமா நாகங்களை விட்டுக் கடிப்பித்தும் அஷ்ட திக்கெசங்களை விட்டு முட்ட வைத்தும் மலையிலே கட்டி நடுக் கடலிலே கட்டிக் கவிழ்த்தும் கற்காணத்திலே அறைத்தும் அனேகமான வேதனை செய்தோம். அந்த வேதனை யெல்லா மெங்களுக்கே உண்டாச்சுது. தேவரீர் சரீரத்துக்கு ஒரு பயமுமில்லாதிருந்தது. அது என்ன மகத்துவத்தினாலேயோ! அந்த விபரமெல்லாம் எங்களுக்குத் தெரியும் படியாய்ச் சொல்ல வேணுமென்று கேட்கிற விசித்திர மெப்படி என்றால்,

மல்லர் தரு ராகம் காம்போதி

ஒட்டும் பாழையுங் கூறி
விட்டெறிந்த வாள்க ளெல்லாம்
கெட்டு முறிந்தகதை சொல்லாய்
இஷ்ட மைந்தனே

விரகனாதன்

தொட்டு விடும் பஞ்சாயுதன்
எட்டெழுத்து மந்திரவாளால்
பட்டு முறிந்ததல்லோ
துஷ்ட மல்லரே

மல்லர்

மூக்கண் ணுருத்திரன் கையில்
உக்கிர சூலம்விட்டால் — நீயும்
நெக்கி டாதவிதம் சொல்லாய்
முக்கிய மைந்தனே

விரகனாதன்

மூக்கண்ணன் இடர் தீர்த்த
விக்கிரமன் சிந்தை யிருந்தால்
தக்கவை வந்திடாதல்லோ
துக்க மல்லரே

மல்லர்

மஞ்சடரும் மலைமீதே
துஞ்ச உருட்டவும் மேனி
அஞ்சிடாத விதம் சொல்லாய்
கொஞ்சு மைந்தனே

**பிரகலாதன்**

நஞ்சணைமேல் பள்ளி கொண்ட
செஞ்சொ லருளே யெனக்கு
பஞ்சணை யானது வல்லோ
வஞ்ச மல்லரே

**மல்லர்**

வடவனல் போலே மீறும்
கொடிய நெருப்பில் தள்ள
மடியாத வகை சொல்லாய்
வடிவுள்ள மைந்தனே

**பிரகலாதன்**

நெடிய மாயவ னருள்
படியும் பரமானந்தக்
கடலி லமர்ந்திட்டேனல்லோ
நொடியில் மல்லரே

**மல்லர்**

முடிக்கும் பாம்புக ளெட்டுங்
கடிக்கவும் உந்தன் மேனி
துடிக்காத வகை சொல்லாய்
வடிக்கும் மைந்தனே

**பிரகலாதன்**

நடிக்கும் பாம்பணை யானைப்
படிக்கும் புகழமுதங்
குடிக்கும் மகிமை யல்லோ
துடிக்கு மல்லரே

**மல்லர்**

அங்க மீது பாயவிட்ட
வெங்கண் யானை தாழ்ந்து
மயங்கி யோடும் விதம்சொல்லாய்
இங்கு மைந்தனே

**பிரகலாதன்**

வெங்கராவை வதை செய்த
செங்கண் மாயன் நற்றூய
சங்க நாதத்தினா லல்லோ
பங்க மல்லரே

**மல்லர்**

செப்பிய மலையிற் கட்டிக்
குப்புறக் கவிழ்த்து நீரில்
எப்படி மிதந்தாய் சொல்லாய்
ஒப்புமை மைந்தனே

**பிரகலாதன்**

எப்புவி உண்டாலின் முன்னாள்
அப்புவில் மிதந்தோன் பதம்
தெப்பமான செய லல்லோ
இப்போ மல்லரே

**மல்லர்**

தந்திரத்தா லறைந்திடும்
எந்திரகற் காணமது
நைந்து போன வழிசொல்லாய்
முந்து மைந்தனே

பிரகலாதன்

இந்திர சால சாதமோ மாயன்
மந்திர சக்கரத் தினால்
சிந்தி முரிந்த தல்லோ
கந்தை மல்லரே

மல்லர்

காட்டுலா யலங்கன் மார்பன்
பூட்டுமருள் கொண்டு மிந்த
கோட்டியென வந்தது சொல்லாய்
நாட்டில் மைந்தனே

பிரகலாதன்

காட்டுவானும் இன்ப துன்பம்
மாட்டுவானும் மாயன் வினை
யாட்டினால் வந்ததுவல்லோ
வாட்ட மல்லரே

மல்லர்

உந்தனை இவ்விடர் செய்து
சிந்தை அழித்தோமே நாங்கள்
உய்ந்து போக வழி சொல்லாய்
வந்த மைந்தனே

பிரகலாதன்

உய்ந்து போகும்வழி வேண்டில்
எந்தன் மொழிதலைக் கொண்டால்
தந்திடுமே இன்ப மல்லோ
சொந்த மல்லரே.

வெண்பா

பேணுங்கோள் தப்பிப் பிழைக்கவென் றால்
என்னன்பு
பூணுங்கோள் என்சொற் புகலுங்கோள்—
ஊணுங்கோள்
அஞ்சக் கரத்தானை அய்யந் தவிர்த்தாண்ட
அஞ்சக் கரத்தா னடி. 153

வசனம்

அகோ வாருங்கோள் மல்லரே! தாங்கள் பிழைக்கும் பொருட்டு சொல்லென்று கேட்டபடியினாலே சொல்லு கிறேன். சொல்லுகிற வாக்கியத்தை உறுதியாகப் பிடித்துக் கொள்ளுங்கோள். அதென்ன வென்றால், பஞ்சாட்சர முடைய பரமசிவன் பிச்சையைத் தவிர்த் தருளிய சக்கராயுதனாகிய நாராயணனுடைய பாதாரவிந்தத்தை உள்ளன்பினாலே பூசனை செய்யுங்கோள் மல்லரே.

வெண்பா

அடியா ரடியேன்யான் யான்என்றார் பாவம்
பொடியாங் கதியாம் புகழாம் — கொடியாரே
அல்லீரே நீங்கள் அரிநாமம் ஒன்றுசொல்ல
வல்லீரேல் யான்வணங்கு மால். 154

வசனம்

பின்னையும் எப்படி என்றால், நீசரானாலும் அடியார் களுக்கடியான் ஆவேனென்று வசனிக்கப்பட்டார்களோ, அவர்களுடைய பாபங்களெல்லாம் பொடிப்பட்டுப் போய் சாயுச்சிய பதவியென்னும் பிறவா நெறியை அடை வார்கள். அதுவுமல்லாமல் உலகத்திலே சகல சம்பத்தையும் அனுசரித்து புத்திரமித்திரகளத்திர பவுத்திரர்களுடனேயும்

சகல போக்கியங்களையு மடைவார்கள். ஆதலால் நாராயணனுடைய ஆயிரம் பெயரிலே ஒரு பெயரே யாகிலும் நாவினாலே வசனித்தீர்களேயானால், நீங் களத்தனைபேரும் பாவிகளல்ல. உங்களைப் பரம பாகவதர்களென்று சொல்லப்படும். பின் அடியேனுடைய சிரசின் பேரிலே திருவடி பாவித்து ஆளாநின்ற ஸ்ரீமன் நாராயணனென்றும் சொல்லப்படும். மல்லர்களே.

### விருத்தம்

நெடியவலற்கன்பு பூண்ட நிமலனாம் பிரகலாதன்
அடியவன் சொல்லக்கேட்டு அகங்குழைந்தன்பு பூண்டு
தொடையது நடுங்கிக் கைகால் சேர்ந்து
—நாவுலர்ந்து ஓடி
இடியென இரணியே சர்க்கிடித் திட்டார்
துடித்திட் டாரே. 155

### வசனம்

நெடியவனாகிய ஸ்ரீமன் நாராயணமூர்த்திக்கு அன்ப னாகிய பிரகலாத சுவாமி திருவாய் மொழியைக் கேட்டு, மல்லர்கள் கண்களுப் மனங்களு மகிழ்ந்து இந்தச்சமாசாரம் இரணியேசுபரனுக்கு என்ன உபாயமாகச் சொல்லுவோம். இதைச் சொன்னோமே ஆனால், நம்முடைய சிரசாக்கினை செய்து போடுவானென்று பயந்து, கைகால் சோர்ந்து, தொடை நடுக்கமெடுத்து, வாய்காய்ந்து, நாக்குக் குழறி, ஓடிப் போய் இரணியனுக்குச் சொல்லுகிறவிதம் எப்படி யென்றால்,

### விருத்தம்

தரணி ஈரேழுங் காக்கும்
தரளவெண் குடையாய் போற்றி
இரணியராசே யின்னம்
எங்களை விடுத்தா யானால்

மரணமே சித்தி யாகும்
வலிந்துநாம் தப்பி வந்தோம்
கருணையாய் மைந்தன் சேதி
காட்டுவோம் கேட்டி வீரே. 156

வசனம்

அகோ சக்கிரவாள புவனங்களும் ஈரேழு பதினாலு லோகங்களுக்கும் ஏகச் சக்கிராதிபதியாகிய இரணியே சுவரா! சரணம் சரணமையா! சுவாமி! தேவரீர் சொன்ன பிரகாரம் கற்காணத்திலே போட்டு அறைக்கிறபோது அந்தக் கற்காணம் அச்சுவேறு ஆணிவேறாக முறிஞ்சு விழுந்தது. அனேக மல்லர்கள் மடிந்துபோனார்கள். நாங்கள் எங்கள வல்லமையாலே தப்பிப் பிழைத்தோம். இனிமேலும் எங்களைத்தானே போகச் சொன்னீர்களே யானால், எங்களுயிர் தப்பிப் பிழைத்து வரமாட்டோம். ஆகையால் அந்த அதிசயமும் பிரகலாதனுடைய மகத்துவமும் சொல்லுகிறோம். கேளுமையா.

தோடி ராகம்

சொன்னபடி நாங்க ளென்செய்தும் இவனுடல்
தொலையாமலே உயிர்நிலை ஆச்சே
இன்னமும் தண்டனை செய்யச் சொன்னால்
இனிமேல் எங்களாலாகுமோ மானபங்கமாச்சே.

விட்ட விட்டகணையெல்லாம் கெட்டும்
உதிர்ந்தே எதிர்ந்தே
மேல் விழுந்ததே இந்திர சால விந்தையே
பட்ட பாடெல்லாம் உனக்குக் கட்டுரைக்க முடியாது
பார்த்தபோதல்லோ மெய்யாய்த்தோற்று மெந்தையே.

அட்டியில்லா உடல்எழுத்தில் எட்டையும்
பனிரெண்டைம்யு
அய்யிரண்டையும் ஆறையும் பையஓதவே
ஒட்டி இறுக்கிய பாசக்கட்டுகளெல்லாம் அறுந்து
ஒன்று நூறானது கண்டோ மின்று போதவே.

முன்னமோதும் உயிரெழுத்து பன்னிரண்டாம் உடல்
—எழுத்தில்
மூணெழுத்தை நாவினாலே ஊண வோதியே
அன்னவன் பிர்கலாதன் உன்னும்போது
படையெல்லாம்
அழலின் மேலே இறைத்த விழலின் சேதியே.

கைமுறிந்தோம் கால்முறிந்தோம் மெய்முறிந்தோம்
மறைக்கும்
கல்காணம் முறிந்தது சொல்ல வேணும்பொய்யா
அய்யனே அவனால் நாங்கள் நையும்
வாதையிலும் நீரே
ஆக்கினை செய்வதே நல்ல யோக்கியமே.

அண்டரண்ட புவனமு மெண்டிசை யகண்டமும்
ஆண்டருளி நெடும்புகழ் பூண்ட நேயனே
தண்டரணமணி மார்பா சண்டவுத்தண்ட
கெம்பீரா
சரண்முந் தன்சரணமெங்கள் இரணியராசனே.
157

### விருத்தம்

வடித்து வடித்திந்த வகைமல்லர் கூற
வாயூடும் செவியூடும் மூக்கினூடும்
பொடித்த கனல்விழித் தொழுகும் கண்ணூடும்
புகையெழுந்து அண்டமெல்லாம் பாய்ந்து விம்மி

அடித்த கடைநாளெழும்பும் புகையோ வென்னச்
சுருதிநான்முகனும் மனத்தெண்ணங் கொள்ள
இடித்த இடிபோல் வாயுலறி ஆர்த்து
எழும்பினான் இரணியன் நெஞ்சமுங்கினானே. 158

வசனம்

இப்படியாக மல்லர்கள் சொல்லி முறையிட்ட மாத்திரத்திலே, வாயிலேயும் செவியிலேயும் மூக்கிலேயும் கண்ணிலேயும் புகையானது அண்ட கடாரமெங்கும் எழும்புகிறபோது சத்திய லோகத்திலே விளங்கா நின்ற புகையோ இதுவென்று ஆச்சரியம் கொள்ளும் படியாய் இடியைப் போலே வாய்விட்டுக் கர்ச்சித்துப்புலம்புகிற விதமெப்படி யென்றால்,

தரு — எதுகுலகாம்போதி

துர்ச்சனப் பிள்ளையாலேமுறச் செகங்களெங்கும்
என்புகழ்க்குக் கேடாச்சுதே அய்யோ
கொச்சையில்லாக் குலத்தை நிச்சயமாயழிக்குங்
கோடாலிக் காம்பு போலே ஆச்சுதே அய்யோ

நண்டு சிப்பிவேய் கதலி கொண்ட கருவாலது
நாசமாகு மென்ற வகை போலே
துண்டனிவனால் எந்த மண்டலமெல்லாம் பரவிச்
சொல்லு மொழித்தானினிமேலே அய்யோ

அமரர்முத லெல்லோருக்கும் விமலனாகியவெணக்கு
அவமானமு மிவனாலே வரலாமோ அய்யோ
சமயமென் அணைக்கஞ்சி நிமிஷத்திலே யொளிக்கும்
சதிமூவர் கேட்டால் வசைதாளலாமோ அய்யோ

சொல்லுவே னென்றபோது கொல்லாதென்றே
விலக்கிக்
கூறும் லீலாவதிக்கே வசையாச்சே அய்யோ
அல்லதென்று கேளாமல் கொல்லுமென்றேனேகன
நாரியற்கு மெத்த நகையாச்சே அய்யோ

கடலும் மல்லரும் பாம்பும் விடுகளிறும் நெருப்பும்
கரியாமல் தனக்குறவாய்ப் போச்சே அய்யோ
நெடியகற்காணமும் அடியோடே முரிந்ததே
நினைந்துகொண்டால் இதுவும் பெருமூச்சே
அய்யோ 159

## விருத்தம்

தனியிருந்து இவ்வாறு எண்ணி எண்ணி
தனையனுயிர் கொல்லாமல் விட்டோமாகில்
இனியெனது உயிர்க்கலறி இவன் தன்னாலே
எய்துமென நினைந்து கொலுவதனில் வந்து
முனைபெருஞ் சம்பாசூரன் தீபக் கண்ணன்
முதலான மந்திரியர் தம்மைக் கூட்டி
மனதிலுள்ள கவலைஎல்லாம் சொல்லிவீண்பா
வனை செய்வான் மந்திரி யோசனை
செய்வானே. 160

## வசனம்

மல்லரானவர் இந்த விபரம் சொல்ல, இரணியேசுவரன் மனதிலே யோசனை பண்ணிச் சம்பாசூரன், தீபக் கண்ணன் முதலான ஐந்நூறாயிரம் கோடி மந்திரிமாரை அழைத்து ஐம்பதினாயிரம் யோசனை யகலம் பொருந்திய மண்டபத்திலே இருந்துகொண்டு மந்திரிகளைப் பார்த்துச் சொல்லுகிற விதமெப்படி என்றால்,

56

வாருங்கோள் மந்திரி மார்களே — இவனை
மடிக்கவே வகைசொல்லு வீர்களே
பாருங்கோ ளிவன் மாயன்பேரும் மூருஞ்சொல்லிப்
பழித்தானே யொளித்தானே பதைத்தானே
மிகத்தானே — வாரும்

படையெல்லா மிவன்மார்பில் விட்டெறிந்ததே
பாணமு மறைக்குங் கற்காணமு முறிந்ததே
விடமெல்லா மமுதாச்சே கடலெல்லாந் திடலாச்சே
வீணாச்சே வீராச்சே தூராச்சே — வாரும்

தேவர்கள் நகைசெய்ய லாவது மாச்சுதே
திருமாலே இவனாலே பரமாகிப் போச்சுதே
பாவிஉயிரைக் கொல்ல எவரு மில்லையே
பாடாச்சே கேடாச்சே பழிப்பாச்சே
இழிப்பாச்சே — வாரும்

அளந்தாலு மொருசாண் வளர்ந்தது காணுமோ
அவன்சொல்லே மெய்யாகத் தத்துவங்கள்
தோணுமோ
தளங்கொண்டு யுத்த களங்கொண்டு செயிப்பதோ
சக்கியமோ முக்கியமோ தருமமோ கருமமோ
(வாருங்கோள் மதி மந்திரி.) 161

விருத்தம்

கெடுவிதி கண்காணாமல் கீழ்மையோன் கனகன் கூறப்
படுவிதி மந்திரியான பாவியாஞ் சம்பா சூரன்
தொடுகழல் வணங்கி நின்று சொல்லுவா
னெமனை யிப்போ
கடுகவே யழைப்பித் தென்றன் கைவசஞ்
செய்குவாயே 162

வசனம்

அகோ இப்படிச்சொன்ன இரணியசூரனைப் பார்த்து மந்திரியான சம்பாசூரன் சொல்லுகிறான். சரணம் சரணமய்யா சுவாமி. இப்படி தேவரீர் ஆலோசனை செய்ய வேண்டியதென்ன? இந்த க்ஷணம் எமனையழைப் பித்துப் பாசத்தினாலே கட்டிக் கொண்டு எமலோகம் கொண்டுபோய்ச் சேர்க்கச் சொல்லுமையா சுவாமி.

விருத்தம்

கொடியகஞ் சுகியே கேளாய்
கணத்தினில் எமன்பா லோடி
நொடியினி லழைத்தே என்முன்
நோக்கவே வருவாய் என்ன
முடுகியே அவனும் சென்று
மொழியவே அவனு மாழ்கி
தொனை நடுங் கிடவே ஏமன்
தோன்றினான் தோன்றி னானே. 163

வசனம்

அகோ வாரும் பிள்ளாய் தூதகஞ்சுகி! இந்தக்ஷணம் எமனை அழைத்து வாரும் பிள்ளாய்.

அப்படியே நல்லதையா சுவாமி அந்தச் சமயத்திலே எமதருமராசன் வருகிற விசித்திரமெப்படி என்றால்,

தரு சௌராஷ்டகம்

எமதன்ம ராசன் வந்தானே— கீர்த்தி
அமையு மிரணிய பூமன் சமூகத்திலே
எமதன்ம ராசன் வந்தானே

இளம்பிறை போலவே வெண்பல்லும் — மண்ணி
லெவ்வுயிரையும் வாயில் கவ்வியே மெல்லும்
தளங்கொண்ட யிடிபோல சொல்லும் — இந்தத்
தரணியில் கொடியோரைத் தருமத்தால் வெல்லும்
எமதன்மராசன்

எருமைக் கடாவினிலேறி நம்மை
என்னதுக் கழைத்தா னென்றெண்ணியே — கூறி
கருமலை போலவே மீறி நீண்ட
கால பாசமுந் தண்டும் சூலமுமேந்தி
(எமதன்ம)

அங்குச வாளுடனீட்டி வேலு மணி
மழுவளைதடி துணிவு செய்தோட்டு
இங்கர ணைவரும் பூட்டி எங்கும்
கெடிகொண்ட யிரணியன் கோடிதைப் பாராட்டி
எமதன்ம ராசன் வந்தானே.

விருத்தம்

இரணிய ராச ராசே
யிணையடி சரணமையா
திரமுட னுந்தன் பாதம்
சென்னியிற் சூட்டிக் கொண்டு
அருள்பெறும் நாயேன் தன்னை
அன்புடன் பொருளா யெண்ணி
வரவழைத் திட்ட சேதி
வாய்மலர்ந் தருளு வீரே

வசனம்

அகோ ராசாதிராசனே இரணிய பூபாலகா சரணம் சரணமையா சுவாமி தேவரீருடைய நாமகரணமும், திருவடித் தாமரையும் என் மனதிலேயும் சிரசிலேயும் சூட்டிக் கொண்டு வாழ்கிற அடியேனை ஒரு பொருளாக எண்ணி அழைப்பித்த காரியம் சொல்லுமையா சுவாமி.

விருத்தம்

நல்லது சொன்னா யேமா நான் சொன்ன
மொழிகே ளாத
புல்லிய சிறுவன் தன்னைப் பிடித்துநீ கட்டிக் கொண்டு
சொல்லிய ரவுர வாதி தோதக நரகில் தள்ளி
எல்லையில் லாத கால மிருஞ்சிறை போடு வாயே. 166

வசனம்

அகோவாரும் பிள்ளாய் ஏமா. ஆனால் மகா சந்தோஷமாச்சுது. நம்முடைய வசனம் கேளாத துர்புத்தியுடைய பிரகலாதனைப் பாசத்தினாலே கட்டிப் பிடித்துக் கொண்டுபோய் ரவுரவாதி நரகத்திலே தள்ளி வெகுகோடி காலம் சிறையிலேயே போட்டுவையும் பிள்ளாய்.

விருத்தம்

தேவரீர் தவம்போல் முன்னால் செய்திடுந்
தவத்தி னாலே
பூவலயத்தி லுள்ள பொரும்வினை யொன்றிற் சாகா
காவலன் தன்னை நாயேன் கட்டியே போக லாமோ
ஏவின தெல்லாங் கேட்பே னென்செய்வே
னெளியே னையா
167

### வசனம்

அகோ ராசாதி ராசனே இரணிய பூபாலகா தேவரீர் தவம் செய்து ஒன்றிலேயும் சாவில்லாம லெப்படி வரம் பெற்றீரோ, அப்படிபோலே முன்னாளிலே ஒன்றிலும் சாவில்லாமல் வரம் பெற்றவனைப் போலே தோணுது. ஆகையால் நாமெனந்த வயணத்திதில கொண்டு போவேன் தேவரீர் எப்படி ஆக்கினை வியாபிக்கிறீரோ அப்படியே நடந்து கொள்ளுகிறேனய்யா.

### விருத்தம்

உந்தனா லான மட்டும்
  உபாயங்கள் செய்து பார்த்து
தந்திர முடனே கட்டித்
  தகைந்துநீ பிடித்துப் போகும்
அந்தவெஞ் சோதி நம்பா
  லனுப்பிடென் றழன்று கூறச்
சிந்தைகந் நந் தெம ராசன்
  சிதறியே வருகின் றானே 164

### வசனம்

அகோ வாரும்பிள்ளாய்! ஏமா உன்னாலே யான சதுர்வேத வுபாயத்தினாலே பிடித்துக் கட்டி போற சமாச்சாரம் நமக்கு அனுப்பிவையும் பிள்ளாய்.

அப்படியே நல்லதென்று எமராசன் புலம்பிக் கொண்டு விடுகிற விசித்திர மெப்படி யென்றால்

### தரு தோடிராகம்

இந்தவிதி எனக்கென்று வந்ததென்றால் — நானினி
  என்ன செய்வேன் செய்வேன் அய்யோ
தந்திர முடனே பிடித்து — வுந்தனூரில் போவென்று
  சாட்டி என்னை ஓட்டினானே அய்யோ

அந்த முனி மார்க்கண்டனால் சந்திர சேகர
னுதைபுண்
ஆறிவடு மாற வில்லையே அய்யோ
பிந்தியொரு துன்மதனால் நந்திகேஸ்பரர் தம்மாலே
பெற்ற பேறு மெத்தவுண்டே அய்யய்யோ

சக்கிலிப் பெண்ணைப் புணர்ந்த முக்கிய
அசாமேளன் தன்னாலே அன்னாளில் அய்யய்யோ
உக்கிர கிங்கரரிட்டு இக்குவலையங்களிலே
இடந்தேடியும் காணேன் அய்யய்யோ

பண்டுமுனி துர்வாசன் தொண்டன் ஆம் பரீடனாலே
பட்ட துயர் மட்டு மிதமோ அய்யோ
அண்டருலகும் விசும்பும் எண்டிசையுமோடி
யிடரானதுவும் நானறியேன் அய்யய்யோ

முற்பிற பாணரந்த பரதற் கிடரையூன்று
முழுமூடன் வேடனையுமே அய்யய்யோ
தற்பரி நாரணிகொண்ட நற்பனுவல் பாகவதம்
சற்றுங் கனக பரத்துமுண்டோ ! அய்யய்யோ

அண்டர் பெருமான் சரணம் தொண்டர்கள
பெருமகிமை
ஆராலும் தேற வசமோ அய்யய்யோ
கண்ட பிரணிய னென்னைக் கொண்டு போகச்
சொல்லிவிட்ட
காரியமும் விரிய மாமோ அய்யய்யோ

ஆண்டவனடிமைத் திறன் பூண்டவன் மனங்
கோணினால்
அண்டபிண்ட மண்டலமெல்லாம் அய்யய்யோ

யீனருடன் கலங்குமென்று மறைசொல்லு மொழி
யீறாகி வேறாகுமோ அய்யய்யோ
வெய்ய இரணியற் கஞ்சிபொய் மனது கொண்டு
வாறேன்
வெங்கோபம் தாங்காமல் அய்யய்யோ
பையரவுமேல் துயின்ற அய்யனே எனையுமிப்போ
பட்சமுடன் ரெட்சிக்க வேணும் அய்யய்யோ 169

விருத்தம்

மறலி யிந்தவிதம் புலம்பிப் பிரகலாதன்
மைந்த னிருப்பிடங் கண்டான் நைந்து சூழ்ந்து
விறலுட நாரணன் மந்திரக் கோட்டைக் கண்டான்
விளங்கிய சக்கரங் கண்டான் கமலைமேவும்
இறைல னுருத்தோற்றமது கண்ணிற் கண்டான்
யிலங்கு மதிசயம் வேணதெல்லாம் கண்டான்
திறமுள இங்கரற் கோதி யிருந்தானிப்பால்
சிந்திப்பான் பிரகலாதன் வந்திப் பானே 170

வசனம்

இப்படியாக எமதன்மராசன் புலம்பிக்கொண்டு வந்து பிரகலாத சுவாமி யிருக்கிற யிடத்திலே பார்க்கிறபோது அங்கே நாராயண மந்திரத்தினாலே கோட்டையும் சங்கு சக்கரக்காவலும் நாராயணனைப் போல திவ்விய ரூபமும் மின்னும் அனேக அதிசயங்களும் கண்டு பயந்து நிற்கிற சமையத்திலே பிரகலாத சுவாமி தோத்திரஞ் செய்கிற விதமெப்படி யென்றால்

கொச்சகம்

காலாகாலங் கடந்து காட்சியற்கு காட்சியதாய்
மேலாய்த் தவமாய் மேவுகலைக் கியானமுமாய்
சாலோக சாமீப சாரூப சாயுச்சியமெனும்
நாலாம் பதமாகும் நாராயணா நமவே 171

56

அகிலாண்ட கோடி பிரமாண்ட நாயகா சரணம்
நித்தியானந்த திருமலரூபா தயாநிதி சரணம்
சகல சீவ செனரட்சகா தற்பரா சரணம் — மிகு
தத்துவ முடிவினில் அற்புதமானவா சரணம்

பக்த பதார்த்தன் பாப விமோசனா சரணம்
பங்கைய லோசனா மங்கள சுபகர சரணம்
சத்த பௌத்திர அகளங்க நீர்மையா அரி சரணம்
செகசோதி மயானந்த நாராயணா சரணம்

அரிஅரி கோவிந்தா அச்சுதானந்தா சரணம்
— இப்போ
ஆண்டருள் செயு முந்தன் பாதாரம் நம்பினேன்
சரணம் 172

விருத்தம்

இரவுரவ கும்பிகா ரத்த பாணாவைதரணி
கவலைசேர் விந்துபாணா கடியசூகாவு காந்தா
நவமிகுக் கிருமி போசா நலிகூசிசுவதனா யிந்த
உவமையி லதிச யத்தை வுற்றுநீ பார்த்திடாயே. 173

வசனம்

அகோர வாரும் பின்ளாய்! ரவுரவா அடா கும்பிகா! அடா ரத்தபாணா! அடா வைதரணி! அடா விந்து பாணா! அடா சுகாமுகா! அடா காந்தா! அடா கிறுமி போசனா! அடா சிசுவதனா! பிரகலாத சுவாமியைச் சூழ்ந்து கொண்டிருக்கிற கோட்டையைப் பார். சங்கு சக்கரங் காவலா யிருக்கிறதைப் பார். ஸ்ரீமன் நாராயண னைப்போலே திவ்விய சொரூபமும் இன்னும் அனேக அதிசயமுமிருக்கிறதைப் பாருங்கோள்! பின்ளாய்!

௫௬

இட்டிசை வாசலிலே பிரணவம்
நாட்டுங் கொத்தளம் பாராய்.
தாஷ்டீக தென்கிழக்கில் நகராந்
திட்டுங் கொத்தளம் பாராய்!

தென்திசை வாசலிலே நகராந்
துன்னுங் கொத்தளம் பாராய்!
ஒன்று நிருதிமூலை நகராம்
சென்றுங் கொத்தளம் பாராய்!

மேற்றிசை வாசலிலே நகராந்
தோற்றுங் கொத்தளம் பாராய்!
காற்றுறு மூலையிலே நகராம்
போற்றுங் கொத்தளம் பாராய்!

வடதிசை வாசலிலே நகராம்
படியுங் கொத்தளம் பாராய்!
அடவுசெய் வடகிழக்கில் நகராங்
குடிசை கொத்தளம் பாராய்!

சங்கு சக்கரங் காவல்கீழ் வாசலிலே
பொங்கிய வெழில் பாராய்!
செங்கண் மாலணி தண்டம் தென்வாசலில்
தங்கியதே தொழில் பாராய்!

காதொண்ட வளைதெய்யும் மேல்வாசலில்
கோதண்டம் நிலை பாராய்!
ஏதஞ்செய் கூர்வாள்வில் வடவாசல்
நீதஞ் செய்குதல் பாராய்!

மாதவன் குறிக ளல்லால் அருட்பிரக
லாதன் தன்னுரு பாராய்
வேதப் பொருளாகு மிவன் வாயில்
ஓதிய பொருள் பாராய்!

சங்கு சக்கர குறிகளிவன் மார்பில்
செங்கை யின்றனம் பாராய்
தங்கப் பொன்குடையது போல்மைந்தன்வடி
வங்கத்தின் வளம் பாராய்!

மாலரி துயில்போலே யிவன்யோக
கோலத்தின் தொழில் பாராய்!
ஆலிலை பிள்ளையைப் போல்மைந்தன்— குண
சீலத்தின் எழில் பாராய்!
இப்படி யானதிலே கிங்கிலிய
ரெப்படிப் போவோமோ?
தப்பி ஓடுவதே கிங்கிலியரே
நற்பதம் நமக்காமே

அல்லவென்றே போனால் நமக்கெல்லாம்
சொல்வது பொய்யாமோ!
நல்லவர்க் கிடரிழைத்தால் பெருவாழ்வு
நில்லுமோ? நில்லாதே!

விருத்தம்

தெண்டனிட் டிறைஞ்சி போற்றித்
திருவடி தலைமேற் சூடி
கொண்டதோர் பயத்தி னாலே
கூற்றுவ னோடிப் போனான்
மண்டமர்க் கடந்த மல்லர்
வாளிர ணியனுக் கோடி
விண்டிது சொல்லக் கேட்டு
வெகுண்டவ னுரைக்கின் றானே. 175

வசனம்

இப்படியான அதிசயங்களைப் பார்த்து எமதரும ராசன் தெண்டனிட்டோடிப் போனான். அப்பால் மல்லர்கள் ஓடிச் சரணம் சரணமையா சுவாமி. இரணியேசுவரா! எமதர்ம ராசன் பிரகலாதனிடத்திலே போய்ச்சுற்றி வந்து தெண்டனிட்டு ஓடிப்போனானையா சுவாமி.

விருத்தம்

தண்டமுறு மறலியும் வஞ்சனையே செய்தான்
தக்கவனைப் பிடித்து வந்து சிறை போடுங்கோள்
கொண்டுவந்து யென்முன்னே நஞ்சை யிட்டு
கொல்லுங்கோ ளென மல்லர் கூடிக் கூடி

அண்டர்பிரான் திருத்தொண்ட னென்றெண் ணாமல்
ஆயிரம்பேர் முழுமூடர் அலதி செய்யக்
கண்டுஅரி அச்சுதனனே யென்று மைந்தன்
கசிந்திட்டா னுருகு மனமிசைந்திட் டானே! 176

அசலம்

அகோ வாருங்கோள் மல்லரே: எமனும் வஞ்சனை செய்து ஓடிப் போனானல்லவா? அந்த எமனைப் பிடித்துச் சிறையிலே போட்டு வையுங்கோள்! இப்போது பிரகலாதனை என் முன்னாலே கொண்டு வந்து நஞ்சையூட்டி ஆயிரம் பேர் மல்லர் கையிலே சம்மட்டி கொடுத்து, தலையின் பேரிலே அடித்துச் சொல்லுங்கோள் பிள்ளாய்.

அப்படியே மகாபாக்கியமையா சுவாமி என்று அந்தப் பிரகாரமே நஞ்சு கொடுத்து ஆயிரம் பேர் மல்லர்கள் சம்மட்டியினாலே அடிக்கிறபோது பிரகலாத சுவாமி தோத்திரம் செய்கிற விதமெப்படியென்றால்—

தோச்சகம்

கொண்டல் வளர்மந்திரத்தை கோலமிகுமத் தாக்கி
ஒண்டிறல் சேர்வாசுகியை யோங்குங்கயிறால் பூட்டி
தெண்டிரை நீர்த்தாழியிற் சேர்த்துக் கடைந்து வந்தே
அண்டர்களுக் கமுதளித்த அச்சுதனே யென்கோனே!

அண்டர்களுக் கமுதளித்த அச்சுதனே— நஞ்சை
கண்டு உன்னைச் சொன்னாரே அச்சுதனே

இந்த வினைக்கென்ன செய்வேன் அச்சுதனே—மனம்
நொந்து கலங்குவேனோ அச்சுதனே—

என்மட்டுந் தயவில்லாமல் அச்சுதனே தலைமேல்
சம்மட்டியால் மோதுகிறாரே அச்சுதனே

பாதகர் கையில் சிக்கி யச்சுதனே— பொல்லா
வாதனைக் கிடமானேன் அச்சுதனே

மல்லர் விடும்படையெல்லா மச்சுதனே— யன்று
புல்லெனவே செய்து வைத்தா யச்சுதனே

முந்தமலை மேலுருட்ட அச்சுதனே— வுடலைப்
பந்துபோலே பண்ணி வைத்தா யச்சுதனே

செந்தழலில் தள்ளும் போது அச்சுதனே— அதைச்
சந்தனம்போல் செய்துவைத்தா யச்சுதனே

நஞ்சளிக்கும் பாம்புதனை யச்சுதனே —யெனக்கு
தஞ்சமு தளிக்கச் செய்தாய் அச்சுதனே

கொல்ல வந்த ஆனைதனை யச்சுதனே— யெனக்கு
நல்வணக்கம் செய்ய வைத்தாய் அச்சுதனே.

அலைகடலில் தள்ளும்போது அச்சுதனே — யெனக்கு
மலையும் கப்பலாகச் செய்தா யச்சுதனே

செக்கினி லரைக்கும்போது அச்சுதனே —உடலிற்
தக்கவை யில்லாமல் காத்தா யச்சுதனே

தீதொன்று மில்லாமல் காத்த அச்சுதனே— நான்
ஏது வுபகாரஞ் செய்தே னச்சுதனே. 178

## விருத்தம்

அச்சுதன் வினோதத் தாலே
    ஆருயி ரழிய மாட்டான்
மெய்ச்சுதன் றன்னை நானே
    விரைந்துபோய் கொல்வே னென்று
நச்சரா போல்லே சீறி
    நானிலம் நடுங்கி யேங்க
கைச்சிலை வாளு மேந்தி
    கடுத்திட்டான் தடுத்திட் டானே.

179

## வசனம்

இப்படியாகப் பிரகலாத சுவாமி தவுத்தியம் செய்த மாத்திரத்திலே கொடுத்த நஞ்செல்லாம் அமுதமாச்சுது. சம்மட்டிகளெல்லாம் தூளாய் முரிந்துபோன மாததிரத் திலே இரணியேசுவரன் நானே இவனுயிரைக் கொல்லு வேனென்று கையிலே வாளுருவிக் கொண்டு வந்தவனைப் பார்த்து, பிரகலாதன் சொல்லுகிற விதமெப்படியென் றால்.

## விருத்தம்

வந்ததோர் தாதை பாதம்
    வணங்கி வாய்புதைத்து நின்று
எந்தனுயிரைக் கொல்ல எண்ணி
    நீ வந்தா யானால்
உந்தனா லென்னைக் கொல்ல
    வொண்ணுமோ வுலக மெல்லாம்
தந்துகாத் தளித்த மாயன்
    தானவ னீயோ வையா

**வசனம்**

அகோ வாருமையா சுவாமி என்னைப் பெற்ற இரணியேசுவரா! என்னைக் கொல்ல வேணுமென்று தேவரீர் ரெழுந்தருளின படியினாலே சருவலோக நாயக னான நாராயணன்தானே என்னைக் கொல்லவேணு மென்று உன்னைப்போலே ரூபங்கொண்டு வந்தானோ தெரியேனையா சுவாமி!

**இரணியன்** **தரு**

ஆரடா வுலகங்கள் அளித்தவர்
ஆரளித்தவர் யானல்லாமல்
வேறுண்டோ மைந்தாவே
பாரடா மூவரும் யாவரு மெனக் — கிப்போ
பணிவது மறியாயோ மைந்தாவே

**பிரகலாதன்**

எவ்வுலகங்களும் எவ்வுயிர்களுந் தானாய்
எங்கெங்கு முறைகின்றா னென்கோவே
செவ்வகையாகவே எள்ளி லெண்ணெயும் போலும்
திகழ்பவன் அரி அரி என்கோவே

**இரணியன்**

எங்குமிங்கு முறைந்து தங்கியவ னானால்
என்முன்னே காட்டுவையோ மைந்தாவே

**பிரகலாதன்**

என்கண்ணில் காண்பதற்கு
எங்குமிருக்கு மென்னில்
உன் கண்ணில் காண்பானோ? என்கோவே

**இரணியன்**

என் கண்ணில் கண்டாலல்லோ உன்சொல்லும்
மெய்யாகும்
ஏன்வீணில் பிதற்றுறாய் மைந்தாவே

**பிரகலாதன்**

பிதற்றுறா யென்றுந்தன் மதத்தினாலே சொன்ன
பேச்சுக்குள் ளிருக்கிறான் என்கோவே

**இரணியன்**

பேச்சி லிருப்பானானால் வாய்ச்சயிந்தத் தூணிலும்
பிரியாம லிருப்பானோ மைந்தாவே

**பிரகலாதன்**

தூணிலுந் துரும்பிலுஞ் சொல்லும் நாவினு மெங்கும்
காணவுங் காண்பான் காணென் கோவே

**இரணியன்**

காணவுந் தூணிலே காணாமல் போனாலுந்தன்
வாணாளை யான்கொல்வேன் மைந்தாவே

**பிரகலாதன்**

கொல்ல வுன்னாலாமோ நல்லவன் காணாவிட்டால்
வல்லுயிர் யானே மாய்ப்பேன் என்கோவே

**இரணியன்**

மாய்ப்பேனென் றுரைத்தாயுன் மத்தினாலே
யுமல்லோ
மாயன்காண மாட்டானோ மைந்தாவே.

**பிரகலாதன்**

காணாமல் போனாக்கால் வாழ்வினுக்கிச்சை
வைத்தால்

வீணாவன் தொண்டனானோ என்கோவே

**இரணியன்**

தொண்டனான வுன்னையும் அறியவும்
தூணிலே நான்
கண்டால் விடுவேனோ மைந்தாவே.

**பிரகலாதன்**

விட்டுவிடுவே னென்றால் சுட்டிடும் நெருப்பது
துரும்பாலென் செய்யுமெங் கோவே. 81F

**விருத்தம்**

உம்பர்க்கு முனக்கு மோ விவ்
வுலகெங்கும் பரந்து லானை
கம்பத்தின் வழியே காணக்
காட்டுநீ; காட்டா யானால்
கும்பத்தின் கோல மாக
கொன்றன நினைக்கக் கொன்று
செம்பொற் குருதி தேக்கிட
உடலையுந் தீநெருப்பே யென்றான். 182

**வசனம்**

அட வாடா! பிரகலாதனா! தேவர்களுக்கு முனக்கு மெங்கும் நிறைந்த அரியை இத் தூணிலே காட்டாவிட்டால் மும் மதங்களுடைய யானையைச் சிங்கமானது பாய்ந்து பிடித்து ரத்தபானம் பண்ணி, மாமிசம் வேறு எலும்பு வேறாக உண்ணுகிறதுபோலே உன்னைப் பிடித்துக் கசக்கி உண்ணுவேனடா பிரகலாதனா!

### விருத்தம்

உடலெள் ளாம்பிளந்து நானே
 வுண்பன்யா னென்று கூற
மடவின் மேலுடைய வேதன்
 வழுத்தவும் காண மாட்டாய்

முடிவில் லாதநாத ரூபன்
 முரரென தனது சிந்தை
கடலின் மேலமர்ந்தான் தன்னை
 கப்பதா பாணம் செய்வார். 185

### வசனம்

உடலைப் பிளந்து நானே உண்ணுகிறேன் என்று இரணியன் சொன்ன மாத்திரத்திலே ஆயிரத்தெட்டு நீளம் பொருந்திய தாமரைப் பூவிலே விள்ங்கா நின்ற நாராயணனைப் பிரகலாதன் தோத்திரம் செய்கிற விதமெப்படி என்றால்.

### கொச்சகம்

மூதறிவா லோதுகின்ற உன்னடியார் தாங்கள்
 செய்யும்
தீதகலவே தினமும் செய்கருணை வாருதியே
மாதவனே கேசவனே வேத நாயக
மூர்த்தி மெய்ப்பொருளே யெங்கோனே 184

### தரு — பூபாலம்

வேத நாதா ஆதிமூலமே உனது சரணம்
வேண்டும் விண்ணப்பம் கேளுமே!
பாதகர் செய்யும் தோதகங்களெல்லாம் உனது
 சரணம்

பார்த்து துயர்தீர்ந்து கேளுமே (வேத)
கம்ப மதனிலே வும்பற்குரியோனே எனது தந்தை
காட்டச் சொல்லிக் கட்டிக் கொண்டானே! அரி அரி!
செம்பொற் கம்பை நம்பும் மார்பனே
யிரங்கி யுன்னருள்

செய்ய வேண்டும் வையக முண்டவனே அரி அரி!
எனக்குளே அணுவாகவே யெங்கும் நிறைந்த
யேக நாதா யேக ரூபனே அரி அரி!
தூணுக்குள் வந்து காணருமையோ யெனது
தந்தைதான்

சோதியா யுலகாண்ட நாயகனே அரி அரி
பக்தனானேன் கர்த்தன் நீயே யென்றால்
அடியேன் சொன்ன
பந்தையம் கைவந்து மீளவோ
சற்றேதயவு வைத்தின்னேரமே தூணில் வரவும்
தருணம் தருணம் கருணை யாளனே
அரி அரி அரி வேதநாதா! ஆதிமூலமே. 185

விருத்தம்

காதலால் கசிந்து போற்றி கண்க ளால்நீர் ததும்ப
தாதையார் பாதம் போற்றித் தயவதா
யடியேன் சொன்ன
நீதியை யனத்தா யன்றோ நிமலனைக் காண
வேண்டில்
சோதனை யாக நீயும் தூணிலே காணு வாயே 186

வசனம்

இப்படியாகப் பிரகலாத சுவாமி தோத்திரம் செய்து ஆனந்தப் பரவசனாய் தகப்பனைப் பார்த்து சரணம் சரணமையா சுவாமி அடியேன் சொன்ன நீதி மார்க்கத்தை என்னவாகிலும் கேளாதபடியினாலே என்ன

ஆகாத காலமோ இப்போது இந்தத் தூணிலே சோதனை யாக பார்க்க வேணுமென்றால் அந்தப் பிரகாரமே பார்த்து கொள்ளுமையா சுவாமி.

விருத்தம்

மைந்தனிது சொன்னளவில் கோபம் கொண்டு
மண்டுமெறி கண்சொரிய யிமைகள் தீய
செந்தழலில் வடவையும் போய்க்கடலில் வீழ்த்
திங்களொடு கதிரவனுந் திகைத்து வோட
சிந்தூரஞ்சேர் கனத்தின் கண்கள் மூடத்
திக்கெலா மதிர முடிச்சேடன் தாழ
சுந்தரஞ்சேர் நெடுங்கையை அண்டமட்டுந்
தூக்கினான் மணித்தூணைத் தாக்கினானே 187

வசனம்

இப்படிப் பிரகலாதன் சொன்ன மாத்திரத்திலே கோபாக்கினியானது கண்ணிலே பெருகி இமைகளெல் லாந் தீய்ந்து போச்சுது. இந்த அக்கினிக்குப் பயந்து வடவாமுகாக்கினியும் கடலிலே ஒளிந்துப் போகச் சந்திர சூரியர் திக்கெட்டும் ஓடிப்போக அஷ்டகஜங் களும் கண்களை மூடிக் கொள்ள ஆகாச பூமியெல்லா மதிர்ந்து சேடனபனாமகுடங்கள் சுருங்கி அதிர்ந்து போக நீண்டகையை அண்டகடாக முகடு முட்டும் படியாய் தூக்கி எதிராக நிற்கா நின்ற தூணையடித் தான் இரணியேசுபரன் என்றவாறு.

விருத்தம்

இடித்ததோ ரசனியென்ன
எரிவிழி கண்கள் சீறி
அடித்தது ணகத்தி னின்று
ஆடகப் பசும்பொன் னண்டம்

வெடிப்ப மால்வரை பணிப்ப
　　வெடிபட நகைத்து வெய்தின்
வடித்தலந் துளப மாலை
　　வாளரி பிறந்த தம்மா 188

வசனம்

இப்படி சொன்ன மாத்திரத்திலே அண்டப் பித்தி களெல்லாம் அலுங்க ஆர்ப்பரித்து தூணைக் கையினாலே அடித்த மாத்திரத்திலே அந்தத் தூணிலே அகிலாண்ட கோடி பிரம்மாண்ட நாயகரான நாராயணர் நரசிங்க ரூபமாகி எழுந்தருளி வருகிற விசித்திரமெப்படி என்றால்,

தரு

அண்ட ரண்டங்கள் குலுங்க
　　மண்டல மேழு நடுங்க
விண்டல மேழும் நடுங்கவே
　　வெடித்த நகையிட்டு நரசிங்கம் வந்ததே

அட்டகாச ஆர்ப் பரிப்பும்
　　வட்டமான கண் ணெரிப்பும்
மட்டில்லா கோபத் தெரிப்புமே
　　வெடித்த நகையிட்டு நரசிங்கம் வந்ததே.

வானமெங்கும் கையளாவி
　　தானவர்களைத் துழாவி
போனகமாய் நீயளாவியே
　　யிடித்த நகையான நரசிங்கம் வந்ததே 189

விருத்தம்

நாடினா னொருவ னென்ற
　　னயனரி வாளு நாளுந்

தேடிநான் முகனும் காணா
 சேயவன் சிரித்த லோடும்
ஆடினான் அழுதான் பாடி
 யரற்றினான்! ஆற்றிச் செங்கை
சூடினான்! பிரக லாதன்
 துதித்திட்டான் மதித்திட் டானே 190

வசனம்

இப்படியாக நரசிங்க மூர்த்தி எழுந்தருளின மாத் திரத்திலே அப்போ பிரகலாத சுவாமி கூத்தாடி ஆனந்தப் பரவசமாய்ச் சொல்லுகிற விசித்திர மெப்படி என்றால்.

தரு

அகிலாண்ட கோடி
 பிரமாண்ட நாயகா — பராக்கு

சிவதயாபரா
 சகல ரெக்ஷகா — பராக்கு

பக்தவத்சலா லக்ஷ்மி சமேதா
 அச்சுதா னந்தா — பராக்கு

சுத்தபுத்திர நிர்மலானந்த
 சோதி நீர்மையா நரசிம்மா — பராக்கு! 191

கொச்சகம்

கார்க்குதுவ வெஞ்சினத்தால் கவ்வநெடுங்கை
 மலைமுன்
ஆர்க்குலவு துயிலெழுந்தே அஞ்சலஞ்சலென்று
 வந்தே
தார்க்கருணை வாருதியே தண்ணமுதே யஞ்சுவைறு
பராக்கு பராக் கெத்தனை யானபரம் பரனே
 என்கோவே 192

## தரு - சௌராஷ்டிரம்

பராக்கு பராக்கு நரசிம்மா பராக்கு
அகளங்க ராட்சதர் சம்மாரா பராக்கு
பத்த பரியானந்த நித்தியா பராக்கு
பங்க லோகசன துங்கா பராக்கு

பாப விமோசன ரூபா பராக்கு
சிங்கார தேவி பங்க பராக்கு
தேவ ரெட்சக மனுபாயா பராக்கு
மாதவ ரெக்ஷிகா நீதா பராக்கு

மந்திர சொரூபா நித்தா பராக்கு
சிதரா அகிலா விநோதா பராக்கு
தீரா வராக அவதாரா பராக்கு
சோதி மயானந்தா நாதா பராக்கு

கோமுக சிங்கார வீமா பராக்கு
ஆதி பரப்பிரம்ம தேவ பராக்கு
அருணகிரண முகத் தருணா பராக்கு
பராக்கு நரசிம்மா பராக்கு 193

### ஆச்சரிய தூரணிகள்

நாராயணா சரணம் மாதவா சரணம்
நளினதள நேத்திரா சரணம்
நாகசயனா சரணம் மேக வண்ணாசரணம்
நரஹரி வாசா சரணம்

சிரார் சங்கு சக்கராயுதா சரணம்
செனார்த்தனா சரணம்
எழில்சேர் திருமார்பா சரணம்
உயரருளாளா சரணம்

தேவாதி தேவா சரணம்
பாரெலா முண்டுமிழும் வாயனே சரணம்
பரப்பிரம்ம ரூபா சரணம
மிகுந்த நரசிங்கரூபா சரணம்! 194

வசனம்

இப்படியாக பிரகலாத சுவாமி தவுத்தியம் செய்து கொண்டிருக்கிறபோது நரசிம்ம சுவாமி யவதார மெப்படியென்றால்

விருத்தம்

பினந்தது தூணு மங்கே பிறந்தது சீயம் பின்னர்
வளர்ந்தது திசைக ளெட்டும் வான பகிரண்ட
மெட்டும்
அளந்தந்த புரத்துச் செய்கை யாரறிந்
தறைய வல்லார்
கிளர்ந்தது ககனமுட்டக் கிழிந்தது கீழு மேலும் 195

வசனம்

அகோ தெப்படி யென்றால் உக்கிர நரசிம்ம மூர்த்தி யார் தூணைப் பிளந்து கொண்டு பிரம்மாண்ட கோள்கை முகடுருவி வளர்ந்து எட்டுத்திக்குகளையும் அடைத்துக் கொண்டு நின்ற பெருமையைப் பிரம்மதே வனாலும் ஆதிசேஷனாலும் சொல்லி முடியுமோ முடியாது.

விருத்தம்

மண்டலந் துளப மாலை
மானிட மடங்கல் வானிற்
சென்றது தெறித்தே தஞ்சேவடி
சேவடி படியிற் றோய

நின்றதோர் பொழுதின் கண்ணே
நெடு முகட்டிருந்த முன்னோன்
அன்றவ னுந்தி வந்தா
னாமெனத் தோன்றி னானே 196

வசனம்

இப்படியாக வாசனைப் பொருந்தியிருக்கப்படா நின்ற துளப மாலிகாபரணனான நாராயணன் உக்கிர நரசிம்ம அவதாரமாய்ப் புறப்பட்டு வந்த வகை எப்படி என்றால் வானகமாகப்பட்டது ஆகாச பரியந்தமும் கையைத் துழாவிக் கொண்டு சேவடி என்னப்படா நின்ற இரண்டு பாதத்தையும் பூமியிலே வைத்து நடனம் பண்ணிக் கொண்டு அக்கினியைப்போலே எரியப்படா நின்ற விழியும் வெடித்த நகையும் இடித்த மொழியும் மட்டுமில்லாத சினத்தோடும் கூடி நின்றபொழுது அதே தென்றால் முன்னாளிலே நெடுமாலாகிய நாராயண னுடைய உந்திக் கமலத்திலேயிருந்து உதித்த பிரம்ம தேவனைப் போலே தூணிலே உதித்தெழுந்து வந்த நரசிம்ம மூர்த்தியைப் பார்த்து இரணியன் கோபம் பிரசத்தனாய்ச் சொல்லுகிற விதமெப்படி என்றால்.

தரு

ஆரடா நகைத்தவன் தூணிலே
அங்கென்ன யிங்கே வாடா

பாரடா யென்திராணி யுன்னுடலைப்
பதைக்கவே வுதைப்பே னே

தம்பியைக் கொன்றாயே யிந்தப்பழி
தந்திட வந்தாயே

கம்பத்தி லொளித்தாலும் விடாமலே
கடிக்குறேன் அடிக்குறேன்

ஒளியாம லென்னெதிரே வா!வந்தால்
உனக்காகு மெனக்காகும்

சுற்றிச் சுற்றியே வாராயடா — யுந்தன்
சொரூபங்கள் காட்டுமடா

குத்தியே யுன்னுடலை யென்வாளால்
கொல்வேன் கொல்வேனே

என்றிப்படி யிரணியனு மெள்ளமெள்ள
எட்டியே காட்டினானே

அப்போது நரசிம்ம மெள்ளக்கையா
லடித்துப் பிடித்ததுவே

எட்டியே கையாலே நரசிம்ம
மிழுத்துக் கொழுப்புடனே

தட்டியே நெடுந்தோளான் கண்களைச்
சாடினா கூடியதே

பார்த்தந்த வேளையிலே வீட்டு வாசல்
படிமீது தொடைமீது

கோர்த்து கொட்டிக் கொண்டே நரசிங்கம் உதிரம்
குடித்து முடித்ததுவே

கண்ட ராட்சதர்க ளெல்லாம் வெகுண்டு
கடுகி முடுகியதே

அண்டங் குலிங்கிடவே ராட்சதரை
யடித்து முடுக்கியதே 197

விருத்தம்

இப்படியாய் நரசிம்ம மூர்த்தி தானு
மிருகையினால் பிடித்து யிரணியன் தன்னை
ஒப்பிலதோர் நகத்தாலே மென்னியை யூர்ந்து
உதிரமது குடித்து மகாவுக்கிர மாக

தப்பில்லா குடல்மாலை தானும் பூண்டு
சகலரையும் பிடித்து உயிர்போக்கினது கண்டு
அப்பன்மடிந் தானென்னவே பிரக லாதன்
அரிநாம மேத்துவான் போற்று வானே 198

### வசனம்

இப்படியாக நரசிங்க மூர்த்தி இரணியனைப் பிடித்து வாசலிலே கிடத்தி இரவும் பகலும் கூடி இருக்கிற வேளை யிலே தன்னுடைய நகமென்னப்படா நின்ற பட்டாயுதத் தினாலே மென்னியை யூர்ந்து அதிலேயுள்ள உதிரம் எள்ளுப் பிரமாணங் கீழே விழாமல் படிக்கு இரத்த பானம் பண்ணி மார்பை யிருபிளவாகப் பிளந்து குடலை மாலையாகப் பூண்டு இரணிய சம்ஹாரம் பண்ணி பிடித்து மடித்து கண்காணாமல் முடுக்கி மற்று முள்ள ராட்சதரையும் உக்கிர நரசிம்ம மூர்த்தி உக்கிர நடனம் பண்ணிக் கொண்டு நின்றார். அந்தச் சமயத் திலே பிரகலாதனுடைய தகப்பன் இறந்துபோனானென்று சந்தோஷத்தையடைந்து நரசிம்ம சுவாமியை அனேக மாய்க் கொண்டாடி பூசை பண்ணுகிற விதமெப்படி யென்றால்

### தரு

அய்யா நரசிம்மா அரி அரி — வந்தருளும்
கடிய வந்தருளும் அய்யா

பொல்லாத கொடும் பிறவிக் காட்டிலே புகுந்தேன்
புலவேடர் செய்யும்கொடுமை போதும்
நரசிம்மா

எல்லோரும் காணவே புல்லனென் பொருட்டால்
யிருந்நூணி லெழுந்தருளு மிறைவா நரசிம்மா

கண்டானை யுண்ட விளங்களி போலேயானும்
கசடராலலைப்புண்டு களித்தே நரசிம்மா

கொண்டாலந் தவிர்மீதில் குறைகடலின் மீதே
குழந்தைபோல் தவழ்ந்தருளும் கொடிய

நரசிம்மா
(அய்யா) 199

விருத்தம்

இப்படி இறைஞ்சிப் பின்னும்
இயம்புவா னெந்தை செய்த
தப்பெலாம் பொறுத்து உந்தன்
தனிப்பதம் தருவா யென்ன
அப்பனே நீபிறந்த தாகை
யாலி ருபத் தொன்று
வொப்பிலா குலத்தோ ரெல்லாம்
உயர்ந்த விடெய்து வாரே 200

வசனம்

அகோ நாராயணா கேசவா அச்சுதானந்தா அரி முகுந்தா செனார்த்தனா அடியேனுடைய பிதாவான இரணியன் செய்த குற்ற மெல்லாம் பொறுத்து தேவரீர் உடைய திருவடித்தாமரையருள வேணுமையா சுவாமி

அகோ வாரும் பிள்ளாய்! பிரகலாதனா நீ இரணியனுக்குப் பிள்ளையாகப் பிறந்தபடியினாலே இருபத்தொருதலைமுறை பிதுர்களெல்லா முத்தி வீடு பெறுகிறபடியினாலே உன்னுடைய பிதா கிருதார்த்தனாகிறதுக்கு சந்தேகமில்லை! இன்னமும் உன்னுடைய வமிசத்தாரென்ன குற்றம் செய்தாலும் நாமவர்களைக் கொல்லுகிறதில்லை. இதுவே சத்தியம் பிள்ளாய் பிரகலாதனா!

விருத்தம்

இன்னமுங் கேளாய் மைந்தா
யிருலட்சத் தொருநா றென்ப
துன்னிய வுகங்க ளிந்த

தொல்லுல கெல்லாம் கீர்த்தி
மன்னவ னாகி நீயே
வாழ்ந்துபின் னெனது பாத
மன்னுவாய் என்று செவ்வாய்
மாயவன் மலர்ந்திட் டானே 201

தரு பந்துவராளி

மைந்தா யிந்தா! வேண்டிய வரமெல்லாந்
தந்தேன்! பிரகலாதா!
வந்தே திருவடி கொண்டாய் தலைமீதே
சிந்தா குலமினி யுண்டா யுனக்கிப் போதே
(மைந்தா)

இருநிலப் பரப்பெல்லா மொரு
குடையாகவே யொத்து
இருபத்தொரு சதுர்யுக மட்டும் காத்து
அருமறை முனிவற்கு வருதுன்பம் தீர்த்து
அவர்களை நானென்றே சேவையுடன்
போற்று (மைந்தா)

இந்தக் குலத்தில்நீ வந்ததி னாலே
இருபத்தொரு குலத்தோ ரெவருமென்மேலே
வந்துயெனது பாதமடைந் தாரே யொருக்காலே
வாழ்வுமுன் தந்தைக்குத் தாழ்வுண்டோ
வொருக்காலே மைந்தா

கொல்லேன் நின்குலத்துள்ளோ ரெல்லோரு மெத்தக்
குற்றங்கள் செய்தாலு மடியவற் கன்பு
நல்லோனேமெய் சொன்னேன் நமக்கினிமே விந்த
நானிலத்தினி லுண்டோ மாணவ நீயே
சொந்த
மைந்தா யிந்தா வேண்டிய. 220

விருத்தம்

இப்படியா யவன்கூறி வரங்க ளீய்ந்து
யிருக்கும்போ தண்ணல் சிறந்திருந் தானென்று
மைப்படியு நறுங்குழலா யென்னை யாண்ட
வனசமலர் திருமாலு மருகு வந்தான்
செப்பரிய திசைமுகனும் தேவர் கோனும்
சித்தர்களும் பக்தர்களும் சேர்ந்து வந்தே
அப்பனே எனவிவர்கள் வணங்கிப் போற்ற
அகமகிழ்ந்து கடைக்கண் ணோக்கி
யருளி னானே 203

வசனம்

இப்படியாய்ப் பிரகலாதனுக்கு அனேக வரப்பிர சாதம் கொடுத்துயிருக்கிற சமயத்திலே லெக்ஷிமி தேவி சுவாமியினுடைய பக்கலிலே வந்த போது லெக்ஷிமிதேவி யைப் பக்கத்திலே யழைத்து தன்னுடைய தொடையின் பேரிலே வைத்து கொள்ள பிரம்ம தேவன் முதற்கொண்டே தேவர்கள் எல்லாம் பார்த்து லெக்ஷிமி நரசிம்ம அவதார மெழுந்தருளி யிருக்கிறாரென்கிறதா லெல்லோரும் வந்து சரணம்! சரணம்! பிரமதேவர் சரணம்! நாராயணா, முகுந்தா, செனார்த்தனா, லெக்ஷிமி சமேதா வென்று தோத்திரம் பண்ணின மாத்திரத்திலே மகாசந்தேஷமாய் அனைவருக்கும் திவ்விய கடாக்ஷ வீக்ஷணிய மருளியிருக் கிற சமயத்திலே பிரகலாதனைப் பார்த்துச் சொல்லு கிறார்.

விருத்தம்

அய்யனே பிரக லாதா
வருளாயுன் தந்தைக் கேற்க
செய்கடன் மைந்தா செமயுஞ்

சிறப்புநீ செய்யென் றேவப்
பொய்யில்லா மைந்தன்தானும்
புராதனன் அருளும் வண்ணம் செய்கடன் முடித்
தான் மாயன் திசைமுகத் தருளி னானே. 204

வசனம்

அகோ வாரும் பிள்ளாய்! பிரகலாதனா உன்னுடைய தகப்பனுக்குப் பிள்ளைகள் செய்யும் உத்துருமை செய்து வாரும் பிள்ளாய் என்று அனுப்ப, அப்படியே தன்னுடைய தகப்பனைத் தெய்வ விமானத்தின் பேரிலே யேற்றிச் சங்குகள் சவுண்டைகள் மல்லாரி தேவதுந்துபி முழங்க மயான கிரிக்குப் போய் மற்றுமுண்டான சடங்குகள் எல்லாமும் முடிப்பித்துக் கொண்டு வந்து லட்சுமி நரசிம்ம மூர்த்தியைத் தெண்டனம் பண்ணி நிற்கிற போது பிரமதேவனைப் பார்த்து உக்கிர நரசிம்ம மூர்த்தி அனுக்கிரகம் பண்ணுகிற விதமெப்படியென்றால்,

விருத்தம்

நம்முடைய தொண்டனாம் பிரக லாதற்கு
நளினமுடி சூட்டென்று நவின்று கூறி
செம்மைமல ராளுடனே தேவர் தேவன்
திருந்திய வைகுந்தமதில் சென்றா ரிப்பால்
யிம்மையிலு மறுமையிலு மிவன்போ லாரென்
றிமையவர்கள் மலர்மாரி பொழிந்து
நம்மை யெல்லாம் புரந்தருளும் நம்பிசெங்கோல்
நாட்டினான் தேவன்முடி சூட்டி னானே. 205

வசனம்

அகோ வாராய்! பிரமதேவா! நம்முடைய தொண்டன் பிரகலாதனுக்குப் பட்டாபிஷேகம் செய்து வைத்து வாருமென்று லட்சுமி சமேதராகிய சுவாமி வைகுந்தத்

துக்கு யெழுந்தருளினார். அப்பால் சகல தேவர்களும புஷ்பமாரி பொழிந்து பிரகலாதனுக்குப் பட்டாபிஷேகம் செய்கிற விதமெப்படியென்றால்.

தோடி ராகம் தரு

திருமுடி கொண்டானே பிரகலாதன்
(திரு)

திருமுடி கொண்டானே பரமனருள் கண்டான்
அரியவன் பேர்வைக்கும் அறவனைதனில் மொக்கும்
(திரு)

அந்தணர் முனிவோர்கள் யோக யோகியர்கள்
அரிய வேதியர்கள் அரிய நான்மறை பாட
இந்திர னமரர்கள் மந்திர மலர்தூவ
மேனகை யூர்வசி மான்விழி ரம்பையர்
யெழில் நடனம் வரவே!
(திரு)

வித்தி வித்திதனா மொழியிசைபாடினா ரிசையுள்ள
சிந்துவுங் கங்கையும் யமுனை சரஸ்பதியும்
சேவியத் திலுள்ளோர் தீர்த்த மிகவு மொண்டு

(திரு)

இந்து முகமலர்ந்து வந்து எட்டட்சதைய
ஏந்திழை முலைமாதர் காந்திமணி தீபங்க
ளேந்திவரவே
நாரதர் வீணை தோற்றிசை பாடவே —
மண்டலமுள்ள (திரு)

எந்தெந்ததேசமும் எந்தெந்த ராஜரும்
எந்தெந்த யிடத்தோரும் வந்து கைகுவிக்கவே
திருமுடி கொண்டானே

அங்கிரர், காசிபன், கோசிகன், கௌதமன்
அகஸ்தியன், புலஸ்தியன், வதிஷ்டர், நாரதருடன்
மங்களபூரண கலசங்க ளேத்திட
வயங்கு மாசியர் வாநமே யெங்கும்

வாய்மையுடனே வந்தவர் கொடுக்கும் மந்திரி
மார்கள் பந்தியாயடுக்க பார்க்கவமுனி

புங்கவரன் வளர்ந்திடும் பொரியுடனருள் செய்யும்
பொழிந்து அக்கினிவலம் தழைந்து மேலெழும்ப

நங்கையர்கள் மங்கையர்க ளெவரும்
நாதங்க ளுடனே சங்கீதங்கள் பாடியும்

நாட்டியமிடவே யெவ்வுல கோரும்
கூடங்களிடவே எவ்வுல குண்ட

நல்லவரருள் கோரும் வல்லவர் ஜெயமென்று
சொல்லும் கடிலவோசை எல்லையெட்டுமுதலாக
(திருமுடி)

வரவுடனே பாலரும் வசுக்களும்
வந்தவர் அவரவர் தளரிசை யிருக்க
வீசியே கதிரோனும் மதியோனும் போலும்
விளங்கவே—(திருமுடி) 206

மஞ்சகுப்பம் ஜில்லா விழிப்புரத்துக் கடுத்தமேழி
நல்லூரிலிருக்கும் வீராசாமி வாத்தியார் எழுதியது.
பழைய தருமபுரியிலிருக்கும் பீம பூசாரி குமாரன்
சின்னிய பூசாரி வாசிக்கப்பட்ட இரணியன்
நாடகம்

கடவுள் துணை

❋

# குறிப்புரைகள்

## (கடவுள் வாழ்த்து)

இப் பாடல் விநாயகர் காப்புச் செய்யுள். திருவளர் மணிசேர் மார்பன் — திருமால். திரு — ஸ்ரீவத்சம்.

'திருமறு மார்பின் உறைவோன்' — என்றும் திருமறுச் செய்யோள் சேர்ந்தது நின் மாசில் அகலம என்றும் பரிபாடல் கூறும். திருமகளைத் தன் மார்பிலே கொண்ட ஸ்ரீதரன் என்க.

திருவடி — திருமால் பொற் பாதம். பிருகலாதன் — பிரகலாதன். பாடியாட — நாடகமாய் நடத்த. மலை மகள் — இமயத்துவசன் பெற்ற திருமகள்; பார்வதி என்க.

மலைமகள் கணவன் சிவன் முக்கண்ணன் என்பது போலவே அவள் ஈன்ற கணபதியும் முக்கண்ணன் ஆவான்.

இருபதத் தொரு கொம்பு — இரு பாதங்களும் ஒரு கொம்பும் உள்ளவன்; ஒரு புறம் மட்டும் தந்த முள்ள யானை முகன் என்க.

அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகத்தில் சுவடிகள் விவரப் பட்டியல் 21—1, எண் 472ல் உள்ள பாடலுடன் பாடபேதமுள்ளது.

1. இச்செய்யுளும் கணபதி காப்பாகும்
துளபம் — துளசி.

தரும நல்லூர் — இப்போது பழைய தருமபுரி என வழங்கும் ஊர் முன்னர் தரும நல்லூர் என வழங்கப் பட்டுள்ளது. தென் ஆர்க்காடு மாவட்டத்தில் தரும நல் லூர் என்ற பெயரில் இன்றும் ஓர் ஊர் உள்ளது. வாரண முகஞ்சேர் — யானைமுகத்தையுடைய; தும்பிக்கை யுடைய விநாயகன் என்க நாக மணிந்த — புன்னை மலர் அணிந்த. 'நாகமா மலர்ச் சோலை நளிர்சினை மிசை வண்டலம்பும்' என வேள்விக்குடிச் செப்பேடு குறிப்பிடும்

## உமை வணக்கம்

2. அருமறை — அரிய வேதம். திருமாலின் அருளைப் பெற்ற பிரகலாதனை ஆசிரியர் பெரியவன் என்கிறார். பெரியவன், வயதில் சிறியவனாயினும் அன்பு, அறிவு, பண்பு இவற்றில் பெரியவன் பெருங்கடல் — சமுத்திரம். தெண்ணீர் பரப்பின் இமிழ்திரைப் பெருங்கடல் 'உண்ணா ராகுப நீர் வேட்டோரே — புறம். வருணமாபுரி — இன்றைய தருமபுரியின் பழைய பெயர். சோழர்காலத்தில் கடைக்கோட்டூரான நானாதேசிப் பட்டணம் என்ற ஊரே வருணமாபுரி எனப் பின்னர் வழங்கப்பட்டுள்ளது; இன்று தருமபுரி என வழங்கப்படுகிறது. வாரண முகத் தோன் — கஜமுகன் என்க. பெம்மான் — பெருமான். முருகனை அருணகிரி நாதர் பெம்மான் என்றே பல இடங் களில் பாடுவார். சிவனை ''பிரம்மாபுரம் மேவிய பெம்மா னிவனன்றே'' எனச் சம்பந்தர் பாடுவார். வெள்ளைப் பிள்ளை — வெள்ளைப் பிள்ளையார். தரும புரியில் இப் பெயரில் முன்பு பிள்ளையார் கோயில் இருந்

துன்னதுபோலும்! (தஞ்சை நகரில் வெள்ளைப் பிள்ளை யார் என்ற கோயில் இன்றுமுண்டு. அக்கோயில் இறை வனைப் பாடும் நூல் 'வெள்ளைப் பிள்ளையார் குறவஞ்சியைச் சரஸ்வதிமஹால் நூலகம் அச்சிட் டுள்ளது.) உமையவளை இப்பாடலில் வணங்குகிறார்.

3. ஆதி நூல் — தொன்று தொட்டு வரும் நூல்கள் வேதங்கள் போல்வன. பிறர் ஓதாமல் தானே ஓதும் பிரகலாதன் என்க. திருஞானசம்பந்தர், நம்மாழ்வார் தாயுமானவ சுவாமிகள், இராமலிங்க வள்ளலார் போன் றோர் பிறர் ஓதாமல் தானே ஓதும் அருளாளர்கள் எனலாம். நீதிசேர் — தந்தையென்ற உறவுக்கு இட மின்றி நீதி வழிப்படி நடந்த பிரகலாதன் என்க. நெடும் புகழ் — நிலைத்த புகழ் என்க. 'மன்னா உலகத்து மன்னுதல் வேண்டித் தம்புகழ் நிலைஇய தாமாய்ந்தனரே' எனப் புறநானூறு கூறும். வேணி — சடை. தாப்பரா — பிரதிஷ்டை செய்யப்பட்ட. ஆதி மூலம் — முதல் காரண மான கடவுள்; விஷ்ணு. நீரில் முதலையின் பிடியில் சிக்கிய கஜேந்திரன் என்ற யானை ஆதிமூலமே எனத் திருமாலை அழைத்ததாகப் புராணத்தில் பார்க்கிறோம். ஆதிபகவன் என்றே வள்ளுவர் குறிப்பிடுவார். பாதமெனினும் பதமெனினும் திருவடியையே குறிப்பிடும். அமிர்தவல்லி — இறைவியின் பெயர். பல கோயில்களில் அம்மனுக்கு இப் பெயரைக் காண்கிறோம். தருமபுரியிலும் இப் பெயரில் அம்மனை அழைத்தனர் போலும்! தொன்றை மாலையை யணிந்த சிவனாகிய ஆதிமூலத்தை யும் அமிர்த வல்லியையும் வணங்குகிறார்.

4. அண்டர் நாயகன் — திருமால். அருவுரு — இறைவன் அருவமாகவும் உருவமாகவும் அரு உருவமாகவும் விளங்கு பவன். சிவலிங்கத்தை—சோதியை. வெட்டவெளியை அரு வமாகக் குறிப்பிடலாம். நடராசர். சோமாஸ்கந்தர் போன்ற பல்வேறு மூர்த்தங்களை உருவமாகக் குறிப்பிட

லாம். இலிங்கோத்பவரை அருவுருவாகக் குறிப்பிடலாம். அதேபோல் மனித உடலும் விலங்கின் தலையும் கொண்ட நரசிம்ம வடிவை அருவுரு என ஆசிரியர் குறிப்பிடுகிறார். தூணில் அருவாய் இருந்தவர், அருவுருவாய் வெளிப்பட் டார். தொண்டன் -தொண்டில் சிறந்தவன். 'தொண்டர் சீர் பரவுவார்' என்றே சேக்கிழாருக்குப் பெயருண்டு. குல சேகர ஆழ்வார்,

தொண்டர் கால்பட்ட சேற்றினைத் தம் நெற்றியில் பூசிக் கொள்ள விழைகிறார். அவ்வையார், 'தொண்டர் தம் பெருமை சொல்லவும் முடியாது' என்கிறார். இறை யருள் பெற்றவர்களை முற்காலத்தில் தொண்டர் என் றனர். இன்று அரசியல் கட்சி அல்லது ஓர் அமைப்பின் ஊழியரைத் தொண்டர் என்கிறோம். வண்டமிழ் புனை யும் செல்வி— கலைமகள். தருமபுரி கோட்டைக் கோயில், காமாட்சி அம்மன்கோயில், அர்த்த மண்டப நுழைவாயில் களில் கலைமகளின் அருமையான சிற்பங்களைக் காண லாம். இப் பாடலில் கலைமகளை வணங்குகிறார். புலவர்கள் தமிழைப் பலவாறு போற்றுவார்கள். இங்கு வண்டமிழ் எனப் போற்றப்படுகிறது.

5. இருநிலம் — பெரிய உலகம்; மாநிலம். 'மாநிலம் சேவ டியாக' என்பர் சங்கச் சான்றோர். பெருநில முழு தாளும் என்பர் இளங்கோ. பிரபல நாடகம் — பிரபல் யமான நாடகம். பலகாலும் பலராலும் நடிக்கப்பட்ட நாடகம் என்க. தஞ்சை மாவட்டம் மெலட்டூர், சாலிய மங்கலம் போன்ற ஊர்களில் பிரகலாத நாடகம் இன்றுங் கூட பிரசித்தம் எனலாம். பழங்காலம் முதல் இந் நாடகம் மக்களால் விரும்பப்பட்டு வருகிறது. பல மொழிகளில் பலர் இந் நாடகத்தை இயற்றி உள்ளார்கள்.

செந்தமிழில் நான்கு வேதத்தை, நாலாயிரத் திவ்யப் பிரந்தமாக 12 ஆழ்வார்கள் இயற்றியதாகக் கூறிப் பன்னிரு ஆழ்வாரை வணங்குகிறார் நூலாசிரியர். சைவர்கள், நால்

வின்ற அல்லது அறுபத்துமூவரை வணங்குவதை ஈண்டு நினைவில் கொள்ளலாம். திவ்யப் பிரபந்தத்துக்கு, ஈடு (உரை) இயற்றியவர்களும் வேதத்தின் சாரமே ஆழ்வார் களின் பாடல்கள் என்பார்கள்.

6. அவையடக்கம் மேற்கண்ட 5 பாடல்கள் மூலம் காப்புச் செய்யுட்களாகப் பாடிய நூலாசிரியர், இனி அவை யடக்கம் பாடுகிறார். அறிஞர் முன் தம் பாடல் சாதார ணமானது. கண்ணும் வாயு மில்லாதவன் ஒளியைக் காட்டுவது போலும். சூரியனின் ஒளியையும் சந்திரனின் குளிர்ச்சியையும் காட்டவும் வாயால் கூறவும் கண்ணும் வாயு மில்லாதவனால் முடியாததுபோல் பிரகலாத நாடகம் இயற்றிய தம் நிலை உள்ளது என்கிறார்.

## ஆக்கியோன் பெயரும் ஊரும்

7. இப் பாடலில் நாடகத்தை எழுதிய ஆசிரியர் பெயரை யும் ஊரையும் பார்க்கிறோம். வருண மா புரி என வழங்கப்பட்ட (இன்றைய தருமபுரி) ஊரில் குலவேள் பிள்ளை மகன் திருக்காமி என்பவர் நாடகம் இயற்றி உள்ளார். தரும நல்லூரில் வாழும் சபாபதியை நூலா சிரியர் துதிக்கின்றார். நாடகத்தை அரங்கேற்றம் செய்ய சபாபதி உதவி புரிந்தார் போலும்! சபாபதி நிலக்கிழாராக வாழ்ந்திருக்கலாம். இவரைப் பற்றி வேறு விவரம் தெரிய வில்லை. ஏற்கனவே அச்சில் வந்த நூலில் திருக்காமி என்ற பெயரில்லை.

8. இந்தத் தருவில் விஷ்ணுவின் பல்வேறு நாமங்களைப் பாடுகிறார். இறைவனுக்கு ஜெயமுண்டாகட்டும்! என் கிறார். சீதாமணாளனே! கோவிந்தனே! தேவகி மைந்தனே! நந்தகுமாரனே! மாதவனே! வைகுந்தனே! வாசவனே! முகுந்தனே மச்சாவதாரமெனே! ஆமைவடுத்த

அவதார மெடுத்தவனே! வராக அவதாரமெடுத்தவனே! சிம்மாவதாரமெடுத்தவனே! வாமன அவதாரமெடுத்த வனே! ராமனாய், பரசுராமனாய், பலராமனாய் அவதார மெடுத்தவனே! கிருஷ்ணனே! பரந்தாமனே! மகாலட்சுமி மணாளனே! பீதாம்பரத்தைப் பூண்டவனே! அகலங்க மனிதனே! கோதனை டனே! கோபாலனே! வாசுதேவ! மைந் தனே! பக்தர்களைப் பரிபாலிப்பவனே! பத்மனே! விசால அறிவுள்ளவனே! சித்தர் பணியும் கோபாலனே, திரு மகளை மார்பில் பூண்டவனே! உமக்கு வெற்றி உண்டா கட்டும் என்கிறார்.

9. இறைவனுக்கு ஜெய மங்களம் பாடுகிறார். மங்கள கரமான நரசிம்ம மூரத்தியாகிய மாதவா என்கிறார். கோவிந்தனை மாயனாகக் கூறுகிறார். கோவிந்தன் குழல் கொண்டு ஊதினபோது பறவையின் கணங்களும், கறவையின் கணங்களும் இசையில் மயங்கியதாகப் பெரி யாழ்வாரும் பாடுவார்.

பங்கயக் கண்ணான் — தாமரைக் கண்ணான். பணிப் புயல் வண்ணன் — மேகவண்ணன். அங்கசன் — மன் மதன். சச்சுதநந்தன் — சச்சிதானந்தமானவன். சத்து — சித்து — ஆனந்தம் கொண்டவன். இங்குத் திருமாலைக் குறிக்கிறது. அச்சுதன் — அழிவற்றவன். ஈண்டு விஷ்ணு

“அச்சுதா அமரர் ஏறே ஆயர்தம் கொழுந்தே என்னும் இச் சுவை தவிர யான் போய் இந்திர லோக மாளும்” வாழ்வை யான் விரும்பவில்லை என்கிறார் ஆழ் வார். அமலன் - குற்றமற்றவன்; விஷ்ணு. சீதேவிமார்பன் — திருமால். தேவாதி தேவன் — தேவர்களுக்கும் தலை வன்; ஈண்டு விஷ்ணு. பூதேவி முதல்வன் — பூவராக மூர்த்தி; நிலமகள் கணவன்.

10. இப் பாடல் அகவற் பாவில் உள்ளது. 162 வரி களைக் கொண்டுள்ளது. இரணிய நாடகம் அல்லது பிரக

லாத நாடகத்தின் கதைச் சுருக்கமாக இவ் வகவற்பா அமைந்துள்ளது. பெரும்பாலான புராண நாடகங்களில் பொதுப் போக்காக இவ்வாறு அகவற் பாக்கள் அமைந்துள்ளன. 'மதிகெட்டான நாடகம்' என்ற நொண்டி நாடகத்தில் கதைச் சுருக்கம் அகவற் பாவில் 'அமைந்துள்ளது. அத்தி என்ற சொல் அதிதி. யினை— யிணை, துந்துமி — துந்துபி. மணிவெல என்பது மணிவெழ என்றிருக்க வேண்டும்.

காசிப முனிவன் அல்லது காசிபர். இவர் மரீசி அல்லது அரிசி என்ற ரிஷியின் குமாரர். தாயின் பெயர் களை, முனிவர், தக்ஷப் பிரஜாபதியின் குமாரிகள் பதின் மூன்று பேரை மணந்தார். அவர்கள் பெயர்கள் பின் வருமாறு: அதிதி, திதி, தநு, அநாயு அல்லது காலை, பிரதை அல்லது ஆயு, முனி, சுரசை அல்லது சிங்கிகை, இளை, குரோதவசை, தாமிரை, சுரபி, விநதை, கத்ரு.

காசிபருக்கும் திதி என்பவளுக்கும் இரணியனும், இரணியாட்சதனும் பிறந்தனர். வரி 1 முதல் 8 வரை காசிப முனிவனையும் அவன் தேவியர் பெயரையும் குறிப்பிடுகிறார். திதியென்பவள் சிவந்த கண்ணுடன் (காதல் பார்வையுடன்) அறிவுமயங்கி மாலை வேளையில் கணவனான காசிபனை வணங்கிக் கலவி புரியுமாறு அழைக்கிறாள். கலவி முடிந்த பின் திதியின் வயிற்றில் கருப்பம் உண்டாக குழந்தையின் வருங்காலத்தை முனிவர் கணித்துக் கூறுகிறார். நாராயணனால் குழந்தைக்குத் துயரம் வரும் என்கிறார். திதி, துயரத்துடன் அரி, சிவனேயென்று வருந்துகிறாள். நூறு வருடம் கருப்பம், தாங்கி பலசாலியான இரண்டு பிள்ளைகளை ஈன்றெடுக்கிறாள். காசினியும் அண்டமும் தேவர்களும் நடுங்குகிறார்கள். அக்குழந்தைகள் தாம் இரணியன் இரண்யாட்சனாவர். இவர்கள் இந்திரலோகம் சென்று சந்திர விமானம்

ஊர்ந்து இயமனுடைய தண்டைத் தாமே வாங்கி வெற்றி வீரராக விளங்கும்போது, இரண்யாட்சன் பூமியைப் பாயாய்ச் சுருட்டிக் கொண்டு கடலில் ஒளிக்க, திருமால் வராக அவதாரமெடுத்து இரண்யாட்சனை மாய்க்கிறார். வரி 9 முதல் 44 வரை திதியின் குழந்தைகள் பிறப்பும், அக் குழந்தைகள் பெரியவராகிப் புரியும் அட்டகாசங்களும், இரண்யாட்சன் இறப்பும் விளக்கப்படுகின்றன. தம்பி, இறந்த செய்தி கேட்டு இரணியன் துயரமுற்ற மனத்தினனாய்க் கண்ணீர் பெருக்குகிறான். இனி சாவா தவரத்தைப் பெற வேண்டிக் காட்டையடைந்து, பதுமாசனத்தில் அமர்ந்து மிகக்கடுமையாகத் தவம் புரிந்து பதினாயிரம் வருஷம் கழிக்கிறான். இரணியன் மேற்கொள்ளும் கடுமையான தவத்தினைக் காணச் சகியாமல் பரிதாபப்பட்டு வரந் தருமாறு தேவர்கள் பிரம்மாவிடமுறையிடுகின்றனர். பிரம்மாவும் தவம் புரியும் இரணியன் முன்தோன்றி, 'என்ன வரம் வேண்டு'மெனக் கேட்கிறான். தேவர்களாலும், உலகத்தவர்களாலும், மற்றும் யாவர்களாலும், பல்வேறு ஆயுதங்களாலும், மண்ணிலும் விண்ணிலும் உள்ளும், புறமும், பகலிலும் இரவிலும் தன் உயிர் போகாதவாறு வரம் தர வேண்டும் என இரணியன் கேட்கிறான். பிரம்மாவும் வரம் தருகிறார்.

வரம் பெற்ற இரணியன் தேவருலகம், திருமாலுலகம் உட்பட 14 உலகங்களும் சென்று வென்று திருமால், சிவன் பெயரை மாற்றித் தம் பெயரே எங்கும் ஒலிக்கும்படி முனிவர் உட்பட அனைவருக்கும் ஆணையிடுகிறான்.

வரி 45 முதல் 86 வரை இரணியன் தவமும், வரமும், வரம் பெற்றபின் இரணியன் மேற் கொண்ட செயலும் விவரிக்கப்படுகின்றன.

88. முதல் 91 வரி துந்துபி, துடி, முரசு, பேரிகை, மல்லரி தாளம், சல்லரி, பம்பை என்பன இசைக் கருவிகள்.

92. முதல் 93 - மழு, வாள், ஈட்டி, கழுமுனை, கப்பணம், கணை, சிலை — போர்க் கருவிகள்.

94. கதிரொளி — சூரிய ஒளி,

95. தரமணி — அணிகலன்

96 சன்னவீரம் — ஓரணிகலன்

97. பதக்கம் — ஓரணிகலன்
மணிவெயில் — ஒளிவீச

98. சந்திரகுடை நிழல் — குளிர் வெண்குடை

99. கந்தம் — வாசனை

94 முதல் 99 வரை அணிகலன் வருணனையாகும்.

100, 101 தீபக்கண்ணன், செழுஞ் சுடர்க் கண்ணன் தூபக் கண்ணன், சுரோணிதக் கண்ணன். படைத் தலைவர்கள் ஆவார்கள்.

102. அழகிய பூமியை ஒரு கையாலே ஏந்தும் வீரன் சம்பரன்

103. சம்பரன் ஓர் அசுரன். இவன் இந்திரனால் கொல்லப்பட்டவன் ஆவான். தானவர் — தேவர்.

104. சுரமங்கை — தேவப் பெண்டிர்

105. அரமங்கை — வானவப் பெண்டிர்

106. வானவர் — தேவர்கள்

110. லீலாவதி — இரணியன் தேவி

112 — 113 — பிரகலாதன் அனுகலாதன், கிலாதன், சமகிலாதன் நால்வரும் இரணியனின் குமாரர்கள். சிம்மகி என்ற மகளுமுண்டெனப் புராணத்தில் பார்க்கிறோம். ஈண்டு குறிப்பிடப்படவில்லை.

115. வித்தை — கல்வி

116. பார்க்கவன் — பிரகலாதனுக்குப் பாடம் புகட்டிய ஆசிரியர், சுக்கிராச்சாரியர்.

120. குரு, 'இரணியநமா' வெனப் பாடம் கற்பிக்கிறார்.

122. பிரகலாதன் — 'நாராயணாநமா' என்கிறான்.

123. நீராகி உருகி — பக்திப் பரவசமாய்க் கண்ணீர் ததும்ப.

'காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி'
என்பது தேவாரம்.

125. சரணம் — அபயம்
சலம் — தண்ணீர்

126 முதல் 140 வரை பிரகலாதன் படும் தொல்லைகளும் அதன் விளைவுகளும் விவரிக்கப்படுகின்றன.

141 முதல் 154 வரை ஆணவத்தின் உச்சியில் சென்ற இரணியன் நிலையும், அழிவும் ஆசிரியர் விளக்குகிறார்.

145. பாணி — கை. இரணியன் தூணினைக் கையால் அறைய இறைவன் வெளிப்படுகிறான்.

147. நாரசிங்கம் — நரசிம்ம அவதாரம். பழைய தரும புரியில் நரசிம்மப் பெருமாள் கோயில் உள்ளது. கோட்டைக் கோயில் தூண்களில் ஒன்றில் நரசிம்ம அவதாரம் செதுக்கப்பட்டுள்ளது. ஏற்கனவே பார்த்தோம்.

152. இமையோர் — இமைக்காதவர்; தேவர். கால் நிலம் தோயாமையும் கண்கள் இமைக்காமையும் தேவர் இயல்பாகும்.

153. பூதலம் — உலகம்

158. திருக்காமி என்பார் நாடக ஆசிரியர் என்பதை இங்கும் பார்க்கிறோம்.

159. நாட்டிய தருமநல்லூர் — நாட்டியங்கள் பல நடைபெறும் தரும நல்லூர் என்க. தருமநல்லூர் — இன்றைய பழைய தருமபுரி எனலாம்.

160. பாட்டினில் புலவனாக, பைந்தமிழ் வித்தகனாக, கவிஞரைக் காண்கிறோம்.

161. நானிலம் — முல்லை, குறிஞ்சி, மருதம். நெய்தல் என்று கூறப்பட்ட நானிலம்

162. பதம்சிரம் — பெரியோர் பாதத்தைப் புலவர் சிரத்தால் பணிகின்றார்.

'மட்டில்லா' என்ற பாடல் 11 ஆம் பாடலாகும்.

11. இப் பாடல் அறுசீர் விருத்தம் கட்டியக்காரன் வருகையைத் தெரிவிக்கிறது அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலக ஏட்டில் பாடபேத முண்டு. வசனமும் வேறாக உள்ளது.

மட்டில்லாப் பணிகள் — மிகுந்த அணிகலன்கள். சல்லடம் — அரைக்கால்சட்டை. சட்டமாம் சாலு — வண்ணான்சால் என்க. களரியில் — மேடையில் இராணிய — இரணிய என்றிருக்க வேண்டும். விச்சித்திர — விசித்திர என்றிக்க வேண்டும்.

12. ஆக்கிரமம் —வலிமை. ஆஸ்தான சந்தோஷி — விகடகவி. அண்டர் — தேவர். கொண்ட — கொண்டல் என்றிருக்க வேண்டும்.

13. சிந்தூரம் — சிவப்பு. கந்தபரிமளம் — மிகுந்த வாசனை. கோணை — வளைவு, விந்தைபதம் — விந்தையான இசைப்பாட்டு. கட்டியக்காரனின் தோற்றத்தையும் செயலையும் இவ் விருத்தத்தில் காண்கிறோம். நாடகங்களில் நகைச்சுவையூட்டும் வண்ணம் விதூடககவிகள்

பாடுவார்கள். போற்றும் — போற்ற என்றிருக்க வேண்டும். அசிர்வதிக்க — ஆசிர்வதிக்க என்றிருக்க வேண்டும்.

14. அரசவை கொலுவில் இரணியன் அமர்ந்துள்ள தன்மையைக் குறிப்பிடுகிறார். பூமியிலும் கோள்களிலும் வாழ்பவர்கள் இரணியனை வாழ்த்துகிறார்கள், எண்டிசை காக்கும் தேவர் — திசைக்காவலர்கள். மண்டலம் — கூட்டம் அல்லது உலகம். மாமுனிவோர் — சுக்கிராசாரியார், விசுவாமித்திரர் போன்றோர். ஆசீர்கொண்டிட — ஆசீர்வாதம்புரிய.

15. கந்தருவர் — காந்தருவர். காந்தருவர், இசைபாடுபவர். கோயில்களில் காந்தருவர் சிற்பங்களைக்காணலாம். தருமபுரி கோட்டைக் கோயில் தூண்களில் காந்தருவர் சிற்பங்கள் பல உள்ளன.

கிம்புருடர் — தேவர்களில் ஒருகணத்தார். கொந்து — கொத்து; திரள்.

16. தங்கத்தினாலான பெரிய மகுடம் — கிரீடம். சரப்பளி — கழுத்தணி. துங்கம் — உயர்ச்சி அல்லது பெருமை. துய்ய — தூய அல்லது உறுதியான.

17. குதிகோன் - செருக்குக் கொண்டவன் தேவதுஷ்டன் — தேவர்களுக்குத் துஷ்டன் அதாவது சுராந்தகன். ஆரம்பிக்கும் பொன்மணி எனத்தொடங்கும் வரிமுதல் சுந்தர என்ற வரிவரை இரண்டாம் வரி உள்ளடக்கி இருக்க வேண்டும். பொன்மணிமகுடம் — பொன்னால் செய்யப்பட்ட, மணிமகுடம். மணி — நவரத்தினங்கள். பூந்துகில் — பூப்போன்ற ஆடை. வந்திக — வந்திகை, கைவளை அல்லது வணங்க. மின்னுமிடை — மின்னல் போன்ற சிற்றிடை. இரம்பையர்கள் —

இரம்பை, ஊர்வசி போன்ற அழகுதேவதைகள். வருணன் — திசைக்காவலர்களில் ஒருவன். சங்க காலத்தில் நெய்தல் நிலக் கடவுளாக, வருணன் குறிக்கப்பட்டுள்ளான். மந்த — மந்தன் — யமன். பெருமதி — முழுமதி; சந்திரன். சுபரிபம் — சுப்பிரதீபம்; மிக்கஒளி. சூரர் — வீரர். பிண்டி — தொகுதி. சுரர் — தேவர். துந்துபி — பேரிகை. சங்கீதலோலன் — சங்கீதத்தை விரும்புபவன்.

18. சம்பாசூரன், விசாலக்கண்ணன், எரிகண்ணன், கருங்கண்ணன் இவர்கள் நால்வரும் படைத்தலைவர்கள் ஆவார்கள்.

19. சுட்டி, வல்லையம், கட்டாரி, சூரி, உடைவாள் போர்க்கருவிகள் ஆகும். பேட்டி சந்தித்துப் பேசவேண்டி. கொண்டல் — மேகம். மண்டிசேனம் — மிகுந்தசேனை. எண்டிசை காக்கும் தேவர் — திசைக்காவலர்.

20. வெம்பு — சினமிக்க. விண்ணயம் — வினயமாக; பணிவாக. தண்டுழாய் — குளிர்ந்த துளசி மாலை. இம்பர் — இவ்வுலகு.

21. இந்திரலோகம், சந்திரலோகம், பிரமலோகம், தருமலோகம், சூரியலோகம் சிவலோகம், முனிவர் மடங்கள, மனிதலோகம் ஆகிய இடங்களில் சென்ற படைத்தலைவர் வைகுந்தலோகம், போகவில்லை. இந்திரன், சந்திரன் பிரமன் போன்றோரை மிரட்டிய அசுரர் அரனார்லோகம் சென்றபோது அரனாரை அங்குக் காணவில்லை. சிவனையும், அரியையும் மட்டும் தாழ்வாகக் கூறக் கூடாது எனப் புலவர் கருதியுள்ளார். மனிதர் வாழும் உலகம் சென்ற அசுரர் மனிதருக்குக் கெடுதல் ஏதும் செய்யவில்லை. மாறாக அவர்களை வணங்கி அவர்களின் குணங்களைக் கொண்டதாகக் குறிப்பிடுகிறார். அரிது அரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது என ஔவையார் குறிப்பிடுவார்.

'மனிதப் பிறவியும் வேண்டுவதே இம் மாநிலத்தே' என்பார் நாவுக்கரசர்.

'மானிடம் வென்றதம்மா' என்பார் கம்பர்.

மனிதப்பிறவி மூலந்தான் இறைவனை அடைய முடியும் என்கிறார் மணிவாசகர்.

'தேவரனையர் கயவர் அவருந்தாம் மேவன செய் தொழுகலான்' எனத் தேவர்களைச்சாடிய வள்ளுவர், மனிதப் பிறவியைப் புகழ்கிறார். மனிதப்பிறவியை இழிவாகக் கருதாமல் உயர்வாகக் குறிப்பிடும் புலவர் சிறந்த பண்பாளரேயாவார்.

'மனிதனாக வாழ்ந்திடவேணும் மனதில்வையடா தம்பி - மனதில்வையடா' என்ற பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரத்தின் கருத்து இங்குப் பேசப்பட்டுள்ளது.

22. விசையம் — விஜயம் பயணம். வரிசை — பரிசு; தகுதிக்கேற்ற பரிசு. இரவலர்க்கு ஈதல் எளிது. ஆயின் வரிசையறிந்து ஈதல் சிரமம் எனக் கபிலர் சங்க காலத்தில் பாடியுள்ளது ஈண்டு சிந்திக்கலாம். விந்தையான முறையில் படைத்தலைவர் தகுதிக்கேற்ப வெகுமதி தந்து அனுப்புகிறான்.

23. அடைவு — முறை அல்லது தகுதி. தொடை — பூமாலை. தொடைவலார் முனிவன் — நாரதன்

24. நாரதமுனிவர் வீணையை மீட்டி, எழுவகை இசையைப் பாடியபடி வருகிறார். ச, ரி, க, ம, ப, த, நி என்க. சுருதிமறை — வேதம். ஒருபொருட்பன்மொழி. முனிவருக்குரிய கோலத்தில் நாரதர் வருகிறார்.

25. ஈரேழு புவனம் — பதினான்குலோகம். இகட்சி புகட்சி — இழிவும் உயர்வும். ஏருடன் — அழகாக இரப்பும் ஓர் ஏருடைத்து என்பர் வள்ளுவர்.

26. மகிமை — பெருமை. செப்புவேன் — கூறுவேன்.

27. சற்குணன் — சகல குணங்களையு முடையவன் விற்பனம் — திறமை. குலகாலன் - குலத்திற்குக் காலன் போன்றவன். பிரகலாதன் பெருமை கூற முடியாது என்கிறார். சத்தியம் தவறாத வாக்கியன் — அரிச்சந்திரன் போன்றவன். அறியாத பக்தி — பிறர் அறிய முடியாத பக்தி; வைராக்கிய பக்தி.

உன் பேரெடுக்கும் — உன்னைப் போல் புகழ் எடுக்கும் என்ற பொருளுடன், இரணிய நமா வென்ற உன்பேர் எடுக்கும் என்ற பொருளும் தொனிக்க ஆசிரியர் பாடல் இயற்றியுள்ளார். பேர்-புகழ்ப் பெயர். பிராயம் — வயது; குழந்தைக்கு ஐந்து வயது முடிந்த பின்பே பள்ளியில் சேர்க்க வேண்டும் என்ற இன்றைய உளவியல் கருத்தை ஈண்டு பார்க்கிறோம்.

28. நவில் — சொல்ல. புளகம் பூத்து — புளகாங்கிதமடைந்து. பாரிய புயங்கள் — பெருத்த புயங்கள் (தோள்கள்). மூலவர் — நாரதர்.

29. ஈது — இதனை. இசைந்து — பொருத்தமாக. நிமித்தயம் — நல்ல சகுனம். வேத நூல் — இரணியன் வாயாலேயே வேத நூல் பிரகலாதனுக்குக் கற்றுத் தரப்படும் என்ற செய்தியைப் பார்க்கிறோம்.

30. ஏவல் செய்யும் தையலார் — ஏவற் பெண்டிர்; சிலதியர் என்றும் கூறுவர். ஏந்திழைமார்கள் சூழ லீலாவதி வருவது விண்மீன்களுக்கிடையே வெண்மதி போலிருந்தது என்கிறார். ஏந்திழைமார் — தாதியர் அல்லது தோழியர்.

31. சுட்டி — நெற்றிப் பட்டம். முகம் சந்திரன் ஒளி போல் மின்னுகிறது. கொத்து மாலை — பூமாலை. குழை — காதணி; ஈண்டு லளையம் அல்லது குண்டலம். நூபுரம், கிண்கிணி, தண்டை, தங்கவளை — அணி கலன்கள்.

3. கமலாவதி — இலக்குமி. சோடு — இணை. நடைக்கு அன்னத்தை உவமிக்கிறார்.

''அன்னம் நடப்ப நடப்பாள் செங்கண் கொன்னே வெய்ய கூற்றம் கூற்றம்'' என்பார் இளங்கோவடிகள். மணி நாகப் படமோ மதனவீடு — இடக்கரடக்கலுடன் உவமை மூலம் பெண்ணுறுப்பைக் கூறுகிறார். தொடைக்கு வாழைத் தண்டையும் துடி யிடைக்கு மின்னலையும் கூறுகிறார்.

''பீடும் பிறர் ஒப்பம் பாராய் முலை சுமந்து வாடும் சிறுமென் மருங்கு லிடையிழவல் கண்டாய்'' என்பர் இளங்கோவடிகள்.

தாதிமார்கள், கவரி — விசிறி வீசுகின்றனர். நயனத் துடன் நயனம் பேச — கண்ணோடு கண் பேசுதல்.

கண்ணோடு கண்ணோக்கின், காதலர்க்கு வாய்ச் சொற்கள் தேவையில்லை என்று வள்ளுவர் கூறுவார். லீலாவதியின் மொழிகள், காந்தள் விழிகள் தோழி மார்களுடன் விழிகளாலேயே பேசுகிறாள்.

பெண்கள் விளக்கேற்ற, இரணியனது இரு கண் களைப் போன்ற லீலாவதி வருகிறாளாம். லீலாவதியை மேடையில் அறிமுகம் செய்யும் ஆசிரியர், விளக்கேற்றும் மங்கலச் செயலுடன் அறிமுகப்படுத்துகிறார். சங்கப் பெண்டிர் நெல்லும் மலரும் தூஇய் கை தொழுததை பார்க் கிறோம். ஈண்டு மாலையில் விளக்கேற்றுவதைப் பார்க் கிறோம்.

34. அண்ணல் — தலைமை சான்றவன்; "அண்ணலும் நோக்கினான் அவளும் நோக்கினாள்" என்பார் கம்பர். காந்தியடிகளுடன் அண்ணல் என்ற சொல்லையும் சேர்த்தே அழைக்கிறோம். நண்ணி — விரும்பி.

கணவன் மனைவி கருத்தொருமித்து வாழ்வதை இப் பாடலில் பார்க்கிறோம். ஈரேழுலகங்களையும் அடக்கி ஆளும் இரணியன், தன் மகன் கல்வி குறித்து மனைவியின் எண்ணத்தைத் தெரிந்து கொள்ள விழைவது சிறப்பான தன்மையாகும்.

35. கணவனின் விருப்பமே தன் விருப்பம் என லீலாவதி கூறுவதைப் பார்க்கிறோம்.

"போற்றா வொழுக்கம் புரிந்தீர் யாவதும் மாற்றா வுள்ள வாழ்க்கையே னாதலின் என்றெழுந்தனன் யான்"

எனக் கண்ணகி கோவலன் இல் வாழ்க்கையை இளங்கோ கூறுவார். இங்கே சீரிய செயலுக்கு லீலாவதி உடன்படுகிறாள்.

36. பார்க்கரன் — சுக்கிராச்சாரியின் மற்றொரு பெயர் அவர் தோற்றத்தையும் நடையையும் விவரிக்கிறார். கழுகட்டு — அக்குள். பொஸ்தகம் -ஓலைச் சுவடி. சோமன் — வேட்டி

37. வேதத்தியானம் — அத்தியயனம்; வேதம் ஓதுதல்.

38. பிரகலாதன் மேடையேறும் காட்சியைக் கூறும் ஆசிரியர் பெரிதும் புகழ்கிறார். கம்பர் இராமனைத் தம் கூற்றாகக் கூறும்போது பெரிதும் பாராட்டுவது போல் ஈண்டுள்ளது. தேவரும், முனிவரும், மண்ணுலக மாந்தரும் செய்த மாதவத்தின் வடிவம்போல் பிரகலாதன் தோன்றுகிறானாம். தம்மை நரகில் விழாமல் காத்தவனாம். அண்ணல் என்றெல்லாம் கூறிய புலவர் இறுதியில் ஆண்டவனாகவே கருதுகிறார்.

"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படும்" என்றாரன்றோ பொய்யா மொழிப் புலவர் வள்ளுவர்.

'திருவுடை மன்னரைக் காணில், திருமாலைக் கண்டதாகத் திருமங்கையாழ்வார் குறிப்பிடுவார்.

39. சிந்தாகுலம் — மனக்கவலை. பிரகலாதன் தோற்றப் பொலிவை விவரிக்கிறார். கழுத்தில் மரகத மாலை, தலையில் மணிமுடி; காதில் மகரகுண்டலம்; காலில் தண்டை, சதங்கைகள்; கைகளில் கடகங்கள் அணிந்தபடி தேரில் வருகிறான். வந்தவன் தந்தையின் காலில் விழுந்து வணங்குகிறான்.

40. மகன் மீது கொண்ட தாயின் பாசத்தை சொற்களில் காட்டியுள்ளார். சுரர் — தேவர்.

41. கல்விச் செல்வத்தின் சிறப்பை ஆசிரியர் விவரிக்கிறார். வாசமலரவன் - இந்திரன். அரிசிதவு மயன்- அரி, சிவன், நான்முகன். வசிஷ்டர், புலத்தியர், காசிபன். பரத்துவாசி ஆகியோர் முனிவர்கள் ஆவார்கள்.

"உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும் பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே" என்பன போன்ற பெரியோர் மொழி தப்பல்ல என்கிறார். குருவின்றி வித்தை கற்றல் ஏற்புடையதாகாது என்பதை ஏகலைவன் வரலாற்றிலும் பார்க்கிறோம்.

'மக்கள் மெய் தீண்டல் உடற்கின்பம் மற்றவர் சொற்கேட்டல் இன்பம் செவிக்கு" என்பார் வள்ளுவர். பள்ளிக் கூடத்தில் படித்த பாடத்தை மகன் வீட்டில் சொல்லக் கேட்டு மகிழ லீலாவதி விரும்புகிறார்.

42. கருட வாகனத்தையே வாகனமாகக் கொண்ட திருமாலின் திருவடியை மனதிலே ஏற்றுக் கொண்ட பிரகலாதன், அவன் பெயரை நாளும் ஓத, இரணியன் காலில்

விழுந்து வணங்குவதாக ஆசிரியர் கூறுகிறார்.

43. இப் பாடலில் தந்தை மகன் மீது கொண்ட பாசத்தைப் பார்க்கிறோம்.

44. களம் — சந்தனக் கலவை. கெந்தம் — வாசனை. மந்தாரம் — செம்பரத்தைப் பூ. அமுது - உணவு. 'அமுது உண்க அடிக ளீங்கென' என இளங்கோ குறிப்பிடுவார்.

45. பிரகலாதனுடன் ஓத வேண்டி, தளகர்த்தர் பிள்ளைகளை அழைத்து வருமாறு மன்னன் தூதனிடம் கூறுகிறான்.

46. இந்தப் பாடலை இரண்டு அறுசீர் விருத்தமாக தனித்தனியே குறிப்பிடலாம். எனினும் சுவடியில் இருந்தபடி ஒரே தருவாக அச்சிடப்படுகிறது.

குச்சி — குச்சம். கொத்து அலங்காரத் தொங்கல். மாலிகை — பூமாலை. பத்தரை மாற்றுப் பசுப்பொன் — மாற்றுக் குறையாத பைம் பொன் என்க. பணிகள் — அணிகலன்கள். சுட்டி — நெற்றியணி. சொர்ணம் — பொன்.

இப் பாடலில் தண்டமிழ் நூல் ஓதவென ஆசிரியர் கூறுகிறார். முன்னர் வேதத்தியயனம் சொன்னவர் இங்குத் தமிழ் கூறுவது புலவரின் பற்றைக் குறிப்பிடுகிறது.

47. குல்லா — பிறமொழிச் சொல். பஞ்சாங்கம் பார்ப்பவர் தோற்றத்தைப் படம் பிடித்துக் காட்டுகிறார்.

48. உபதேசம் — அறிவுரை. ஆசார பாதம் — ஆசிரியர் பாதம்.

49. வெள்ளியோன் — சுக்கிராச்சாரியார்

50. நியமம் — நியதி. கனகன் — இரணியன். பாடலில் வீட்டுக்கு முகமாக என்று சொன்னவர், உரையில் கிழக்கு

முகமாக அமர்ந்து படிக்கும்படி கூறுகிறார். வடக்குத் திசை புண்ணிய திசையாகும்.

## குருவும் சீடனும் ஏட்டிக்குப் போட்டியாகப் படித்தல்

51. மச்சாவதாரம் — திருமாலின் பத்து அவதாரங்களில் ஒன்று. மச்சம் — மீன். கூர்மாவதாரம் - ஆமையவதாரம்

52. இரணிய நமோ வென்ற வார்த்தைக்கு, காது மூடிக் கொண்ட பிரகலாதன், அரி அரி என்றபோது கண்களில் நீர் ததும்ப உச்சரிக்கிறான். 'அழுதால் உன்னைப் பெற லாமே' என மணிவாசகரும் இறைவனிடம் வேண்டு வார்.

53. நமன் — யமன். நிமலன் — குற்றமில்லாதவன். கசடர் — குற்றமுள்ளவர்.

''கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக''

என்பார் வள்ளுவர்.

நாபிக் கமலம் — உந்திக் கமலம் அல்லது கொப்பூழ். திருமாலின் கொப்பூழிலிருந்து நான்முகன் தோன்றினான்.

54. சிந்தையலம் — மனத்தில் துன்பம்

55. பஞ்சகிர்த்தி தேவர் — ஐந்தொழில் வல்ல தேவர்கள்

56. சதுர்மறை — நான்கு வேதங்கள்

57. எங்கும் எதிலும் நிறைந்த இறவனைப் பாடுகிறார். அஞ்சன மேனி — கரிய மேனி; மாயோன். கஞ்சமலர் — தாமரை மலர். பீதாம்பரம் — பட்டுப் பீதாம்பரம்.

58. நித்தியம் — நிலையானது. பித்தர்கள் — பிதற்று பவர். 'பித்தா பிறை சூடி பெருமானே' என்பார்

சுந்தரர். கர்த்தா — முழு முதற் கடவுள். மால் பெயர்— மயக்கம் தருபவர் பெயர் எனினுமாம்.

'காயாம்பூ மலர்ப் பிறங்கலன்ன மாலை கடியரங் கத் தரவணையில் பள்ளி கொள்ளும் மாயோனைக் கண்டின்ப கலவியெய்தி வல்வினையேன் என்று கொலோ களிக்கும் நாளே' என்பார் குலசேகர ஆழ்வார்.

59. குரு உலக நிலையைக் கூறி, 'இரணிய நமா'வென்று கூறுமாறு ஓதுகிறார். காலம் தேசம் பார்த்து — இடம் பொருள் நேரம் பார்த்து. சீலம் — ஒழுக்கம்.

'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்; ஆலயம் தொழுவது சாலவும் நன்று'
என்பார் அவ்வையார். அதனை மேற் கோளாகக் குரு எடுத்தியம்புகிறார்.

அவ்வையார் என்ற பெயரில் மூவர் பெயர்களைப் பார்க்கிறோம். அதியமானைப் பாடியவர் சங்ககாலத் திலும், கம்பருடன் தருக்கம் புரிந்தவர் பிற்காலச் சோழர் காலத்திலும், குழந்தைகளுக்கு அறிவுரைகள் பாடியவர் மிகவும் பிற்பட்ட காலத்திலும் வாழ்ந்தவர்கள் ஆவார்கள். ஈண்டுள்ளவர் மூன்றாமவரேயாவர்.

60. மறையவர் - அந்தணர். இப் பாடலில் குருவின் கேள் வியும் சீடனின் பதிலும் உள்ளது. ஏடு ஒடிந்திருந்த தால் சில சொற்கள் தெரியவில்லை.

61. அறைகுறேன் — மொழிகிறேன்.

62. விதையின்றி விளைவுண்டோ — சுக்கிராச்சாரிய குருவே, நீர் கண்டதுண்டா? என்று பிரகலாதன் கேட்கி றான். தத்துவ குணத்திலே தன்னறிவு கண்டால் இன்பம் இன்பமே யென்கிறான்.

'தன்னை யறியத் தனக்கொரு கேடில்லை
தன்னை யறியாமல் தானே கெடுகின்றான்
தன்னை யறியும் அறிவை அறிந்தபின்
தன்னை யர்ச்சிக்க தானிருந் தானே''

என்று மொழிவார் திருமூலர்.

'உலகம் யாவையும் தாமுள வாக்கலும் நிலை பெறுத்தலும் நீக்கலும் நீங்கலா அலகிலா விளையாட்டுடையாரைக் கம்பரும் போற்றுவார்.

இந்தத் தருவில் உள்ள சரணங்கள் யாவும் தத்துவக் கருத்துகளாகும். திருவாசகத்துடன் ஒப்பிட்டு மகிழலாம். விஷ்ணு அல்லது பரமாத்மாவின் இயல்பு சரணம் 1ல் பார்க்கிறோம்.

முப்பொருள் — அறம், பொருள், இன்பம்; இனி முப்பாலாகிய திருக்குறளையும் குறிப்பதாகக் கொள்ளலாம்.

ஒரு வினை — ஒப்பற்ற விதி. விதியின் வலிமையையும் அரியின்றி உலகம் இல்லை என்பதையும் கூறுகிறார். இரு வினை யியல்பைக் கூறுகிறார்.

''ஒரு வினை ஒரு பயன் அன்றி உயக்குமோ இரு வினை என்பவை இயற்றி இட்டவை கருதின கருதின் காட்டுகின்றது தருபரன் அருள் இனிச் சான்று வேண்டுமோ'' என்ற கம்பன் பாடலை இச் சரணம் நினைவூட்டுகிறது.

போதம் — அறிவு. அதிதம் — எல்லைகடந்த ஒன்று; இறைவன், தற்பரன், சிற்பரன், நற்பரன் — இறைவன் நாமங்களாகும்.

63. புன்மை — இழிவு. ஒறுத்தல் — தண்டித்தல்.

'ஒறுத்தார்க் கொருநாளை இன்பம் பொறுத்தார்க்குப்
பொன்றுந் துணையும் புகழ்'

என்பார் வள்ளுவர்.

வன்மை — வலிமை அல்லது திறமை

64. பரியாசம் — கிண்டல்

65. பகுத்தறிவு — உண்மையான அறிவு; போதனை.

66. உடம்பு பெற்றதன் பயனே இறைவனுக்குத் தொண்டு புரிய என்பர். திருமாலின் பல நாமங்களையும் ஏத்து கிறார்.

"நாராயணா வென்னாத நாவென்ன நாவே" என இளங்கோவும் கேட்டாரன்றோ! நாராயண மந்திரம் கேட்காத செவி, பாம்புப் பொந்து என்கிறார். கேசவனை வணங்காத கைகள் உலக்கைகள் என்கிறார். சிதரன் பெயர் சொல்லாத நாக்கு தடிநாக்கு, ஊமைக்குச் சமம் என்கிறார். மாதவனை வணங்காத தலைகள் மயிர்ச் சிக்குள்ள பயங்கரமான தலைகளாகும் என்கிறார்.

அச்சுதனைச் சுற்றி வராத கால்கள் தறிக் கால்கள் என்கிறார். குடிசைக்கு நடுவே நடப்படும் கால்கள் தறிக் கால்கள் என்க.

கோவிந்தனைப் பார்க்காத கண்கள் மயிலின் தோகையில் உள்ள கண்கள் என்கிறார்.

மதுசூதனனை எண்ணாத உடம்பு வைக்கோல்புரி என்கிறார்.

தாமோதரன் தொண்டர்க்கெல்லாம் வைகுந்தமும் மற்ற மாந்தர்களுக்கு எமன் உலகில் நரகமும் கிட்டும் என்கிறார்.

திருமால் நேயனுக்குத் துளசி வாசனையுடைய காற்றும் மற்றவருக்கு உலையூதுங் கருவியில் வரும் பெரு மூச்சும் என்கிறார்.

அரி என்ற பெயரை உணராத மனம் கல் என் கிறார். 'நெஞ்சக் கனகல்லும்' என்பார் வாதவூரார்.

67. மாற்றம் — உரை. நயந்தமுதுண்ட தானோம்— இனிய சொல்லைக் காதால் கேட்டோம்.

'செந்தமிழ் நாடென்னும் போதினிலே — இன்பத்
தேன் வந்து பாயுது காதினிலே''

என்று பாரதியாரும் பாடுவார்.

68. பரம்பொருள் — இறைவன். சாலவே — சரியாக. ஏலவே —ஏற்புடையதாக. கேண்மோ — கேட்பீராக.

69. இறைவனே தம்மை நாடி ஆட்கொண்டதாகப் பிரகலாதன் கூறுகிறான். மணிவாசகரும் இவ்வாறே கூறுவார்.

பிரணவம் — ஓம் என்னும் மந்திரம். எட்டெழுத்து — ஓம் நாராயணா நமா' என்க. அரவிந்து நாதமாய் —பிரம நாதமாய். ஓங்காரம் — ஓம் என்னும் எழுத்து. இறைவனின் இயல்பை விவரிக்கிறார்.

''பாதம் பாதளமாகும். மைப் பொன்முடியே வானம்'' ஆதியும் அந்தமு மில்லா அருட்பெருஞ் சோதி, என்ற கருத்தை யொட்டியது. அடிமுடி காணா அண்ணல் என்க.

ஆதவன், மதி, வன்னி மூன்றும் சிவபெருமானின் முக்கண் என்க. கண்டு திருமாலுக்கு ஏற்றுகிறார்.

வாருதி — கடல். மால்வரை — மலைகள். மறை — வேதம். ஆதிநாரணன் — திருமால். சிலரூபன் — சிலை வடிவில் கூடிய பெருமாள். தருமபுரி மாவட்டத்தில் நடுகல் சிற்பமுள்ள நிலத்தைச் சிலைகாரப்பன் கொல்லை என வழங்கும் வழக்கம் இன்றுமுண்டு.

70. வேதம் ஓதும் முன்னரே உணர்ந்த பிரகலாதன் என்க. சாற்றி — உரைத்து. வெள்ளி — சுக்கிராச்சாரி யார். வழுத்துவன் — வணங்குவேன்.

71. விண்ணாடர் — தேவர்கள். மண்ணாடர் — உலகத் தவர். மறை — இரணிய நமா வென்ற சொல். பிரகலாதன் சொன்ன நாராயணா நமவென்ற சொல்லையும் கூற, சுக்கிராச்சாரியார் அஞ்சுகிறார்.

72. அனல் விழி — கோபத்தால் சிவந்த கண்கள்

73. ஆவியில் — மனதில். தெண்டனை — துண்டித்தல். மூவெழுத்து — விஷ்ணு

74. குழந்தையைக் கொஞ்சும் தகப்பனாகவே இங்கும் பார்க்கிறோம்.

75. அவுணர் — அசுரர். தன் மகனைப் பெரிதும் நம்பும் தந்தையாகவே இங்கும் பார்க்கிறோம். குருவின் வார்த்தை பொய்யாக இருக்கும் என நம்புகிறான்.

76. நவிகுவர் — துன்ப மடைவர்

77. மூன்றாசை — ஆணவம், கன்மம், மாயையில் உழலும் இவ்வுடம்பு; மண்ணாசை, பொன்னாசை பெண்ணாசை, மூன்றிலும் விருப்பம் கொள்ளும்.

'இப் பிறவி போய் நீங்க' பிரகலாதன் விரும்புகிறான்

'பிறவாமை வேண்டும் மீண்டும் பிறப்புண்டேல் உன்னை மறவாமை வேண்டும்' என்பார் புனிதவதியார்.

78. பருவம் — வயது

79. தந்தைக் கேற்பட்ட அவமானம் தனயனுக்கு முண்டல்லவா என்கிறான். இரணியன் செகத்தை உண்பது. 'பாலன் தனதுருவாய் ஏழுல குண்டு' என்று தண்டியார் மேற்கோள் காட்டுவார்.

மொத்த — மிகுதியாக. 'நுண்ணிய நூல் பல கற்பி னும் மற்றுந் தன் உண்மை அறிவே மிகும்' என்னும் திருவள்ளுவர் வாக்கிற் கிணங்க, இரணியன் அகங்காரச் செருக்கும் பிரகலாதனின் பணிவும் பார்க்கிறோம். "தந்தை சொல் மிக்க மந்திரமில்லை' என்கிறான்.

80. பேதை — அறிவில்லாதவன்.

81. பேதுரும் — வருத்த மடையும். 'அறைகுவேன் — கூறுவேன். பிறவியாகிய கடலுக்கு இறைவனாகிய கப்பல் தேவை என்பதைப் பட்டினத்தாரும் வேண்டுவர்.

82. கர்மம் — வினைப்பயன். ஊழ்வினையின் தன்மையை பிரகலாதன் உணர்த்துகிறான். மூவர் — அரி, அயன், மால். முத்தியும், சித்தியும், பத்தியும் தருவது இறைவன் அருட்பண்பே என்கிறான்.

'அவனருளாலே அவன் தாள் வணங்கி' என்பார் மணிவாசகர்.

ஓரெழுத்து — ஓம் அல்லது ஸ்ரீ அல்லதுநா இறைவன் எங்கும் நீக்கமற நிறைந்தவன் என்பதை விளக்கு கிறார். ஒல்கு — சுருங்கு (அ) தளைவாகு. உனில் — உடம் பில்; தசையில்.

83. அனல் விழி — சினத்துடன். சிவந்த விழி;

84. அகத்தினில் குடி கொண்ட அரும் பொருள் இறைவன்.

'உள்ளம் பெருங் கோயில் ஊனுடம்பு ஆலயம்' என்பார் திருமூலர். அமலன் — குற்றமற்றவன். விமலன் — தூய்மையானவன். ஒன்னாது — பகையாது. ஒன்னார் — பகைவர்.

85. இரை செய்ய — கொன்று புசிக்க

86. உடம்பில் சேர்ந்த புண்ணை விரும்பி அறுப்பது போல் பிரகலாதனைக் கொல்ல வேண்டுமென்று இரண் விரும்புகிறான்.

87. காலில் வெற்றிச் சின்னமும், அம்மமிட்டுப் புதுமை யான அரைக்கால் சட்டையு மணிந்து வேல், மழு, சூலம், வாள் ஆகிய கருவிகளை ஏந்தி மல்லர் வருகின்றனர். குஞ்சி — தலைமுடி

88. எல் — சூரியன் ஒளி. ஒழி — போன்ற. சுராந்தகன் —சுரர்களுக்கு எமன் போன்றவன். இராசராசனுக்குக் சோராந்தன்க என்ற பெயருண்டு. அந்தகன் — எமன்

89. சல்லடைக் கண்போல் பிரகலாதனை அங்கம் அங்க மாகக் கொல்லுமாறு பணிக்கிறான்.

'மனிதர்க்கு வயது நூறல்ல தில்லை
ஐம் திரவி லுகத் துயிலினால்
ஒட்டிய இளமையா லோரைந்து நீங்கும்
ஆக்கை இளமையிலைம் மூன்று நீங்கும்
எழுபது போகநீக் கிருப்பன முப்பதே
இன்புறு நாளும் சிலவே யதாஅன்று
துன்புறு நாளும் சிலவே யாதலால்'

என்பார் கபிலர்

துன்மதி — தீய புத்தி

90. சிசுவதை மாபாவம் என லீலாவதி தன் கணவனிடம் முறையிடுகிறாள்.

91. நிந்தனை — பழிப்பது. மார்க்கம் — வழி.

"மக்கள் மெய்தீண்டல் உடற்கின்பம் மற்றவர்
சொற் கேட்டல் இன்பம் செவிக்கு"

என்ற குறளைக் குறிப்பிட்டு அக் கருத்தை வேதம் என்றே ஆசிரியர் மொழிகிறார். தோதகம் — துன்பம்.

92. தம்பி —இரணியாட்சன். தூர் - மறைதல்; அழிந்து போதல்.

93. அங்கம் — உடம்பு.

94. புல்கி — அணைத்து

95. வாழ்நாள் 100 ஆண்டுகள் என எடுத்துக் கொண்டால் 50 ஆண்டுகள் நித்திரையில் கழிகின்றன. மீதி ஆண்டுகளில் 25 ஆண்டுகள் யௌவனப் பருவம். மீதி 25 ஆண்டுகளில் மனைவி மக்கள் குடும்பம். பின் மூப்பு; இறுதியில் மறலியிடம் வசப்படுதல். இந்த மாய வாழ்க்கைக்குத் துன்பப்படலாமா என்கிறான் பிரகலாதன்.

'பாளையாம் தன்மை செத்தும்
பாலனோம் தன்மைசெத்தும்
காளையாம் தன்மை செத்தும்
காமுறும் இளமை செத்தும்'

எனக் குறிப்பிடுவார் குண்டலகேசி நூலார்.

'வாழ்வாவது மாயம் இது மண்ணாவது திண்ணம்'

என்பார் சுந்தரர்.

கூபம் — கிணறு. மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசையால் துன்பங்களையும் இறைவன் கருணைத் திறத்தையும் குறிப்பிடுகிறான். கருவில் இருந்தபோது நாரதர் உபதேசித்த மந்திர மொழியைத் தாய்க்கு நினைவூட்டுகிறான். அவ்வையார் நன்மொழியை நினைவூட்டுகிறான்.

97. சிறுவாண்டை — சிறிது நேரம். வரம் — அன்பு. அகதி — அனாதி.

98. விசனம் — துன்பம். கோதை — லீலாவதி. குலைகுவாள் — வருந்துவாள்.

99. மகனைப் பிரிந்து வாழ முடியாத தன்மையை விவரிக்கிறாள்.

100. சுதன் — மகன். கஞ்சமலர் — தாமரை மலர்

101. சேய் கதறும்போது தாய் வருவதுபோல் லீலாவதி வருந்தும்போது நாரதர் வருகிறார்.

102. உற்றது — உறுதிப் பொருள். போதம் — அறிவு.

103. ஆயிழை — ஆய்ந்தெடுத்த அணிகலன்களையணிந்த பெண்ணே; லீலாவதி.

104. கொம்மை — திரட்சி. பாடலில் இன்பம் என்றும் உரையில் புலம்பிக் கொண்டு என்றும் வருகிறது. இன்பம் என்பதே பொருத்தமாகும். ஏனெனில் நாரதன், பிரகலாதன் எய்தப்போகும் நன்மைகளைக் கூறிச் சென்றான். கொம் — திரட்சி.

105. அற்புத நால்வர் — பிரகலாதன், அனுகலாதன், கிலாதன், சமகிலாதன் என்க. பொது மக்கள் பிரகலாதன் மீது கொண்ட அன்பினை இப்பாடலில் பார்க்கிறோம்.

மன்மதனாலும் எழுத முடியாத அழகு என்கிறார்கள். பிரகலாதனை வைத்த கண் வாங்காமல் நோக்குகிறார்கள் இராமனைப் பிரிந்த அயோத்தி மக்கள் போல், பிரகலாதனைக் கொல்ல மல்லர் அழைத்துப் போகும்போது மக்கள் வேதனை அடைகிறார்கள்.

106. குவவு — குவித்தல் செய்; வணங்கி.

107. மைப் புயல் பேர் — கார்மேனி வண்ணன் பெயர்; திருமால் பெயர். விண்டு — விஷ்ணு

108. அருந்தா நின்றான் — அருந்துகிறான். வேதியன் — நான்முகன். புரந்தரன் — இந்திரன்.

109. 'செங்கனி யுள்ளோன் காயைத் தின்னலாமோ?' கூடாது.

'இனிய உளவாக இன்னாத கூறல்

கனியிருப்பக் காய்கவர்ந் தற்று'

என்ற குறளையொட்டிய கருத்தாகும். துத்தியன் — ஆதிசேடன் மீதிருக்கும் திருமால்.

110. தொல்லுலக முண்டவன் — திருமால் பிரளய காலத்தில் உலகை உண்டு பாலகனாய் ஆலிலையின் மீது வீற்றிருந்தவன்.

111. புரகரி — சிவன். புரந்தரன் — இந்திரன். கரி கரி — கஜேந்திரன் என்னும் யானை.

112. சமந்தகா, சாமந்திக — செவ்வந்தி மலர். குளப — குளவி; காட்டு மல்லிகை. குந்தம்— குத்துக்கோல் அல்லது எறிகோல்.

113. கலம் — பாத்திரம். கடுகினார் — விரைந்தார். மாருதம் — காற்று.

114. பிரகலாதனுக்குத் துன்பம் ஏதும் நிகழவில்லை என்பதை நான்கு பெண்கள், அரசி லீலாவதியிடம் கூறுகின்றனர்.

115. கறுவி — சினந்து. அகம் — மார்பு.

116. மாழை — மாவடு அல்லது அழகு. திருமாலை லீலாவதி வணங்கும் புதுமையைப் பார்க்கிறோம்.

117. நாகப் பாயலில் — பாம்பணையின் மீது

''செந்நாப் புலவன் மொழிந்தேன் நீயுமுன்றன்
பைந்நாகப் பாய்சுருட்டிக் கொள்''

கணிக் கண்ணன் பொருட்டுத் திருமால் பாம்பணையில் உள்ள பாய் சுருட்டும் செய்தி திருமழிசை யாழ்வார் சரித்திரத்தில் பார்க்கிறோம்.

பங்கயன்— நான்முகன். ஐந்துதலை கொண்ட பிரம்மாவின் ஒருதலை கிள்ளிய சிவனுக்கு நேர்ந்த பாவத்தைப் போக்கியவன் விஷ்ணு என்று புராணம் கூறுகிறது.

நான்முகனைத் தம் வயிற்றில் — கமல உந்தியில் விஷ்ணு ஈன்றெடுத்ததாகப் புராணம் கூறும். செய்யக் கமலமாது — திருமகள் வையக மடமாது. நிலமகள் துய்யனே— தூய்மையானவனே. அத்தி மும்மே — யானை யானது பிளிறும்போது.

118. சீதரன் — திருமால்

119. தெவ்வர் — பகைவர். கவ்வு — பிடிக்க.

120. பாசம் — கயிறு

121. வெய்ய — கொடிய

122. மரகதமே — பச்சை நிறத்தவனே; திருமால்.

123. சுரை — மூங்கில் அல்லது ஒரு கொடி.. கெவி — கவி; குகை.

124. பேதைமை — அறிவில்லாமை. கனகன் - இரணியன்.

125. கட்டை — விறகுக் கட்டை. நெய் — எண்ணெய்

126. பொருப்பு — மலை. வடவனல் — வடவாமுகாக்கினி. சலம் — நீர்

127. அவதி — துன்பம்

128. சுடு நெருப்பு — அக்கினித் தேவன். அனந்தன் — பாம்பு. அரவம் — பாம்பு.

129. எண் வகையான அனந்தனையும் குறிப்பிடுகிறார்.

130. இராகு, கேது, சந்திரனைப் பற்றும் புராண நிகழ்ச்சியுடன் ஒப்பிடுகிறார்.

131. சேடன் — ஆதிசேடன்

132. அட்டதிசை — எண் திசை. தீண்டும் — கடிக்கும்.

133. பரகதி — நற்கதி; வீடு.

134. சரசிதர நாயன—ஸ்ரீதரநாயனா. உரகம் — பாம்பு. சரதம் — உண்மை. பாந்தன் — பாம்பு. முண்டகம் — தாமரை. நாதம் — ஒலி.

135. நாதன் — திருமால்

136. கீட்டிசை — கீழ்த்திசை. கோட்டினால் — தந்தத்தால்.

137. பிறவங்கி — பிளிர்ந்து

இரணியன் கோபிப்பான் என்று அஞ்சி, யானை பிரகலாதன் மேல் பாய்ந்தது. ஆயினும் அவற்றால் அவனுக்குத் துன்பம் ஏதும் இல்லை.

138. மூர்க்கமாய் — கோபமாய். மூதண்ட — உலகம்; பழமையான உலகம்.

139. மார்க்கஞ் — நன்மார்க்கர் வழி.

140. பங்கயம் — தாமரை. வெருவாமல் — கோபப் படாமல்.

141. கோடும் — யானைத் தந்தமும். ஈனம் — துன்பம்.

142. ஒல்லை — விரைவு

143. யோசனை—நீட்டலளவை; 10 காதம் கொண்டது.

144. ஐம்பூதம் — நிலம், நீர், நெருப்பு, வான், காற்று.

145. திருமாதுறை மார்பா - ஸ்ரீதேவியை மார்பில் பூண்ட பெருமாளே.

146. ஆலிலை மீதில் பிரளயக் காலத்தில் திருமால் மிதந்ததுபோல் பிரகலாதன் மலைகளிடையே மிதந் தான்.

147. கற்காணம் — கல்லால் ஆன செக்கு. செக்கைக் குறித்த பல கல்வெட்டுகள் கல்காணத்தின் அருகே உள்ளன. செக்கு அல்லது உரல் என்ற சொல்லிலும் காணம் குறிப்பதுண்டு.

கல்காணத்தில் யானையைப் பூட்டி, எள் அல்லது தானியங்களுக்குப் பதில் பிரகலாதனை விட்டு எலும்பு, தசை, குருதி எனத் தனித் தனியாக எடுக்குமாறு மன்னன் பணிக்கிறான்.

148. அரவம் — பாம்பு. தரியலர் — பகைவர்.

149. கல்லாதவன் — அறிவற்றவன்

150. நெகத்தடி — நுகத்தடி. கல்காணம் முரிந்ததால் மல்லர்கள் பயந்து பிரகலாதனை வழிபட முனை கின்றனர்.

151. கனல் — நெருப்பு

152. ஒட்டு — மன உறுதி. பாழ் — வீண்; வெறுமை. மஞ்சு — மேகம். துஞ்ச — சாக. மல்லர்கள்தாம் உய்ந்து போகும் வழியைப் பிரகலாதனிடம் கேட்கின்றனர்,

153. பேணு — காப்பாற்று

154. அடியார் பெருமையைப் பிரகலாதன் கூறுகிறான்.

155. இடித்திட்டார் — சொன்னார்

156. சித்தியாகும் — உறுதியாகும்

157. கணை — அம்பு. எட்டெழுத்து, பன்னிரெண்டெழுத்து. ஐயிரெண்டெழுத்து — அரி ஓம் நாராயண நமா. ஆறெழுத்து - நாராயணா நமோ. உடலெழுத்து — மெய்யெழுத்து.

158. கடை நாள் எழும்பும் புகை — இறுதிக் காலத்தில் எழும்பும் புகை.

159. புகட்கு — புகழுக்கு. கொச்சை - இழிவு. துர்ச்சனன் — கொடியவன். குலத்தைக் கெடுக்க வந்த கோடாரிக்காம்பாகத் தம் மகனை இரணியன் நினைக்கிறான்.

துண்டன் — தொண்டன் அல்லது சிறியவன்.

மனைவியிடம் தனக்கு அவமான மாயிற்றே என்கிறான்.

160. அவதி — துன்பம்

161. பாணம் — அம்பு. பரமாக — கடவுளாகி

162. கெடு விதி — தீவினை

163. கணத்தினில் — சிறிது நேரத்தில். நமன் — இயமன். மாழ்கி — வருந்தி.

164. உன்னியே — சிந்தனை செய்தே

165. சென்னி — தலை

166. புல்லிய — இழிந்த

167. குறித்த காலத்திற்கு முன்னால் ஒருவரை எங்ஙனம் சாகடிப்பது என இயமன் வருந்துகிறான்.

168. சிந்தை நைந்து — மனம் வெதும்பி

169. காலன் தன் கடந்த காலத்தில் பட்ட துன்பங்களை நினைத்துப் பார்க்கிறான். மார்க்கண்டேயன் பொருட்டு சிவன் உதைத்ததை நினைக்கிறான். சந்திர சேகரன் — பிறையைச் சூடிய சிவன். நந்திகேஸ்வரரால் பட்ட துயரை நினைத்துப் பார்க்கிறான்.

170. மறலி — காலன். விறல் — வெற்றி.

171. சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம் உயர்ந்த கதிகள். கடவுளது உலகத்தில் இருத்தல்.

சாயுச்சியம் — வைகுந்தம்.

172. திருமாலை அர்ச்சித்தல்.

173. இரவுரவர், கும்பிபாகா, ரத்தபானா வைதாணி விந்துபானா, சுகாமுகா, கிருமிபோசனா, சிசுவதனா — இவர்கள் காலனுடன் சென்ற கிங்கரர்கள்.

174. கீட்டிசை — கீழ்த் திசை

175. கூற்றுவன் — இயமன். 'கூற்றம் குதித்தலும் கை கூடும் நோற்றலின் ஆற்றல் தலைப்பட்டவர்க்கு' என்பார் வள்ளுவர்.

176. கசிந்திட்டான் — மனமுருகினான்.

177. கொண்டல்— மேகம். பாற்கடலில் அமுது கடைந்த போது மந்தரமலை, வாசுகி பாம்பு இவற்றின் உதவி யுடன் அமிழ்து கடைந்தெடுத்துத் தேவர்க்கு அச்சுதன் வழங்கிய புராணச் செய்தி இங்குக் குறிக்கப்படுகிறது.

178. வாதனை — துன்பம். புல்லென —ஒன்றுமில்லாமல்.

179. நச்சரா — கொடிய பாம்பு

180. தாதை — தந்தை

181. இரணியன் பிரகலாதன் வாக்கு வாதம்

182. உம்பர் — தேவர்

183. நாதருபன் — ஓங்கார வடிவமானவன்

184. வாருதி — வாரிதி; கடல்.

185. ஏக நாதன், ஏக ரூபன் — விஷ்ணு; கடவுள்.

186. 'காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி
ஓது வார்தமை நன்னெறிக் குய்ப்பது
வேதம் நான்கினும் மெய்ப்பொரு ளாவது
நாதன் நாமம் நமச்சி வாயமே'
என்று காழியூர்பெருமான் கசிந்து பாடுவார்.

187. சேடன் — ஆதிசேடன்

இங்குக் காலினால் தூணை உதைக்காமல் கையினால் தட்டுவதாகப் புலவர் குறிப்பிடும் பாங்கு புதுமையாக உள்ளது.

188. அசனி — முடி. இரணியன் கையினால் தட்ட தூணி லிருந்து சிரித்தபடி துளசி மாலை அணிந்த நரசிம்ம மூர்த்தி வெளிப்பட்டார்.

189. போனகமாய் — உண்மையாய்

190. சேயவன் — குழந்தை பிரகலாதன்

191. இலட்சுமி சமேதா — இலட்சுமி நரசிம்மர்

192. கார் — சினம். அஞ்சல் — அபயம்.

193. அகளங்கம் — குற்றமின்மை.

194. நளினம் — தாமரை. நேத்திரம்— கண்கள். நாக சயனா — ஆதிசேடன் மீது துயின்ற பெருமாள்.

195. சீயம் — சிங்கம். ககனம் — ஆகாயம்.

196. உந்தி — வயிறு

197. சொரூபம் — வடிவம்

198. மென்னி — கழுத்து

199. புல்லன் — எளியன்

200. தனிப்பதன் — வைகுந்தம்

201. இரு லக்ஷத்து நூறு ஆண்டுகள் கீர்த்தியுடன் இருந்துஎன் பாதமடைவாய் எனப் பிரகலாதனிடம் நரசிம்ம மூர்த்தி கூறுகிறார்.

202. மெத்த — மிகுந்த

203. திசைமுகன் — நான் முகன்

204. ஏவ — கட்டளையிட. புராதனன் — கடவுள்

205. இமையவர் — தேவர்கள்

206. அமரர் — தேவர்.

பல முனிவர்கள் வந்து பிரகலாதனை வாழ்த்துகிறார்கள். அந்தணர் முனிவர், யோகியர் நான் மறை பாடுகிறார்கள்.

இந்திரன் போன்ற தேவர்கள் மலர் தூவினார்கள். மேனகை, ரம்பை ஊர்வசி நாட்டியமாடுகிறார்கள்.

சிந்து கங்கை சரஸ்வதி இசைபாடுகிறார்கள். பெண்கள் தீபங்கள் ஏந்தி வருகிறார்கள். நாரதர் வீணை இசைக்கிறார். எல்லா மன்னரும் மக்களும் வந்து குவிகிறார்கள்.



# பாடல் முதற் குறிப்பகராதி

# பிழை திருத்தம்

| பக். | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 10 | 2 | எல்லையும் | எல்லைகள் |
| 14 | 24 | அரண்டு | அரணை டு |
| 16 | 1 | கொடுயர் | கோடுயர் |
| 22 | 14 | மீட்டார் | பட்டார் |
| 24 | 23 | வீரவாணணரலூர் | வீரவான்அரைசரு |
| 25 | 2 | பொற்கோவரைரு | பெற்கோவனாரு |
| 25 | 5 | தேருணி | தேளுணி |
| 5 | 11 | நாடான | நாடாள |
| 25 | 18 | கட்டி | கங்க |
| 25 | 20 | 925லும் | 925இல் |
| 26 | 26 | மூலப்பள்ளி | மூலப்பள்ளியில் |
| 29 | 2 | வட்டிகம் | லட்டிகம் |
| 35 | 21 | 77இல் | 1577இல் |
| 36 | 29 | மாதியாகும் | சமாதியாகும் |
| 36 | 30 | அடைந்தசார் | அடைந்தார் |
| 41 | 4 | வராலாற்றுக்கு | வரலாற்றுக்கு |
| 42 | 6 | பட்டன | பயன்பட்டன |
| 42 | 7 | பயன் | (சொல் தேவையில்லை) |
| 44 | 8 | தமிழ் | தமிழி |
| 45 | 1 | ஏதும்மற்ற | ஏது மற்ற |
| 45 | 6 | புறர | புணர |

| | | | |
|---|---|---|---|
| 47 | 24 | தொலுங்கிலும் | தெலுங்கிலும் |
| 51 | 15 | மண்டவீரர் | மண்டலீகர் |
| 21 | 26 | திருவிடமருதூத் | திருவிடைமருதூர் |
| 53 | 1 | மரண்டஹள்ளி | மாறண்டஹள்ளி |
| 53 | 13 | கொண்டார் | கொண்டார்கள் |
| 53 | 13 | பண்டபள்ளி | பண்டஹள்ளி |
| 54 | 2 | தேன்கணிகோட்டை | தேன்கனிக் கோட்டை |
| 54 | 14 | போட்டையாகும் | பேட்டையாகும் |
| 55 | 24 | பொருமாள் | பெருமாள் |
| 61 | 17 | பாஷ்ஷா | பாதுஷா |
| 61 | 30 | தொண்றியந்தார் | தொண்டையந்தார் |
| 67 | 15 | வேள் நங்கக்காரன் ஆறு அருகில் | (தேவையில்லை) |
| 69 | 13 | வந்தது | வந்தன. |
| 85 | 9 | கொண்டிருக்கிறார் | கொண்டிருக்கிறார்கள் |
| 85 | 22 | பிரியும்முன் | பிரியுமுன் |
| 86 | 12 | வீற்றிருக்கிறார் | வீற்றிருக்கிறார்கள் |
| 86 | 18 | தசரதனிடம் வரம் | தசரதனிடம் கைகேயி வரம் |
| 87 | 16 | சர்வ | சரீர |
| 88 | 12 | சிதையருகே | சீதையருகே |
| 88 | 21 | சந்திந்தல் | சந்தித்தல் |
| 89 | 23 | நாகேஸ்வர | நாகாஸ்திர |
| 93 | 11 | சிவன்கோவிலும் | சிவன்கோயில் |
| 93 | 21 | சமணக்கோயிலும் | சமணக்கோயில் |
| 95 | 2 | விஜயநகர | விஜயநகர |

| | | | |
|---|---|---|---|
| 107 | 13 | அதியமான் | அதியன் |
| 121 | | மொய் வேற்கையர் என்ற பாடல் மீண்டும் 133ஆம் பக்கத்திலும் அச்சிடப்பட்டு விட்டது | |
| 134 | | புறநானூறு 87முதல் 90வரை அதியமானை ஔவையார் பாடியது என்ற குறிப்பு விடுபட்டுள்ளது | |
| 166 | 7 | என் மகனிடம் | என மகனிடம் |
| 166 | 71 | என் மகன் | என மகன் |
| 173 | 1 | தொலுங்கானா | தெலுங்கானா |
| 176 | 22 | மனுதினம் | மனதினில் |
| 177 | 4 | அடியனின் | அடியினை |
| 177 | 6 | பிரகதாலன் | பிரகலாதன் |
| 177 | 11 | மில்லாள் | மில்லான் |
| 178 | 18 | அத்தி | அதிதி |
| 180 | 19 | யினை | யிணை |
| 181 | 10 | மணிவெல | மணிவெழ |
| 184 | 2 | சொல்லரி | சொல்லாய் |
| 184 | 13 | வருணாபுரி | வருணமாபுரி |
| 185 | 1 | இராணிய | இரணிய |
| 185 | 2 | விச்சித்திர | விசித்திர |
| 185 | 10 | கொண்ட | கொண்டல் |
| 186 | 3 | இரணியர் | இரணிய |
| 186 | 10 | அசிர்வதிக்க | ஆசிர்வதிக்க |
| 187 | 21 | வாணவர் | வானவர் |
| 07 | 6 | தரவட்டம் | தாவடம் |

| | | | |
|---|---|---|---|
| 207 | 14 | நஷடம் | நஷ்டம் |
| 220 | 11 | தனி | தலை |
| 220 | 12 | யாதுவரங் | மாது வரங் |
| 220 | 20 | மயிர் | மயில் |
| 222 | 11 | வண்ண | வண்ணம் |
| 225 | 4 | றோன்பதில் | றான்பதில் |
| 225 | 7 | வெள்ளிகூந | வெள்ளிகூற |
| 226 | 3 | அழைக்கிறாரே | அழைக்கிறாரோ |
| 228 | 10 | வென்றான் | வென்றென் |
| 229 | 14 | தனியா | தணியா |
| 231 | 1 | வாய்ரோம்பி | வாயனெம்பி |
| 235 | 2 | பன்றி | பண்ணி |
| 241 | 16 | மூட்டா | முட்டி |
| 246 | 13 | னாரோ | னாரே |
| 247 | 20 | தாங்குவோனா | தாங்குவேனா |
| 248 | 14 | நெஞ்சே | நெஞ்சை |
| 249 | 15 | போலப் | போல் |
| 249 | 15 | உத்தமனைப் | உத்தமன் |
| 250 | 4 | கவலை | கபிலை |
| 250 | 5 | மாயவனாற | மாயவனார் |
| 250 | 8 | ஆயுநாரத | ஆய்ந்தநாரதா |
| 253 | 9 | சகத் | சகச் |
| 257 | 12 | நெஞ்சை | நஞ்சை |
| 259 | 26 | கடிகி | கடுகி |
| 261 | 14 | அருஅருளாலே | அரியருளாலே |
| 262 | 1 | மழையோன் | மாழையோன் |

| | | | |
|---|---|---|---|
| 226 | 4 | களேற்று | ளேத்து |
| 262 | 14 | சேயினை | சேயனை |
| 262 | 17 | காளி | காலி |
| 262 | 21 | முகிந்தா | முகுந்தா |
| 262 | 26 | அங்கருணை | சங்காரம் |
| 274 | 17 | சனாற்றன்லோலா | சனார்த்தனலோலா |
| 274 | 19 | செகனாற்றனே | செகநாதனே |
| 314 | 8 | காணருமையோ | காணலருமையோ |
| 317 | 20 | யஞ்சுவைறு | யஞ்சுவையே |
| 317 | 21 | கெத்தனையான | கேத்தினேன்யான் |
| 322 | 24 | யிருந்நூணி | யிருந்தாணி |
| 325 | 23 | செமயுஞ் | செய்யுஞ் |
| 326 | 3 | (இருசீர் மாறிவந்துள்ளது) | |
| 327 | 11 | வித்திவித்திதனா | வித்தியாதரனார் |
| 328 | 3 | ளேத்திட | ளேந்திட |
| 328 | 4 | மாசியர் | மாகத்தார் |
| 328 | 7 | பொரியுடன் | பொறியுடன் |
| 33ↄ | 28 | மச்சாவதாரமெனே | மச்சாதாவதார மானவனே |
| 346 | 22 | ஆரம்பிக்கும் | (தேவையில்லை) |
| 445 | 15 | நவில் | நவில |
| 347 | 11 | என்றெழுந்தனன் | எற்றெழுந்தன் |
| 356 | 24 | நீக்கமந | நீக்கமற |
| 357 | 10 | இரண் | இரணியன் |
| 357 | 11 | அம்மமிட்டு | (தேவையில்லை) |
| 357 | 21 | கேரளாந்தன்க | கேரளாந்தகன் |
| 357 | 21 | ஐம்திரவி | ஐம்பதிரவி |
| 358 | 19 | பாலனோம் | பாலனாம் |
| 361 | 4 | அகம் | ஆகம் |
| 362 | 18 | பாந்தன் | பாந்தன் |
| 363 | 3 | மார்க்கஞ் | மார்க்கம் |
| 366 | 22 | முடி | இடி |
| 367 | 4 | கார் | கார்க்கதுவ |
| 367 | 13 | தனிப்பதன் | தனிப்பதம் |
| 368 | 5 | தூவினார்கள் | தூவுகிறார்கள் |



# நன்கொடையாளர்

இந்த நூல் அச்சேறத் தருமபுரி மாவட்ட வளர்ச்சிக் கழகம் ஐந்தாயிரம் ரூபாய் பொருளுதவி புரிந்தது. தவிர நூல் வெளிவர நன்கொடை வழங்கிய, வழங்க விருப்பம் தெரிவித்த பெரியோர்கள்:

| | பெயர் | | ஊர் |
|---|---|---|---|
| திரு | சுப்பராயன் | வழக்கறிஞர் | தருமபுரி |
| ,, | இராசேந்திரன் | ,, | ,, |
| ,, | மணிவண்ணன் | விஜய வித்யாலயா | ,, |
| ,, | ஜே.பி.பாலசுப்பிரமணியம் | மேட்ச் கம்பெனி | ,, |
| ,, | பிரீமியர் | மேட்ச் கம்பெனி | ,, |
| ,, | பிரபாகர் | மேட்ச் கம்பெனி | ,, |
| ,, | புஷ்பாகரன் | | ,, |
| ,, | முனுசாமி | மண்ணெண்ணெய் டீலர் | ,, |
| ,, | மணி மலர் | மங்கை நியூஸ் ஏஜன்சிஸ் | ,, |
| | மகேஸ்வரி ஸ்டோர்ஸ் | | ,, |
| திரு | டி. கே. ஸ்ரீராமுலு | பாத்திர வியாபாரம் | ,, |
| ,, | ஜி. பெரியசாமி | ஒப்பந்தக்காரர் | ,, |
| ,, | ப. பாஸ்கரன் | | மதிகோன்பாளையம் |
| ,, | குலோத்துங்கன் | (உதவி நிர்வாக அலுவலர் டி. டி. டி. சி. தருமபுரி) | அரூர் |
| ,, | அன்புமணி | (ஸ்டேட்பாங்க் தருமபுரி) | திருச்செங்கோடு |
| ,, | வேணுகோபால் | வைத்தியர் | காவேரிப் பட்டணம் |
| ,, | கோ. கோபால் | மின்வாரியம் | பாளையம் புதூர் |
| ,, | நஞ்சே கவுடு | வழக்கறிஞர் | ஹோசூர் |
| ,, | ச. சம்பத் | ஸ்ரீராமபுரம் | பெங்களூர் |
| ,, | தி. பிச்சாண்டி | ,, | ,, |
| ,, | கோவிந்தராஜ் | வியாபாரம் | தருமபுரி |
| | பழனிசாமி | ஸ்டுடியோ | ,, |
| | இரமேஷ் | | ,, |
| | எம்.கே. இராஜமாணிக்கம் | ஆசிரியர் | ,, |

| | | |
|---|---|---|
| திரு பெ. வெங்கடேசன் | தமிழாசிரியர் | தருமபுரி |
| ,, அ. சாந்தலிங்கம் | ஆசிரியர் | ,, |
| ,, த. மகாலிங்கம் | தமிழாசிரியர் | ,, |
| ,, பெரியசாமி. எம். சி. | | ,, |
| ,, இராமச் சந்திரன் | நிருபர், இந்தியன் எக்ஸ்பிரஸ், | ஹோசூர் |
| நேரு இளைஞர் மன்றம் | | பெரியாம்பட்டி |
| திரு மு. பரமசிவம் | ஆசிரியர் | இலளிகம் |
| ,, மு. கணேசன் | ஆசிரியர் | தொப்பூர் |
| ,, கோ. வி. அரங்கநாதன் | ஆசிரியர் | பாலவாடி |
| ,, மா. நறுமணம் | ஆசிரியர் | பாலவாடி. |
| ,, வி. அரங்கநாதன் | ஆசிரியர் | த. கொல்லப்பட்டி |
| ,, இரா. காளியப்பன் | ,, | பாலக்கோடு |
| ,, ந. நாராயணராவ் | மின்சாரவாரியம் | பாலக்கோடு |
| ,, இரா. வேட்ராயன் | ஆசிரியர் | பாப்பாரப்பட்டி |
| ,, த. கோபால் | ஆசிரியர் | ,, |
| ,, சுதா ஆதித்தன் | ,, | ,, |
| ,, நாகராசன் | ,, | ,, |
| ,, புது. போ. வெங்கட்ராமன் | ,, | புதுரெட்டியூர் |
| ,, டி. கோ. கோவிந்தன் | ,, | திருமலைவாடி |
| ,, பி.இராமசாமி | ,, | பூச்செட்டி ஹள்ளி |
| ,, பெ. பெருமாள் | ,, | தம்மணம்பட்டி |
| ,, இரா. துரைசாமி | ,, | நல்லாம்பட்டி |
| ,, ப. துரைசாமி | ,, | காவேரிப்பட்டணம் |
| ,, விழிவேந்தன் | வழக்கறிஞர் | கிருஷ்ணகிரி |
| ,, அ. கண்ணையா | புலவர் | திருப்பத்தூர் |
| ,, ஆர். எஸ். சிங் | | ஹோசூர் |
| திருமதி கலாவதி முனுசாமி | | சென்னை |
| திரு எஸ். இராஜாங்கம். | முகலிவாக்கம், | சென்னை |
| ,, கோ. ஆதிகேசவ உடையார் | எருமைவெட்டி | செய்யாறு |

| | | | |
|---|---|---|---|
| திருமதி. ஆர். கண்ணம்பாள் | | | செய்யாறு |
| ,, | ஏ. கே. தங்கவேலனார் | தமிழாசிரியர் | தருமபுரி |
| ,, | ஏ. பி. இராமச்சந்திரன் | ,, | தருமபுரி |
| ,, | கே. சி. வீரமணி | டவுன்பிரஸ் | தருமபுரி |
| ,, | கே. குமரவேல் | ஆசிரியர் | பாளையம்புதூர் |
| ,, | எஸ். சுந்தரம் | ,, | பென்னாகரம் |
| ,, | இரா. சுப்ரமணியன் | ,, | சந்தூர |
| ,, | மு. மாணிக்கம் | ,, | பாலவாடி |
| ,, | செ. கோவிந்தராசு | ,, | பாப்பாரப்பட்டி |
| ,, | தேவராயன் | வைத்தியர் | கரடிக்குன்று |
| ,, | தேவ பேரின்பம் | | ,, |
| ,, | எம். கே. சுப்ரமணியபாரதி | | மாக்கனூர் |
| ,, | க. பாலகிருஷ்ணன் | தமிழாசிரியர் | பாலக்கோடு |
| ,, | மா. கணேசன் | ,, | பாப்பாரப்பட்டி |
| ,, | ஆர். எல். இராமன் | ஆசிரியர் | தருமபுரி |
| ,, | எஸ். லோகநாதன் | கொத்தனார் | சென்னை |
| திருமதி பூமாதுஅம்மாள் | | விலாரிப்பட்டு | ,, |
| திரு. தே. வி. சண்முகம் | | தொழிலதிபர் | காவேரிப்பட்டணம் |
| ,, | தருமராசன் | நிலவளவங்கி | தருமபுரி |
| ,, | டி. இராமகிருஷ்ணன் | நிருபர் | தருமபுரி |





# நூலாசிரியர்

ச. கிருஷ்ணமூர்த்தி
எம். ஏ., (தமிழ்),
எம். ஏ., (வர),
பி. எட்.,

பிறப்பு : 4-4-1949

ஊர் : வட ஆர்க்காடு மாவட்டம் செய்யாறு வட்டம், அனுக்காவூர் அடுத்த விலாரிப்பட்டு.

பெற்றோர் : சடைசாமி—பூமாது அம்மாள்.

கல்வி : சென்னை மாநகராட்சிப் பள்ளியிலும் கல்லூரியிலும் படித்தார். தமிழிலும் வரலாற்றிலும் முதுகலைப் பட்டம் பெற்றுள்ளார். தொல்பொருள் துறையில் ஓராண்டு பட்ட மேற்படிப்புப் பட்டயம் பெற்றுள்ளார்.

இவர் தஞ்சையில் பணியாற்றியபோது, 1000க்கும் மேற்பட்ட ஓலைச் சுவடிகளையும் கையெழுத்துப் பிரதிகளையும் தேடித் திரட்டியுள்ளார்.

தொல்லியல், வரலாறு தொடர்பாகப் பல ஆய்வுக் கட்டுரைகள் தமிழிலும் ஆங்கிலத்திலும் இவர் எழுதி வெளிப்படுத்தியுள்ளார்.

கல்லூரிகளிலும் கோயில் விழாக்களிலும் இவர் சொற்பொழிவாற்றி வருகிறார்.

இப்பொழுது தருமபுரி அருங்காட்சியகத்தில் பணி புரிந்தவாறு, பழங்காலப் பொருள்கள் பலவற்றைக் கண்டுபிடித்துள்ளார். இவரது அயரா உழைப்பும் ஊக்கமும் அரிய புகழைத் தருவனவாகும்.